உ

கணபதி துணை.

# காஞ்சிப்புராணம்.

இதன்முதற்காண்டம்
திருக்கைலாசபரம்பரைத்திருவாவடுதுறை ஆதீனத்துத்
திராவிடமகாபாஷ்யகர்த்தராகிய
**சிவஞானயோகிகளருளிச்செய்தது.**

இரண்டாங்காண்டம்
ஷை சிவஞானயோகிகளுடையமாணாக்கருள்ளேசிறந்த
**கச்சியப்பமுனிவரருளிச்செய்தது.**

இவற்றுள் ஷை ஆதீனத்து
ஸ்ரீ சுப்பிரமணியதேசிகசுவாமிகள்
கட்டளையிட்டருளியபடி
ஷை ஆதீனத்து வித்துவானாகிய
திரிசிரபுரம். மீனாக்ஷிசுந்தரம்பிள்ளையவர்கள்
பதிப்பித்தமுற்பாகத்தோடு பிற்பாகமும்
சைவசமயப்பிரசங்கப்பிள்ளையென்னுந்திருநாமம்பெற்ற
இராமநாதபுரம். இராமசுவாமிப்பிள்ளையால்
பலபிரதிரூபங்களைக்கொண்டுபரிசோதித்து
தேவகோட்டை-மீ-ராம-லெ.
இலட்சுமணச்செட்டியார்சகாயம்பெற்று
புங்கத்தூர். கந்தசுவாமிமுதலியார் அவர்களால்
சென்னபட்டணம்:
பா. சோமையரவர்களது
ஆதிகலாநிதி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

---

வெகுதானியஹு புரட்டாசி மீ.



இதன்விலை-ரூ. ௨.

3-50

உ

சிவமயம்.

# திருப்புப்பாயிரம்.

மதுரை ஹைஸ்கூல் உபாத்தியாயர் ம.ா. ா. ஸ்ரீ,

சபாபதிமுதலியார்

இயற்றியது.

## நேரிசை ஆசிரியப்பா.

சீர்வளர் கற்பகத் தார்தரு நிழற்க
ணரசுவீற் றிருக்குஞ சுரபதி முன்னாட்
டொருவலிச் சூர்செ யுறுகணுக் கஞ்சிப்
புடவியிற் படர்ந்தவ் விடர்தபுத் திடுவான்
பூதியார் மேனியோ ராதிநற் கழலிணை
யகத்திடை நிறுவி நிகழ்த்திடு பூசனைக்
கன்புறத் திருத்தி யின்புறச் செய்தொளிர்
நந்தன வனமென முந்துறு பெருமைத்
தெய்வச் சோழத் திருநா டதனிற்
குடங்கையி னெடும்புன லடங்கவு மொடுங்க
வெழுகடல் குடித்த விழுமிய தவவலி
யுத்தம முனிவரன் வைத்திடு கமண்டலத்
தகங்குதி கொண்டு நகங்களிற் சிறந்த
சையமென் றுரைக்குஞ் செய்யமால் வரையிடைத்
தவழ்தர வூற்று நவமணி முதலாப்
பல்பொருள் வாரிச் செல்கதி மிகுத்துப்
பொன்னிணைக் கொழித்து மன்னுறு பெருவளம்
பூவிரிந் தோங்கப் பூவிரிந் தோங்கிய
காவிரி மருங்கேய் காவிரி யாகும்
வருபவங் கழிக்கும் பெருநதித் தென்பாற்
பாசொளிக் கதிர்த்திரள் வீசுறக் கவினி
மரகதந் தழைத்தாங் குரனுறு பொதும்பர்
நாற்றிசை கஞலி மேற்றிசை யெழீஇ
மேனுல கதனைக் கீழுல காக்கித்
திசாதிசை பணைத்துச் சேட்புல முட்படுத்
தகல்விசும் பகலா வவிருடுக் கணமெனப்
பன்மலர் பொதுளிப் பொன்மலர் தாதுவின்
மண்ணுல கதனைப் பொன்னுல காக்கி
வரையுறு சிகர நிரையெனத் தோன்றுங்
குடப்பல வின்கனி யிடைக்கசிந் தூறத்
தேன்மழை பொழிதரக் கானிவர்ந் தோங்கி

யிழுமெனு மொலியி னொழுகுமத் தேற
லருவிகள் குழுமிப் பெருகுறத் தலைமடுத்
தாயிரங் காலிற் பாய்சுர நதியிற்
சுற்றுபு வளைந்து சூழ்தரு தோற்ற
மருதமென் றுரைக்கு மொருதிரு மங்கை
யணிதரு மரகத மணிமே கலையாம்
பாவடி புகழ்வள ராவடு தண்டுறைத்
தாமரைச் செல்வி மாமணிக் கூத்தயர்
பெரும்பதி யுலகிற் கரும்பே றென்னச்
சச்சிதா நந்தத் தனிமுத லுனே
யிச்சையின் மானுடச் சட்டையி னியைவுற்
றவணெழுந் தருளி யருணோக் காதியாஞ்
சிவதீக் கையினாற் றிரிமலந் தேய்த்திட்
டூனக் கண்ணணி னொளியளப் பரிய
ஞானக் கண்ணினை நன்குற நல்கிப்
புசித்திடு போகப் பசுக்களும் பதியுமாந்
தம்மையுந் தன்னையுந் தயங்குறக் காட்டி
யத்துவிதா னந்த முத்தியைச் சார
வானமகோ டிகளுக் கருளிவீற் றிருக்கு
நங்குரு ராய னமச்சிவா யப்பெயர்த்
தாயவன் மாகயி லாயப ரம்பரை
வந்தெழுந் தருளிய தந்திரத் தலைவன்
சான்முறை தோன்று மேன்முறை ஞான
லெந் துயர்தரு வேலப்ப தேசிக
னருடரு ஞானப் பொருள்பெறும் புனிதனை
முதனூ றந்த முதல்வனே யனையா
னுவர்க்கடல் குடித்த தவத்தொரு முனியுங
குறுமுனிப் பெயர்கொள வுறுசுவை பொழுகு
தென்மொழி வடமொழி யெனுமிரு கடலு 5
தான்பரு குற்ற வான்பட ரிசையோ
னிலக்கண விலக்கியத் தெழுவாம் பிசைதோன
றிப்பிய வாகமஞ் செப்பிய பொருளைக்
கைகண் டுணர்ந்த மெய்கண்ட வள்ளல்செய
சிவஞான போத மெனுந்திரு நூலிற்
குவமையின் மாயா டியஞ்செய் துயிர்க
ளலகிலின் பார்தர வளித்தரு பூதிப்
பெருவாழ் வதனுக் கொருமுத லாகிய
சிவஞான யோகி சீர்பெற வியற்றிய
வற்புதக் காதைசேர் முற்படு காண்டமு
மனையவன் கழலிணை புனைமா ணாக்க
ரீரறு வோருள் வீறுறு புலமை

யான்றிடு கச்சி யப்பமா முனிவ
னியம்பிடு மிரண்டாங் காண்டமு மியைந்த
பவநோய் துடைக்குஞ் சிவமான் மியமெனும்
பொருவறு காஞ்சிப் புராணத்தினை நன்
கெழுதா வெழுத்தி லிடுகென வம்மர
பீரொட் டாவது சீரொட் டியவருட
குருமணி யாகக் குலவிடும் வள்ளல்
பீடார் ஞானப் பேரர சாள்வோ
னவஞா னந்தவிர் சிவஞான சித்திக்
கரிதுணர் பொழிப்புரை யமைதிக் கேற்ப
வெளிதுணர் பதவுரை யியற்றிடு நிபுண
னொப்புயர் வில்லாச் சுப்பிர மணிய
தேசிகோத் தமனற் றிருவுளம் புரிய
வத்திரு வுளப்பாங் கசங்கொளீஇச் செய்ய
பாவல ரேறெனப் படர்பெருங் கல்வி
தானுட்சி யுற்ற மீனாட்சி சுந்தர
நாவலன் முற்கூ றுவலி னுய்ந்திட்
டசைடு விதந்தனை னுகவவ வாறே
பிறகூ றுய்ந்து பெட்புறப் பதிப்பிந்
தொன்றுய்த் திரட்டி யுலகுளங் களிப்ப
வந்திரு நூலை யளகையிற் சிறந்த
யணிதேவ கோட்டை மணிமா நகரின்
மலருறு திருவளம் புல்லுறு பொறபினன
சிவபத்தி யடியார் பத்தியிற் சிறந்தோ
னிலக்ஷு மணனெனச் சொலப்பெறு மிசையோன்
விருப்பந் துதவுற வொருப்பட் டளித்தனன்
போற்றிடு செல்வம் பொழிவளம் பதியா
நவிறரு மிராம நாத புரத்தினிற்
கங்கா குலமொளி பொங்குறத் தவத்தாற்
சாமி நாதவே டந்தருள் பால
னிலக்கண விலக்கிய மென்று மிரண் டாயு
சைவசித் தாந்தத் தெய்வநன் னூலைக்
கற்றுணர் வமையப் பெற்றுள பெரியோ
ரீனசம் பந்தத் தெழுபவங் கழிக்க
ஞானசம் பந்த னெனாநவின் றமைக்குந்
திட்சா நாமப் புட்சியிற் பொலிந்தோ
னயிட்டிகப் பிரம சரியநன் னிலையி
னொழுக்கத் தொழுகி விழுப்பத் துயர்ந்தோ
னிராமசா மிப்பெய ரெய்திய
புண்ணிய சரித நண்ணிய லோனே.

உ

சிவமயம்.

திருகைலாசபரம்பரைப் பிள்ளைத் திருநாம்ந சைவபானுவாகிய

# நமச்சிவாயமூர்த்திகள் மரபில்

வருகைக்கமபெற்ற

# சிவஞான யோகிகள் வரலாறு.

---

கயிலாயபரம்பரையிற்சிவஞானபோதநெறிகாட்டும்வெண்ணெய்
பயில்வாய்மைமெய்கண்டான்சந்ததிக்கோர்மெய்ஞ்ஞானபானுவாகிக்
குயிலாரும்பொழிற்றிருவாவடுதுறைவாழ்குருநமச்சிவாயதேவன்
சயிலாதிமரபுடையோன்றிருமரபுநீடூழிதழைகமாதோ.

திருக்கைலாசமலையிலே, அருள்வடிவாகிய கல்லாலமரநிழலிலே, தக்ஷிணாமூர்த்தியாய் எழுந்தருளியிருந்த ஸ்ரீகண்டபரமசிவன்பால், ஆகமங்களையெல்லாம் கேட்டருளிய நந்திபெருமான் சிகண்டமுதல்வரை வணங்கி நின்று, காமிகமுதலிய சைவாகமங்களின் ஞானபாதப்பொருளின் இகலறுத்து அவற்றினபொருளுண்மை போதித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, அம்முதல்வா நன்றேவினாயினாய், அவ்வுண்மை ரௌரவாகமத்துட் பன்னிருசூத்திரத்தாற் கூறப்பட்டது சிவஞானபோதமென்பதோர்படலம், அதுகேட்டவர்க்கு எல்லா ஆகமப்பொருள்களும் மாறுகோளின்றி விளங்குமெனக்கூறி, அச்சிவஞானபோதத்தை நந்திபெருமானுக்கு அருளிச்செய்தார். நந்திபெருமானும் அதுகேட்டதுணையானே எல்லா ஐயமுநீங்கி, மெய்ப்பொருள் தெளிந்து, பின் அதனைத் தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த சநற்குமார முனிவருக்கு அருளிச்செய்தார். அவர் தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த சத்தியஞானதரிசனிகளுக்கு அருளிச்செய்தார். அவர்தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த பரஞ்சோதி முனிவருக்கு அருளிச் செய்தார்.

பரஞ்சோதிமகாமுனிவர் திருக்கைலாசமலையினின்று நீங்கித், தமிழ்நாடு செய்த தவத்தானே, திருவெண்ணெய்நல்லூரில், வேளாளர்குலத்தில், அவதரித்தருளி, இரண்டு பிராயத்திற்றானே, மெய்யுணர்வின்முற்றுப் பேறுடையராய் எழுந்தருளியிருந்த சுவேதவனப்பெருமாளென்னும் பிள்ளைத்திருநாமமுடைய மெய்கண்டதேவர்பால் வந்து, சிவஞானபோதத்தைநல்கி, இதனை ஈண்டுள்ளோர் உணர்ந்துய்தற்பொருட்டு, மொழிபெயர்த்துப்பொழிப்புரைக்கவென்றருளிப், பொழிப்புரைக்குமாறும் சத்தியஞான தரிசனிகள்பால், தாங்கேட்டவாறே வகுத்தருளிச்செய்து நீங்கினார்.

மெய்கண்டதேவரும் அவ்வாறே அச்சிவஞானபோதத்தைத் தமிழின் மொழிபெயர்த்து, * வார்த்திகப்பொழிப்புஞ் செய்தருளித், தம்முடைய

---

* வார்த்திகமெனினும் பொழிப்பெனினும் காண்டிகையெனினும் ஒக்கும்.

மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்தவரும், திருத்துறையூரிலே அவதரித்த ருளிய ஆதிசைவரும், சகலாகமபண்டிதரென்னுங் காரணப்பெயருடைய வருமாகிய அருணந்திசிவாசாரியருக்கு அளித்தருளினார்.

அருணந்திசிவாசாரியர் முதனூலாகிய சிவஞானபோதத்திற்கு வழிநூலாகச் சிவஞானசித்தியாரும், இருபாவிருபஃதும் ஆகிய இரண்டு சைவசித்தாந்தசாத்திரங்களை அருளிச்செய்து, அவைகளையுஞ் சிவஞானபோதத்தையும் திருப்பெண்ணாகடத்திலே பிராமணகுலத்திலே அவதரித்தருளிய மறைஞானசம்பந்த சிவாசாரியருக்கு உபதேசித்தருளினார்.

மெய்கண்டதேவர் மாணாக்கருள்ளே திருவதிகை மனவாசகங்கடந்தார் உண்மைவிளக்கமென்னுஞ் சைவசித்தாந்தசாத்திரத்தை இயற்றியருளினார்.

மேற்கூறிய மறைஞானசம்பந்தசிவாசாரியர் சிதம்பரத்தைச்சார்ந்த திருக்களாஞ்சேரியில், சிருங்காரவனத்தில், பிரமபுரீசுரர் சந்நிதியில் எழுந்தருளியிருந்துகொண்டு, தில்லைவாழந்தணர்களுள் ஒருவராகிய உமாபதிசிவாசாரியருக்கு உபதேசித்தருளினார்.

உமாபதிசிவாசாரியர் சிதம்பரத்தைச்சார்ந்த கொற்றவன்குடியிலே எழுந்தருளியிருந்துகொண்டு, வடமொழியிலே பௌஷ்கராகமத்துக்கு வியாக்கியானத்தையும், தமிழிலே புடைநூலாகிய சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறிவிளக்கம், சங்கற்பநிராகரணம் என்னும் எட்டுச் சைவசித்தாந்த சாத்திரங்களையும், கோயிற்புராணம், திருத்தொண்டர் புராணசாரம், திருமுறைகண்டபுராணம், சேக்கிழார்நாயனார்புராணம், திருப்பதிக்கோவை, திருப்பதிகக்கோவை, என்னும் பிரபந்தங்கள்முதலியவற்றையும் செய்தருளினார். சங்கற்பநிராகரணம் செய்தருளியகாலம் சாலிவாகனசகாப்தம். (கூஉ௱௩௰௫)

உமாபதிசிவாசாரியர் அருணமச்சிவாயதேசிகர்முதலிய மாணாக்கர்களுக்கு உபதேசித்தருளினார். அன்றியும் சபாநாயகர் விடுத்தருளிய "அடியார்க் கெளியன்சிற் றம்பலவன் கொற்றங், குடியாற் கெழுதியகைச் சீட்டுபடியின்மிசைப், பெற்றான்சாம் பானுக்குப்பேதமறத் தீக்கைசெய்து, முத்தி கொடுக்க முறை." என்னுந் திருமுகத்தைப் பெற்றுக்கொண்டு, பெற்றான் சாம்பானுக்கு உடனே முத்தி கொடுத்தருளினார். பின்பு அப்பெற்றான் சாம்பானுடைய மனைவியும் அரசன்முதலாயினோருங் காண அதனுண்மையை வெளிப்படுத்தி அவர்கள் ஐயத்தை ஒழித்தற்பொருட்டுத், தம்முடைய ஆன்மார்த்தபூசை கொண்டருளிய சிவபிரான் ஆடியருளிய தீர்த்தத்தினால் வளர்ந்து பரிபக்குவமடைந்துள்ள முள்ளிச்செடிக்கு முத்தி கொடுத்தருளினார்.

சிதம்பரமான்மியத்தின் வழித்தாகஅருளிச் செய்யப்பட்ட கோயிற்புராணம் அரங்கேறறப்படாது பேடகத்துள் இருந்தபொழுது, சபாநாயகர்தில்லைவாழந்தணர்களுக்குச் சொப்பனத்திலே தோன்றி "நாம் கொற்றவன்

குடி உமாபதியுடைய பேடகத்துள் இருக்கின்றேம் " என்று திருவாய்மல ரந்தருளினர். அதனைத்தில்லைவாழந்தணர்கள் உமாபதிசிவாசாரியருக்கு வி ண்ணப்பஞ்செய்ய, அவர் கோயிற்புராணத்தைச் சபாநாயகர் சந்நிதியில் விரைவில் அரங்கேற்றியருளினர்.

[திருக்கடவூரிலே அவதரித்தருளிய உய்யவந்ததேவநாயனர் பெரும்பற் றப்புலியூரில் எழுந்தருளியிருந்தபொழுது, தம்முடைய ஆசாரியராகிய தி ருவியலூர் ஆளவந்ததேவநாயனர் தமக்கருளிச்செய்த திருவுந்தியாரென் னுஞ் சைவசித்தாந்த சாத்திரத்தைவிரித்துத், தம்மையடைந்த ஒரதிபரிபக் குவர்பொருட்டு ஒருசைவசித்தாந்த சாத்திரத்தை அருளிச்செய்து, அதன் பெருமையை உலகத்துள்ளாரும் உணர்ந்துய்யுமாறு திருவுளங்கொண்டு, திருவம்பலத்திறசென்று வணங்கி, திருக்களிற்றுப்படியிலே அந்நூலை வை க்குமளவில், அத்திருக்களிற்றுக்கை நிமிர்ந்து அதனை வாங்கிப் பரமகருண நிதியாகிய நடராஜரது திருவடியிலே கொடுத்தமையால், அத்திருப்படை வீட்டினுள்ள எழுநூறு திருமடத்துமுதலிகளும் தில்லைவாழந்தணர் மூவா யிரவரும் மாகேசுரர நாற்பத்தெண்ணாயிரவரும் திருக்கோயிற்றிருத்தொ ண்டுசெய்யுந் திருப்பேர் ஏழாயிரத்துத் தொளாயிரவரும் பிறரும் சந்நிதி யிலே கூடிநின்று வியப்புற்று, அந்நூற்குத் திருக்களிற்றுப்படியாரெனத் திருநாமஞ் சாத்தினர்கள். ஆகலான மேற்கூறிய திருவுந்தியார் திருக்களி ற்றுப்படியார் ஆகிய இரண்டும், மெய்கண்டதேவர் அருளிச்செய்தசிவஞா னபோதம் ஒன்றும், அருணந்திசிவாசாரியா அருளிச்செய்த சிவஞானசித் தியார், இருபாவிருபஃதுஆகிய இரண்டும், மனவாசகங்கடந்தார்அருளிச்செ யத உண்மைவிளக்கம் ஒன்றும், உமாபதிசிவாசாரியர் அருளிச்செய்தசிவ ப்பிரகாசமுதலிய எட்டும், ஆகப்பதினாங்கு சைவசித்தாந்த சாத்திரங்களு ம் மெய்கண்ட சாத்திரமென அடிப்பட்ட சான்றோரால் வழங்கப்பட்டு வ ருகின்றன.]

" உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார்
பிந்திருபா வுண்மை பிரகாசம் - வந்தவருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
வுண்மைநெறி சங்கற்ப முற்று "

மேற்கூறியவாறு உமாபதி சிவாசாரியரிடத்தே அநுக்கிரகம்பெற்றஅரு ளமச்சிவாயதேசிகர் நவகோடிசித்தவாசபுரமென்னுந்திருநாமமுடைய தி ருவாவடுதுறையிலே சித்தமூர்த்தியாக எழுந்தருளியிருந்த சித்தர் சிவப்பி ரகாசதேசிகருக்கு உபதேசித்தருளினர்.

சித்தர்சிவப்பிரகாசதேசிகர் திருமூவலூரிலேபரம்பரைச்சைவவேளாள ர்குலத்திலே திருவவதாரஞ்செய்து, பிரமசரியநிலையிலே துறவறத்தினரா ய்ச், சத்திநிபாதத் துத்தமராய், எழுந்தருளியிருந்த நமச்சிவாயமூர்த்திக ளுக்கு உபதேசித்தருளினர்.

நமச்சிவாயமூர்த்திகள் தம்முடைய ஆசாரியர் ஆஞ்ஞாபித்தருளியபடி. திருவாவடுதுறையில் எழுந்தருளியிருந்து கொண்டு, சிவப்பிரகாசதேசிகரு

க்கு ஞானவதிமுறைப்படி சிவதருமணியென்று நைட்டிகதீக்ஷைசெய்து, அபிஷேகம்பண்ணிச், சைவசித்தாந்த சாத்திரத்தை உபதேசித்தருளினார். சிவப்பிரகாசதேசிகர் வைணவர்களாலே சிதம்பராலயபூஜைக்கு முட்டுப் பாடுவந்தவழி, ஞானதேசிகராகிய நமச்சிவாயமூர்த்திகள்பால் ஆஞ்ஞை பெற்றுக்கொண்டு சென்று, தம்மைவழிபடும்வண்ணம் அக்காலத்துள்ள அரசரை வசப்படுத்திச் சிதம்பராலயபூஜை சிறப்புற நடாத்து வித்துப், பின்பு நிட்டையிலே வீற்றிருந்தருளினார்.

பின்பு பஞ்சாக்கரதேசிகமூர்த்திகள் திருவாவடுதுறையிலே திருவவதாரஞ்செய்து, தீவிரதரபக்குவராய் எழுந்தருளியிருந்த மறைஞான தேசிகருக்கு அபிஷேகஞ்செய்து உபதேசித்தருளினார். மறைஞானதேசிகர் சைவசித்தாந்தசாத்திரோபதேசம் கேட்டவுடனே, சிந்தித்துத், தெளிந்து, தைலதாரைபோல இடையறாது நிட்டையிலே வீற்றிருந்தருளினார்.

பின்பு நமச்சிவாயதேசிகோத்தமர் ஆதீனபரம்பரையாகச் சித்தாந்தோபதேசம் விளங்கிவரும்வண்ணம் திருவுளங்கொண்டு, அம்பலவாணதேசிகருக்கும், தக்ஷிணாமூர்த்திதேசிகருக்கும் அபிஷேகஞ்செய்து சைவசித்தாந்த சாஸ்திரத்தை உபதேசித்தருளினார்.

தக்ஷிணாமூர்த்திதேசிகர் மெய்கண்டசாத்திரத்தின் கருத்தை உள்ளடக்கிய தசகாரியம், உபதேசப்பஃறொடையென்னும் இரண்டுஞானநூல்களைச் செய்தருளிச், சின்னப்பட்டத்தில் எழுந்தருளியிருந்தபடியே பரிபூரணத்தை அடைந்தார்.

அம்பலவாணதேசிகர் தசகாரியம், சன்மார்க்கசித்தியார், சிவாச்சிரமத்தெளிவு, சித்தாந்தப்பஃறொடை, சித்தாந்தசிகாமணி, உபாயநிட்டைவெண்பா, உபதேசவெண்பா, நிட்டைவிளக்கம், அதிசயமாலை, நமச்சிவாயமாலை, எனப்பத்தியரூபமாகப் பத்துஞானநூல்களையும், பூப்பிள்ளை என்னுந்திருப்பெயருடைய ஒருபரிபக்குவர்பொருட்டு, உயிரட்டவணை எனவும் பூப்பிள்ளை அட்டவணை எனவும் பெயர்பெற்ற கத்தியரூபமாகிய ஒருஞானநூலையும் செய்தருளினார்.

அன்றியும் அம்பலவாணதேசிகர் தம்மையடைந்த வைணவப்பிராமணரும் கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்த பரிபக்குவருமாகிய உலகுடையநாயனார் என்பவருக்குச், சைவசந்நியாசங்கொடுத்து, நைட்டிகதிருவாணதீக்ஷைசெய்து, மெய்கண்டசாத்திரங்களையும், தாம் இயற்றியருளிய தசகாரியமுதலிய நூல்களையும் உபதேசித்தருளினார். உலகுடையநாயனார் தம்முடைய ஞானாசாரியர்மீது, சைவசித்தாந்தசாத்திரக்கருத்தை யுள்ளடக்கிய தோத்திரரூபமாக " மலமெனுந் தடத்திற் கருமசே தகத்தின் மாயையாங் கிழங்கிலங் குரித்து - மன்னுமூ வெட்டாந் தத்துவ நாள மலரிதழ் வித்தையேழ் விந்தை, நலமிகு மீசன் சதாசிவ மிரண்டு நண்ணுகே சரங்களாஞ் சத்தி-நற்பொருட் டாகு நாதமே விந்து நயந்த கணனுமென விரவி, யிலகுமென் னுடலப் பதுமபீ டிகைநீ யிருந்தரு ளாசன மெனுமை - லெனதுபுக் கிலதா வெண்ணிநின் நெனிய வியலருட் பார்வைசெய் தனையே. யலகிலா.

வுயிர்கண் மலநடைக் கிலையா யருணடைக் குண்மையாய் நின்ற - வாவடு துறைசை யம்பல வாண வடியவர்க் கருளுமா நிதியே." என்பதுமுதலாகிய பத்துத்திருவிருத்தங்களைப் பாடியருளினார்.

பின்னும் அம்பலவாணதேசிகரிடத்தே சிவதீக்ஷை பெற்றுச், சைவசித்தாந்தோபதேசங் கேட்டருளிய பரிபக்குவராகிய சிவபுரம்பிள்ளை என்பவர் தம்முடைய ஆசாரியர்மீது "அந்தமலத் தத்துவித மானபணி யாலகற்றி - வந்தமலத் தத்துவிதம் வைத்தாயே - யெந்தாய் - திருவா வடுதுறைவாழ் தேசிகா பொய்யின் - மருவாத வம்பல வாண" என்பது முதலாகிய பத்துத் திருவெண்பாக்களைப் பாடியருளினார்.

[பிரமசரியநிலையிலே துறவறத்தினராய்த், திருவாவடுதுறையின்கண் எழுந்தருளியிருந்துகொண்டு, ஆதீனபரம்பரையாகச் சித்தாந்தோபதேசம் நிகழ்ந்துவரும் வண்ணம் திருவுளங்கொண்டு, மாணாக்கர்களுக்கு அபிஷேகஞ்செய்து, உபதேசித்தருளிய ஞானாசாரியராகிய நமச்சிவாயமூர்த்திகள் ஆதீனத்துக்குப் பிரதம பரமாசாரியரும், உபதேசபரம்பரை அங்குரித்ததற்கு அருகமாய்ப்பிரதமாசாரியர்காலத்தில் இருந்தருளிய அம்பலவாணதேசிகர் துவிதீயாசாரியருமானதால், இந்தஞானாதீனத்துக்கு வந்தருளும் ஆசாரியர்கள் நைட்டிகதுரியாச்சிரமிகளாயிருத்தலும், பெரியபட்டத்தில் எழுந்தருளியிருக்கும்பொழுது, அடியவர் முதலாயினோருக்கு அனுப்பியருளும் திருமுகங்களில் (நமச்சிவாயம்) எனவும், சின்னப்பட்டத்தில் எழுந்தருளியிருக்கும்பொழுது (அம்பலவாணர் துணை) எனவும் திருக்கைச்சாத்திடுதலும், சாம்பிரதாயமாகப் பண்டைக்காலந்தொடங்கி இன்றுகாறும் நிகழ்ந்து வருகின்றன.]

அம்பலவாணதேசிகர் உருத்திரகோடி தேசிகருக்கும், அவர் வேலப்பதேசிகருக்கும், அவர் குமாரசுவாமிதேசிகருக்கும், அவர் பிறகுமாரசுவாமிதேசிகருக்கும், அவர் மாசிலாமணிதேசிகருக்கும் அபிஷேகஞ்செய்து, சைவசித்தாந்த சாத்திரத்தை உபதேசித்தருளினார்.

பின்னும் அக்காலத்திலே ஆதீன சிஷ்யவர்க்கங்களிலே கல்வியினும்செல்வத்தினும் அதிகாரத்தினும் சிறந்த திருநெல்வேலியிலிருந்த மயிலேறும்பெருமாள் பிள்ளையிடத்தே தமிழிலே தொல்காப்பியமுதலிய இலக்கணஇலக்கியங்களை உணர்ந்தவரும், செப்பறைப்பதியிலிருந்த சிவப்பிராமணராகிய கனகசபாபதி சிவாசாரியரிடத்தே வடமொழியை உணர்ந்தவரும், ஆதீனஞானதேசிகரிடத்தே சங்காபிஷேகமும் ஈசானதேசிகரென்னுஞ் சிறப்புத்திருநாமமும் சைவசித்தாந்த சாத்திரோபதேசமும் பெற்றுத் திருநெல்வேலியில் ஆதீனத்தைச்சார்ந்த ஈசான மடாலயத்தில் இருந்தவருமாகிய சுவாமிநாததேசிகர் அரிய இலக்கணவிதிகளைத் திரட்டி இலக்கணக் கொத்தென்னு நூலையும் தசகாரியமாகிய ஞானநூலையும் இயற்றியருளினார். அன்றியும் நன்னூலுக்கு விருத்தியுரைசெய்த சங்கரநமச்சிவாயப்புலவர் முதலாகிய மாணாக்கர்களுக்குக் கல்விகற்பித்தனர்.

மாசிலாமணிதேசிகர் இராமலிங்கதேசிகருக்கும், அவர்வேலப்பதேசிகருக்கும், அவர்பின்வேலப்பதேசிகரெனப் பெயர்பெற்ற இருவருக்கும் அபிஷேகஞ்செய்து, சைவசித்தாந்தசாத்திரத்தை உபதேசித்தருளினார்.

பெரியபட்டத்தில் எழுந்தருளியிருந்த பின்வேலப்பதேசிகர் திருப்பறியலூர்ப்புராணத்தை மொழிபெயர்த்தருளினார்.

சின்னப்பட்டத்தில் எழுந்தருளியிருந்த பின்வேலப்பதேசிகர் பஞ்சாக்கரப்பஃறொடையென்னும் ஞானநூலைச் செய்தருளினார்.

பின்னும் வாதுளாகமப்படி ஞானபூஜாவிதிமொழிபெயர்ப்பு, மரபட்டவணை, அநாதியட்டவணை, அனுபோகவெண்பா, வருணசிவாசாரியர்பத்ததிப்படி கிரியாபூஜாவிதி மொழிபெயர்ப்பு, முதலாயின அம்மரபில் அநுக்கிரகம்பெற்ற ஆன்றோராற் செய்தருளப்பெற்று வழங்குகின்றன.

[ அம்பலவாணதேசிகர் அருளிச்செய்த தசகாரியமுதலாயினபத்தும், தக்ஷிணாமூர்த்திதேசிகர் அருளிச்செய்த தசகாரியமுதலாயின இரண்டும், சுவாமிநாததேசிகர் அருளிச்செய்த தசகாரியம் ஒன்றும், பின்வேலப்பதேசிகர் அருளிச்செய்த பஞ்சாக்கரப்பஃறொடை ஒன்றும், ஆகப்பதினைநு ஞானநூல்களும் பண்டாரசாத்திரமென ஆன்றோரால் வழங்கப்பட்டு வருகின்றன. ]

அவ்வேலப்பதேசிகராகிய ஞானாசாரியர் காலத்திலே, பாண்டிவளநாட்டிலே, பொதியமலைச்சாரலிலே, பாவநாசமென்னுந் திருப்பதியைச்சார்ந்த விக்கிரமசிங்கபுரத்திலே, அகத்தியமகாமுனிவரிடத்தே ஏழுதலைமுறையளவும் பிறைமதிபோல முறையே வளர்ந்து அருட்புலமை நிரம்பும்வண்ணம் வரம்பெற்ற பரம்பரைச் சைவவேளாளர்குலத்திலே, சிவபத்தி அடியார்பத்தியிற் சிறந்தவராய்க், கல்விச்செல்வம்போலப் பொருட்செல்வமும் ஒருங்குடையராய் இருந்த ஆனந்தக்கூத்தர் என்பவருக்கு, அவர்மனைவியாராகிய கற்பினிற்சிறந்த மயிலம்மையார் திருவயிற்றிலே, ஏழாவது தலைமுறையாகத், தமிழ்நாடுசெய்த தவத்தானே, ஒருவர் திருவவதாரஞ்செய்து, முக்களாலிங்கர் என்னும் பிள்ளைத்திருநாமம்பெற்று, ஒழுக்கம் அன்பு அருள் முதலிய நற்குணங்களோடு வளருவாராயினார்.

பின்பு முக்களாலிங்கர் ஐந்துபிராயத்திலே, பிதாமாதாக்களாலே வித்தியாரம்பஞ் செய்விக்கப்பெற்றுப், பள்ளிக்கூடத்தில் அமர்ந்தனர். அங்ஙனம் அமரும்பொழுது, மேற்கூறிய திருவாவடுதுறையிலிருந்து சிவஸ்தலயாத்திரையாகப் புற[illegible]ட சிலமுனிவர்கள் விக்கிரமசிங்கபுரத்துத் திருவீதியிலே சென்றார்கள். பள்ளிக்கூடத்தினின்றும் புறப்பட்ட முக்களாலிங்கர் அம்முனிவர்களைச் சந்தித்துத் தரிசித்து வணங்கி "சுவாமிகள் அடியேன் கிருகத்துக்கு எழுந்தருளித் திருவமுதுசெய்து பின்பு சென்றருளவேண்டும்" என்றுபிரார்த்திக்க, அம்முனிவர்கள் ஆண்டின் இளையருமஅறிவின்முதியருமாகிய [illegible]களாலிங்கர் வழிபாட்டுக்கு இரங்கி, விருப்பத்தோடு உடன்பட்டனர். உட[illegible]ட்டமுனிவர்கள் முக்களாலிங்கர் பிறகே கிருகத்துக்

நுப்போய், முக்களாலிங்கர் அருமைக்கருத்தை யுணர்ந்து அருந்ததியினுஞ் சிறந்த மயிலம்மையார் உபசரிக்கத் திருவமுதுசெய்து சென்றருளினார்கள். முக்களாலிங்கர் தமதுகருத்தின்படி அடியார்களை உபசரித்த தாயாரைப்பற்றி ( அருந்ததியென் னம்மை யடியவர்கட் கென்றும் - திருந்த வமுதளிக்குஞ் செல்வி - பொருந்தவே - யானந்தக்கூத்த ரகமகிழத் தொண்டுசெயு - மானந் தவாத மயில். ) என்னுஞ்செய்யுளை யியற்றி யருளினார். புறத்தேபோயிருந்த ஆனந்தக்கூத்தர் வீட்டிற்குவந்து, நிகழ்ந்த அற்புதச்செய்திகளைக் கேள்வியுற்றுப், பேரின்பக்கடலிலே முழுகினார்.

உடனே ஆனந்தக்கூத்தர் புத்திரராகிய முக்களாலிங்கரோடு மேற்கூறிய முனிவர்களிடத்தே போய் வணங்கியவழிச், சத்திநிபாதமுடைய புத்திரர் பிறவிப்பெருந்துன்பக் கடலினின்றுங் கரையேறக் கருதி, அம்முனிவர்களோடு தாஞ்செல்லவேண்டுமென்னுங் குறிப்பினை யுணர்த்தப், புத்திரனைப் பிரியமனமில்லாதிருந்தும் தந்தையார் ஒருவாறிசைந்து வீட்டிற்குத் திரும்பிவிட்டார்.

தந்தையார் நீங்கியபின்பு, முக்களாலிங்கர் ஆதீனத்து முனிவர்களோடு வழிக்கொண்டு, இடையிலேயுள்ள சிவஸ்தலங்களைத தரிசித்துக்கொண்டு, சோழநாட்டிலுள்ள திருவாவடுதுறையைஅடைந்து, மடாலயத்தினுள்ளே புகுந்து, ஆதீன பரமமுதற்குரவராகிய நமச்சிவாயமூர்த்திகளைத் தரிசித்துத், திருவருணோக்கம் பெற்றுக்கொண்டு, அப்பொழுது, சின்னப்பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஞானாசாரியராகிய பின்வேலப்பதேசிகரை ஒடுக்கத்திலேபோய்த தரிசித்துப், பேரன்போடு வணங்கினார்.

வணங்கியவர் ஞானதேசிகரிடத்தே சைவசந்நியாசமும், சிவதீக்ஷையும் சிவஞானயோகிகளென்னுந் தீக்ஷாநாமமும் பெற்று, மெய்கண்டசாத்திர பண்டாரசாத்திரங்களைக் கேட்டருளினார். சிவஞானயோகிகள் அகத்திய முனிவர் வரத்தால் அவதரித்தருளியவராகலின், எளிதிலே வடமொழிக்கடலும் தென்மொழிக்கடலும் முற்றொருங்குணர்ந்து, மெய்யுணர்வின் முறறுப்பேறுடையராய் அமர்ந்தருளினார். வேலப்பதேசிகர் சிவஞானயோகிகளுக்கு உபதேசித்தருளிய ஞானாசாரியரென்பது "எவ்வெவகோட் படுபொருளு மஞ்செழுத்தி னடக்கியவற் றியல்பு காட்டி, மெய்வகையஞ் சவத்தையினு நிற்குமுறை யோதுமுறை விளங்கத் தேற்றி, யவ்வெழுத்தி னுள்ளீடு மறிவித்துச் சிவபோகத் தழுத்தி நாயேன்,செய்வினையுங் கைக்கொண்ட வேலப்ப தேசிகன்றாள் சென்னி சேர்ப்பாம்." எனக் காஞ்சிப் புராணத்துட் கூறியவாற்றால் விளங்கும்.

சிவஞானயோகிகள் ஜமதக்கினிமகாமுநிவருடைய புத்திரரும், அகத்தியமகாமுநிவருடைய முதன்மாணாக்கரும், இடைச்சங்கப்புலவர் ஐம்பத்தொன்பதின்மருள் ஒருவருமாகிய திரணதூமாக்கினியென்னுந் தொல்காப்பியமுநிவர் அருளிச்செய்த இலக்கணநூலாகிய தொல்காப்பியத்திற்கு, உரையாசிரியராகிய இளம்பூரணர்செய்த உரையாகிய இளம்பூரணமும், சேனாவரையர்செய்த உரையாகிய சேனாவரையமும், நச்சினார்க்கினியர்

செய்த உரையாகிய நச்சினார்க்கினியமும் எனப்படு மூன்றுரைகளினுமுள்ள ஆசங்கைகளைநீக்கித் தெளிவிக்கும்பொருட்டு, அத்தொல்காப்பியத்தின் பாயிரத்திற்கும், முதற்சூத்திரத்திற்கும் சூத்திரவிருத்தியெனப்பெயர்பெற்ற பாஷ்யமும், வடமொழித் தருக்கசங்கிரக அன்னம்பட்டீயங்களின் மொழிபெயர்ப்பும், நன்னூலுக்குச் சங்கரநமச்சிவாயப்புலவர்செய்த புத்துரையாகிய விருத்தியுரைத்திருத்தமும் செய்தருளினார். இவைமூன்றும் திராவிடமகாபாஷ்யத்திற்கு அங்கங்கள் எனப்படும்.

அன்றியும் சர்வாத்மசம்பு சிவாசாரியர் அருளிச்செய்த சத்தியரூப சித்தாந்தப்பிரகாசிகையை அவ்வாறே மொழிபெயர்த்தருளினார்.

அன்றியும் மெய்கண்டதேவர் மொழிபெயர்த்தருளிய வார்த்திகப்பொழிப்பாகிய சிவஞானபோதத்திற்கு ஆசிரியர் அமைத்தருளிய மெய்ப்பொருள் விளங்கும்வண்ணம் திராவிடமகாபாஷ்யமெனப் பெயர்பெற்ற விருத்தியுரையும், இலகுவியாக்கியானமாகிய சிற்றுரையும், அருணந்திசிவாசாரியர் அருளிச்செய்த சிவஞானசித்தியார் சுபக்கத்திற்குப் பொழிப்புரையும் செய்தருளினார்.

அன்றியும் சிவாக்கியசோழமகாராஜாகாலத்திலே கஞ்சனூரிலே அவதரித்தருளிய ஆசாரியசரணராகிய ஸ்ரீ அரதத்தசிவாசாரியார் வைணவமதக ண்டனஞ்செய்து சைவமதஸ்தாபனஞ்செய்யும்பொருட்டு, நெருப்பிலேபழுக்கக்காய்ச்சிய இருப்புமுக்காலியிலே, எழுந்தருளியிருந்து, சிவபெருமானே பரம்பொருளென இருபத்திரண்டு ஏதுக்களாலே நாட்டியருளிய சுலோகபஞ்சகத்தின் மொழிபெயர்ப்பும், ஸ்ரீ அப்பையதீக்ஷிதர் அருளிச்செய்த சிவதத்துவவிவேகமூலசுலோகங்களின் மொழிபெயர்ப்பும், காஞ்சிப்புராணத்தின் முதற்காகமொழிபெயர்ப்பும் செய்தருளினார்.

அன்றியும் யமகரூபமான கம்பரந்தாதி, திருக்ரூபமானமுல்லையந்தாதி, கலைசைப்பதிற்றுப்பத்தந்தாதி, இளசைப்பதிற்றுப்பத்தந்தாதி, குளத்தூர்ப்பதிற்றுப்பத்தந்தாதி, குளத்தூர்அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ், கலைசைச் செங்கழுநீர்விநாயகர் பிள்ளைத்தமிழ், பெரும்பாலும் உண்மைநாயன்மார் சரிதமுதலியவற்றைத்தழுவிப் பூருவார்த்தமும், அதற்கெடுத்துக்காட்டாகத் திருவள்ளுவநாயனார் திருக்குறள் உத்தரார்த்தமுமாகக்கொண்டு, சோமேசர்மீது முதுமொழிவெண்பா, திருவேகம்பர் ஆனந்தக்களிப்பு, செப்பறைப்பதி அகிலாண்டேசுவரிபதிகம், மார்கழிமீ திருவாதிரையுற்சவத்திலே தேவாரமுதலிய அருட்பாக்கள் திருக்காப்பிடப்பட்டுத் திருவெம்பாவையென்னும் திருவாசகத் திருப்பதிகமொன்றுமே ஆன்மார்த்த பரார்த்தபூஜாகாலங்களில் ஓதப்பெற்றுவருஞ் சாம்பிரதாயத்தால், நித்தநியமமந்திரமாகத் திருத்தொண்டர் திருநாமத்தை ஓதியுய்யவேண்டுவார் கருத்துத் தடைப்படாமைப்பொருட்டு திருத்தொண்டர் திருநாமக்கோவை, ஆதிபரமாசாரியராகிய நமச்சிவாய மூர்த்திகண்மீது பஞ்சாக்கரமாலை முதலியபிரபந்தங்களைச் செய்தருளினார்.

அன்றியும் மரபட்டவணை எனப்பெயர்பெற்ற திருவாவடுதுறை ஆதீனசாம்பிரதாயக்கட்டளைபற்றித் தருமபுர ஆதீனத்தார் மறுத்தெழுதியதற்கு மறுப்பின் மறுப்புஎன ஒன்றுசெய்தருளினார்.

அன்றியும் காஞ்சீபுரத்தில் எழுந்தருளியிருந்தபொழுது, யாத்திரையாக வந்தருளிய திருவண்ணாமலையாதீனத்துப் பண்டாரசந்நிதிகள் சிவஞானசித்தியாரில் " என்னையிப் பவத்திற்சேராவகை யெடுத்து " என்னுஞ்செய்யுளில் ( எடுத்தென்னுஞ்சொல்லுக்குப் ) பொருள் என்னையென்று, தம்மாதீனத்து ஞானப்பிரகாசமுனிவர் இயற்றிய உரையினையாய்வு தொனிக்கும் வண்ணம், சிவஞானயோகிகளிடத்தே வினாவியபொழுது, அவ்வுள்ளுறைவினாவைமறுக்க அச்சிவஞானயோகிகள் எடுத்தென்னுஞ்சொல்லுக்கிட்டவயிரக் குப்பாயம் எனஒன்றும், சிவஞானசித்தியாருக்கு மேற்கூறியஞானப்பிரகாசமுனிவர் இயற்றியவுரை போலியுரையென விளக்கச், சிவசமவாதவுரைமறுப்பு எனஒன்றும் செய்தருளினார்.

அன்றியும் கம்பராமாயணமாகிய மொன்றுமே தமிழிலே முற்றுமுற்றமைந்திருப்பதென்று செருக்கொடுகூறிய காஞ்சீபுரத்து வைணவர்கள் வாயடைக்கக்கருதி அக்கம்பராமாயணத்து நூற்பயனாகிய " நாடியபொருள் கைகூடும் " என்னுஞ்செய்யுளுக்கு, இன்மைப்பொருளை யுணர்த்தும் நகாரம் முதலிலே புணர்ந்திருத்தல்முதலிய பலகுற்றங்களை நாட்டியபொழுது, அவ்வைணவர்கள் தெரியாதுவிதற்றிநேரும் அக்குற்றங்களைச் சுவாமிகளே பரிகரிக்கவேண்டுமெனப் பெரிதும் இரந்தமைபற்றி, சிவஞானயோகிகள் இரங்கி, நகாரம் அட்டாக்ஷரத்தின் முதலாதல்முதலிய நன்மைகளை எடுத்துக்காட்டி, அவர்களை யுவப்பித்தருளினார்.

அன்றியும் திருவாரூர் வைத்தியநாதநாவலர் இயற்றிய இலக்கணவிளக்கத்தில், எழுத்ததிகாரஞ் சொல்லதிகாரம் முதலியவற்றிலுள்ள வழுக்களை வெளியிடக்கருதி இலக்கணவிளக்கச்சூறாவளி என ஒன்று செய்தருளினார்.

இங்ஙனம் உலகோபகாரமாகப் பலவுரைகளையும், பலநூல்களையும், பலகண்டனங்களையுஞ்செய்து, பலநன்மாணாக்கர்களுக்குப் போதித்து, வடமொழியினும் தென்மொழி சிறந்ததென்னும்படி விளங்கச்செய்து, தவமேதிருவுருக்கொண்டாற்போலும்விளங்கிச், சிவப்பற்றிற்குக் காரணமாகிய நிட்டையில் வீற்றிருந்தருளிய திராவிடமகாபாஷ்யகர்த்தராகிய சிவஞானயோகிகள் திருவாவடுதுறையிலே சித்திரைமீ ஆயிலியநக்ஷத்திரத்தில் பரிபூரணதசையை அடைந்தனர்.

> யன்றும் விசுவா வசுவருட மேடமதி
> யுன்னிரவி நாட்பகலோ டாயிலியம் - நன்றுந்
> திருவாள னெய்கோன் சிவஞான தேவன்
> திருமேனி நீங்கு தினம்.

சிவஞானயோகிகளுக்கு மாணாக்கர்கள் இலக்கணம் சிதம்பரநாதமுனிவர், கச்சியப்பமுனிவர், தொட்டிக்கலைச் சுப்பிரமணியமுனிவர், காஞ்சீபுர

ம் சரவணபத்தர், இராமநாதபுரம் சோமசுந்தரப்பிள்ளை முதலாகிய பன்னிருவர் உளர்.

அவருள்ளொ ஓலக்கணம் சிதம்பரநாதமுனிவர் திருப்பாதிரிப்புலியூர்ப்புராணத்தை மொழிபெயர்த்தனர்.

கச்சியப்பமுனிவர் திருவானைக்காப்புராணம், பூவாளூர்ப்புராணம், பேரூரொனவழங்கும் ஆதிபுரஸ்தலபுராணம், திருத்தணிகைப்புராணம், விநாயகபுராணம், காஞ்சிப்புராணத்தின் பிற்பாகம்ஆகிய மொழிபெயர்ப்புகளையும், சென்னைவிநாயகர்பிள்ளைத்தமிழ், கச்சியானந்தருத்திரேசர் வண்டுவிடுதூது, கச்சியானந்தருத்திரேசர் பதிற்றுப்பத்தந்தாதி, திருத்தணிகையாற்றுப்படை, திருத்தணிகைப் பதிற்றுப்பத்தந்தாதி பஞ்சாக்கரவந்தாதி முதலியபிரபந்தங்களையும் இயற்றியருளினர்.

தொட்டிக்கலைச் சுப்பிரமணியமுனிவர் துறைசைக்கோவை, கலைசைக்கோவை, கலைசைச்சிலேடைவெண்பா, சிதம்பரேசர்வண்ணம், திருக்குற்றாலச் சித்திரசபைத்திருவிருத்தம், பழநிமுருகக்கடவுள் பஞ்சரத்நமாலை சுப்பிரமணியர்திருவிருத்தம், திருத்தணிகைத்திருவிருத்தம், திருச்சிற்றம்பலதேசிகர்மீது சிந்து. பஞ்சரத்நமாலை, அம்பலவாணதேசிகர்மீது ஞானந்தக்களிப்பு முதலியவற்றை இயற்றியருளினர். மேற்கூறிய சுப்பிரமணியர் திருவிருத்தமும், திருத்தணிகைத்திருவிருத்தமும், முறையேகுட்டரோகியும், அந்தகனுமாகியஇருவர்பொருட்டுச்செய்துகொடுத்தவளவில், அவைகளை அவ்விருவரும் முருகக்கடவுள்சந்நிதியில் ஓதிக், குட்டரோகமும், அந்தகத்தன்மையு நீங்கி உய்ந்தனர்.

மேற்கூறிய பின்வேலப்பதேசிகர் திருச்சிற்றம்பலதேசிகருக்கும். அவர் அம்பலவாணதேசிகருக்கும், அவர் சுப்பிரமணியதேசிகருக்கும், அவர் அம்பலவாணதேசிகருக்கும் அபிஷேகஞ்செய்து சைவசித்தாந்தசாஸ்திரத்தை உபதேசித்தருளியபின்பு, அம்பலவாணதேசிகரிடத்தே, அபிஷேகமும்,சைவசித்தாந்தோபதேசமும்பெற்று, வடமொழி தென்மொழிகளை யுணர்ந்து, சிவஞானசித்தியாருக்குச், சிவஞானயோகிகளால் அரிதினுணர்தற்பாலதாகச் செய்தருளப்பட்ட பொழிப்புரைக்கிணங்க எளிதினுணர்தற்பாலதாகப் பதவுரைசெய்தருளிய சுப்பிரமணியதேசிகமூர்த்தி கட்டளையிட்டருளியபடி இவ்வரலாறு எழுதப் பெற்றது.

மெய்கண்டதேவர்திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள் திருவடிவாழ்க.

---

## திருக்கைலாசபரம்பரை ஆசாரியர்கள் பரிபூரணத்தை அடைந்ததலமும், திருநக்ஷத்திரமும் வருமாறு.

| ஆசாரியர்கள். | பரிபூரணமான ஸ்தலம். | மாசம். | நக்ஷத்திரம். |
|---|---|---|---|
| மெய்கண்டதேவர் | திருவெண்ணெய்நல்லூர் | ஐப்பசி | சுவாதி |
| அருணந்திசிவாசாரியர் | திருத்துறையூர் | புரட்டாசி | பூரம் |
| மறைஞானசம்பந்தசிவாசாரியர் | திருக்களாஞ்சேரி | ஆவணி | உத்திரம் |
| உமாபதிசிவாசாரியர் | கொற்றவன்குடி | சித்திரை | அஸ்தம் |
| அருணமச்சிவாயதேசிகர் | ௸ | மார்கழி | திருவாதிரை |
| ௧. நமச்சிவாயதேசிகர் | திருவாவடுதுறை | தை | அசுவதி |
| துவிதீய, சிவப்பிரகாசதேசிகர் | பட்டீச்சுரத்துக்கடுத்தவடதளி | ஆனி | பரணி |
| ௨. மறைஞானதேசிகர் | திருவாவடுதுறை | தை | சுவாதி |
| ௩. அம்பலவாணதேசிகர் | ௸ | சித்திரை | அவிட்டம் |
| துவிதீய, நமச்சிவாயமூர்த்திதேசிகர் | ௸ | மாசி | சித்திரை |
| ௪. உருத்திரகோடிதேசிகர் | மதுரை | கார்த்திகை | அநுஷம் |
| ௫. வேலப்பதேசிகர் | திருப்பூவணம் | ௸ | உத்திராடம் |
| ௬. குமாரசுவாமிதேசிகர் | சுசீந்திரம் | ௸ | ௸ |
| ௭. பின்குமாரசுவாமிதேசிகர் | ௸ | ஆவணி | உத்திரட்டாதி |
| துவிதீய, முத்தம்பலவாணதேசிகர் | திருக்குற்றாலம் | மாசி | சித்திரை |
| ௮. மாசிலாமணிதேசிகர் | திருவெண்காடு | சித்திரை | உரோகிணி |
| துவிதீய, சிவககொழுந்துதேசிகர் | திருவாவடுதுறை | மார்கழி | மூலம் |
| திரிதீய, சுவாமிநாததேசிகர் | திருவண்ணாமலை | கார்த்திகை | உத்திரம் |
| ௯. இராமலிங்கதேசிகர் | திருவாவடுதுறை | ௸ | அநுஷம் |
| ௧0. வேலப்பதேசிகர் | சங்கரநாயனார்கோயில் | புரட்டாசி | மூலம் |
| ௧௧. பின்வேலப்பதேசிகர் | திருப்பெருந்துறை | வைகாசி | பூரட்டாதி |
| துவிதீய, வேலப்பதேசிகர் | பேரூர் | ஆனி | பரணி |
| ௧௨. திருச்சிற்றம்பலதேசிகர் | திருவாவடுதுறை | ௸ | ௸ |
| ௧௩. அம்பலவாணதேசிகர் | ௸ | மார்கழி | கேட்டை |
| ௧௪. சுப்பிரமணியதேசிகர் | ௸ | கார்த்திகை | கார்த்திகை |
| துவிதீய, கனகசபாபதிதேசிகர் | தனிகை | தை | ௸ |
| ௸, சுப்பிரமணியதேசிகர் | திருவாவடுதுறை | மாசி | அவிட்டம் |
| ௧௫. அம்பலவாணதேசிகர் | ௸ | ஆனி | பூரம் |

# படல அகராதி.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# காஞ்சிப்புராணம்.

## விநாயகர்காப்பு.

இருகவுட்டுளைவாக்குகாக்கடங்கனிங்குலிகக
குருநிறத்திழிதோறறமுன்குலாயத்தவழநேறிப்
பரிதிமாயினிற்சமனொடுகாளிறிபயிலுரு
திருநிகர்த்தசிகைப்கரகளிற்றினைச்சேவாம். (க)

## விகடசக்கர விநாயகர்காப்பு.

விகடசக்கரவாரணந்தொடாவரும்வித்தகமுகில்வீற
விகடசக்கரவிந்தமன்னவன்றனக்கருளுமெய்த்தலைவாகு
விகடசக்கரவாகமென்முலையுமைகானமுளையென்றுச்சே
விகடசக்கரவொந்திரமெனச்சுழல்வெம்பவக்கடனெருந்தே. (உ)

# கடவுள்வாழ்த்து.

## சபாநாயகர்.

சங்கேந்துமலர்க்குடங்கைப்புத்தேளுமறைந்கோவுந்தழல்கால்சூல, மங்கேந்துமம்மானுந்தத்தமதுதொழிறலைநின்றுறச்செய்தோர், பங்கேந்தும் பெருமாட்டிவிழிகளிப்பவிருமுநிவர்பணிந்துபோற்றச், கொங்கேந்துமணி மன்றுட்குனித்தருளும்பெருவாழ்வைக்குறித்துவாழ்வாம். (க)

## ஏகம்பநாதர்.

தண்ணந்தபெருந்துயர்க்கடன்மீக்கூர்தலின்றுன்மலைபயந்ததாளமுரந், கண்ணுநுழையாள்புரிபூசைமுடிவளவுந்தரியாமலிடையேகம்பை, யணங்கினைத் தூதெனவிடுத்துவலிந்திறுகத்தழீஇக்கொள்ளவமையாககாதன், மணந்தருளிக்குறிபூண்டவொருமாவிற்பெருமானைவணக்கஞ்செய்வாம். (உ)

## காமாட்சியம்மை.

ஊன்பிலிற்றுமழுவாளிகலவிதனிலொண்ணுதென்றேர்ந்துநஞ்சர், தான்பிலிற்றும்பாப்பணியைநீப்பவுங்கார்வண்டினங்கடைதந்துமேசத், தேன்பிலிற்றுநறுங்கடுக்கைத்தெரியலைப்பாம்பெனமருண்டதெரியலுறுங், கான்பிலிற்றத்தெருண்டனையுங்காமக்கோட்டத்துமையைக் கருத்துள்வைப்பாம்.

கருச்காமக்கோட்டிபிறவினையனைத்துமொருங்கெய்திக்கலகஞ்செய்யுந்
தருக்காமக்கோட்டியெலாமறவெறிந்தாமினியென்றூர்தகைசாலன்பு
சுருக்காமக்கோட்டினைச்சே யனைகரங்கொண்டார்க்குமுலைச்சுவடுநல்குந்
திருக்காமக்கோட்டியம்மைசேவடிப்போதெப்போதுஞ்சிந்திப்பாமால்.(ச)

### விகடசக்கர விநாயகக்கடவுள்.

விழிமலர்ப்பூசனையுருற்றித்திருநெடுமால் பெறுமாழி மீளவாங்கி
வழியொழுகாச்சலந்தரன்மெய்க்குருதியடி முடைநாற்றமாறுமாற்றாற்
பொழிமதநீர்விரையேற்றிவிகடநடப்பூசைகொண்டுபுதிதாநல்கிப்
பழிதபுதன்றாதையினும்புகழ்படைத்தமதமாவைப்பணிதல்செய்வாம். (ரு)

### குமரக்கடவுள்.

முருகோட்டந்தரப்பாயுமும்மதமுமூற்றெடுப்பமுரிவிற்கோட்டு, மொரு
கோட்டுமழகளிற்றையிருகோட்டுமுதுகளிறுவுலவக்காட்டிப், பருகோட்ட
நறைவேட்டுப் பைங்கோட்டுத்தினைப்புனத்துப் பரண்மேற்கொண்டு, குரு
கோட்டும்பெடைமணந்தகுமரகோட்டத்தடிகள்குலத்தாள்போற்றி. (சு)

### வயிரவக்கடவுள்.

எளியனைவலியர்வாட்டின்வலியனையிருநீர்வைப்பி
னளியறத்தெய்வம்வாட்டுமெனுமுரைக்கமையவன்றே
தெளியுமாவலியைச்செறநேற்றெசெகுத்துரிக்கவயம்போர்த்து
வளியுளர்கச்சிகாவல்வயிரவர்க்கன்புசெய்வாம். (எ)

### திருநந்திதேவர்.

அங்கணன்கயிலைகாக்குமகம்படிதொழின்மைபூண்டு
நங்குருமரபிற்கெல்லாமுதற்குருநாதனாகிப்
பங்கயந்துளவநாறும்வேத்திரப்படைபொறுத்த
செங்கையெம்பெருமானந்திசேரடிக்கமலம்போற்றி. (அ)

### தமிழாசிரியர்.

காசியினின்றும்போந்துகம்பர்தாமருளப்பெற்று
மாசிலாக்கச்சிமூதூர்மன்னிவீற்றிருந்துபூமே
லாசிலாத்தமிழ்பாப்பியருந்தமிழ்க்குரவுபூண்ட
தேசிகன்மலயவெற்பிற்குறுமுனிதிருத்தாள்போற்றி. (கூ)

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பரசமயகோளரியைப்பாலறுவாயனைப்பூம்பழனஞ்சூழ்ந்த
சிரபுரத்துத்திருஞானசம்பந்தப்பெருமானைத்தேயமெல்லாங்
குரவையிடத்தமிழ்வேதம்விரித்தருளுங்கவுணியர்தங்குலதீபத்தை
விரவியெமையாளுடையவென்றிமழவிளங்களிற்றைவிரும்பிவாழ்வாம். ()

### திருநாவுக்கரசுநாயனார்.

இடையறுப்பேரன்புமழைவாருமிணைவிழியுமுழவாரத்திண்
படையறுத்திருக்கரமுஞ்சிவபெருமான்றிருவடிக்கேபதித்தநெஞ்சு
நடையறுப்பெருந்துறவும்வாகீசப்பெருந்தகைதன்ஞானப்பாடற்
றொடையறுச்செவ்வாயுஞ்சிவவேடப்பொலிவழகுந்துதித்துவாழ்வாம். ()

## சுந்தரமூர்த்திநாயனார்.

ஒருமணத்தைச்சிதைவுசெய்து வல்வழக்கிட்டாட்கொண்டவுவனைக் கொண்டே, யிருமணத்தைக்கொண்டருளிப்பணிகொண்டவல்லாளனெல் லாமுய்யப், பெருமணச்சீர்த்திருத்தொண்டத்தொகைவிரித்தபேரருளின் பெருமாளென்றுந், திருமணக்கோலப்பெருமாண்மறைப்பெருமாளெமது குலதெய்வமாமால். (௧௨)

## மாணிக்கவாசகசுவாமிகள்.

பெருந்துறைமிற்சிவபெருமானருளுதலும்பெருங்கருணைப்பெற்றிநோக் கிக், கரைந்துகரைந்திருகண்ணீர்மழைவாரத்துரியநிலைகடந்துபோந்து, தி ருந்துபெருஞ்சிவபோகக்கொழுந்தேறல்வாய்மடுத்துத் தேக்கிச்செம்மாந், திருந்தருளும்பெருங்கீர்த்திவாதவூரடிகளடியிணைகள்போற்றி. (௧௩)

## அறுபத்துமூவர்.

தத்துமூதெயின்மூன்றுந்தழலெழ, முத்துமூரன்முகிழ்த்தநிராமய
சித்துமூர்த்திதன்ருளிணைசேரறு, பத்துமூவர்பதமலர்போற்றுவாம். (௧௪)

## சேக்கிழார்நாயனார்.

தூக்குசீர்த்திருத்தொணடத்தொகைவிரி
வாக்கினுற்சொல்லவல்லபிரானெங்கள்
பாகவியப்பயனுப்பதிகுன்றைவாழ்
சேக்கிழானடிசென்னியிருத்துவாம். (௧௫)

## திருக்கூட்டத்தார்.

பேயன்னபுறச்சமயப்பிணக்குநூல்வழியனைத்தும்பிழையேயன்றி, வா யன்மைதெளிந்தசைவசித்தாந்தவழிதேறியதீதவாழ்விற், போயண்மியஞ் செழுத்துந்திருநீறுங்கண்டிகையும்பொருளாக்கொண்ட, நாயன்மார்திரு க்கூட்டம்பணிந்திறைஞ்சும்பெரும்பேறுநான்பெற்றேனல். (௧௬)

## பஞ்சாக்கரதேசிகர்.

கயிலாயபரம்பரையிற்சிவஞானபோதநெறிகாட்டும்வெண்ணெய்
பயில்வாய்மைமெய்கண்டான்சந்ததிக்கோர்மெய்ஞ்ஞானபானுவாகிக்
குயிலாரும்பொழிற்றிருவாவடுதுறைவாழ்குருநமச்சிவாயதேவன்
சயிலாதிமரபுடையோன்றிருமரபுநீடூழிதழைகமாதோ. (௧௭)

## வேலப்பதேசிகர்.

எவ்வெவகோட்படுபொருளுமஞ்செழுத்தினடக்கியவற்றியல்புகாட்டி
மெய்வகையஞ்சவத்தையினுமிற்குமுறையோதுமுறைவிளங்கத்தேற்றி
யவ்வெழுத்தினுள்ளீடுமறிவித்துச்சிவபோகத்தழுத்திநாயேன்
செய்வினையுங்கைக்கொண்டவேலப்பதேசிகன்றாள்சென்னிசேர்ப்பாம். ()

## மற்றையசிவநேசர்கள்.

மறைநான்குமபயின்றெருழுகியிட்டிகளும்பலவியற்றிமல்லன்ஞாலத்
திறவாதபுகழ்படைத்துமீசனிடத்தன்பிலரையெண்ணுதுள்ளம்

புறமோதிக்கொலேபயின்றுமதுமாந்துங்கொடும்பாவப்புலேயரோனு
மறவாணன்றிருவடிக்கிழன்பினரேலவரெம்மையடிமைகொள்வரர். (கசு)

கடவுள்வாழ்த்துமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் (உக.)

## அவையடக்கம்.

பொருவில்கச்சியம்புராணம்வண்டமிழினிற்புகலென்
றிருவிலம்புகழ்மணிமதிற்கச்சியேகம்பர்
திருவருட்குரியான்றவர்கூறியசிறப்பா
லுரிமையுற்றெழுமாசையினுரைத்திடலுற்றேன். (க)

மாயைகாரியவுருக்களுமெம்பிரான்வடிவ
மாயவேலவையருண்மயமாகுமற்றதுபோற்
பேயனேன்பிதற்றுரையுமேகம்பர்தம்பெருமை
தூயகாதையுள்ளுறுதலாற்றுகளறத்தோன்றும். (உ)

இழித்தசொற்புணர்த்தெளியனேனியம்பியகவியுங்
கழித்தவைவகையிலக்கணவழுவுச்குக்காட்டாப
பழித்திடாதெடுத்தாளுவர்பல்வகைச்சுவையுங்
கொழித்தநாவினராகியவழுத்தபுகுணத்தோர். (ங)

எழுத்துப்போலியுமெழுத்தெனவாளுவரதுபோற்
புழுத்தநாயினேன்பிதற்றியசெய்யுட்போலியையும்
பழுத்தகேள்வியோர்கைக்கொளவொன்பதுபறறி
விழுத்தநாணினேன்சிவகதைவிளம்புதற்கிசைந்தேன். (ச)

நெறிவழாவுமைபூசனைபோனெறிபிறழ்ந்தோ
னெறிதருங்கலுங்கைக்கொளுங்கச்சியெம்பெருமாற்
கறிவின்மேலவர்காப்பியப்பனுவல்போலறிவின்
குறியிலேன்கவிப்புன்சொலுங்கொள்வதுவழக்கால். (ரு)

அவையடக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் (உசு.)

## சிறப்புப்பாயிரம்.

அருட்பணிக்குரியமகேச்சுரர்முதலாநால்வருந்தருகவென்றறைய
மருட்பகைதமிக்குங்காஞ்சி மான்மியத்தைவழங்குதென்மொழியினுலுரை
த்தான், கருப்பகையிரிக்குஞானமுமேனைக்கலேகளுங்கரிசறப்பயின்ற, மரு
ப்பொழிலுடுத்தவாவடுதுறையில்வாழ்சிவஞானமாதவனே. (க)

ஆ திருவிருத்தம் (உஎ.)

நல்வரின் பெயர். பழைய தாங்கி . பாயிரு 13.

# முதற்காண்டம்.

## திருநாட்டுப்படலம்.

பணங்கொள்பாம்பணிகம்பனூர்பணிவரைபயந்த
வணங்கினோடென்றுமமர்ந்தினிதரசுவீற்றிருக்கு
முணங்கரும்புகழ்க்காஞ்சியையகந்தழீஇயும்பா
வணங்கமேவரும்பாலிநாட்டணிநலம்வகுப்பாம். (௧)

கடல்கடைந்திடச்செல்லுறூஉம்வெளிமால்கடுப்பப்
படலைவெண்முகில்பரவைநீருழக்கிவாய்மடுத்து
விடமெழுந்தெனமீண்டவம்மாயனைவிழைய
வுடல்கறுத்துவிண்ணெறிபடர்ந்தாயெனமீண்டு. (௨)

அறைஞரான்றுமால்கயிலையைச்சரணடைந்தார்ப்ப
பொற்றநந்தியஞ்சாரல்சூழ்பொருப்பினைக்குறுகிக்
கறையவார்சடைச்சுந்தரன்கடவுளானமறானா
முறைநான்முகிலெனவளாமுருவதும்பொதிந்து. (௩)

முரிந்தவெண்டிரைக்கருங்கடன்முகட்டினைக்குழித்து
விரிந்தவெள்ளாரமடுப்புழிக்கரைக்கடன்மேவிக்
கரிந்திடத்தனைசெய்திவடவையின்களைதந்
நெரிந்தவில்லுமிழ்தடித்தெனத்திசைதொறுஞ்சிதறி. (௪)

கான்றவக்கனமீட்டடையாவகைகருதி
வான்றனிற்குனிசிலையெனத்தடையினைவயக்கி
யென்றநீயினியெதிர்த்தனையாயிடினின்னே
யூன்றனோடுயிர்குடிப்பலென்றுருமொலியெழுப்பி. (௫)

அடுத்தடுத்தலைமோதுதெண்டிரைப்புனலளக்க
ருடுத்தபாரிலுன்கிளையெலாமுதலறவொருங்கே
படுத்துநின்வலிபாற்றுவன்யானெனப்பகைமை
தொடுத்தவஞ்சினங்கொண்டழன்மேலமர்தொடங்கி. (௬)

விச்சைமந்திரவலியினால்வீங்குநீர்மழையை
வச்சிரக்கணையாக்கிமெய்வளமெனக்கருளும்
பொச்சமின்மறைவேள்வியும்புனிதனேந்தழலு
மெச்சமாகமற்றெவையுமீண்டிறுகெனவியம்பி. (௭)

காட்டகங்களுங்கழைநரல்கதிர்மணிச்சிமயக்
கோட்டகங்களுங்குளிர்புனற்கழனிசூழ்குலவு
நாட்டகங்களும்பரன்முரம்படுதெரிநடஞ்செய்
மோட்டகங்களுமுழுவதுங்குளிர்கொளச்சொரிந்து. (௮)

இற்றொழிந்தனவொழியமற்றெஞ்சியவெரிபோய்க்
கற்றவேதியர்வேள்வியஞ்சாலையுட்கரப்ப
வுற்றவாகண்டுதன்சினக்கனலையுமொருவி
வெற்றிமாமுரசெனமறைபடப்பேரொலியியாக்கி. (௯)

தனதுகீர்த்தியுந்திறற்பிரதாபமுந்தனைமே
லனல்செய்கோபமுமுல்லையுமெனவெங்குமண்மத்துப்
புனிதமாமலைதன்னையும்பொதிந்துகொண்டென்னப்
பனிவிசும்பினிற்சிவந்துவெண்ணிறம்படைத்தன்றே. (௧0)

வேறு.

உடுவணிகுடுமிக்கோடுபிளவுபட்டுடையப்பெய்யுங்
கொடுமழைக்காற்றுதங்கட்குளிர்பெயன்மாறவெண்ணி
நெடுமலையெடுத்துக்காட்டுநெட்டிதழ்க்காந்தட்கொள்ளி
விடுசுடர்க்கனலியந்தப்புனலொடும்வீந்ததன்றே. (௧௧)

போதமேலாகப்பண்டேபுல்லியமலநோய்தீர்க்கும்
வாதனைதாக்குமாபோன்மழைப்பெயன்மாறித்தீர்க்குங்
காதல்செய்துறையும்புள்ளுமாக்களுங்கவன்றுநெஞ்ச
நோதகமரங்களெல்லாநுண்டுளிதுவற்றுமாதோ. (௧௨)

கனைபெயலெழிலிக்கூட்டங்கவிவிசும்பகடுபோழ்ந்த
நனைமுடிநந்திக்குன்றநளிபடப்பொழியுந்தெண்ணீர்
புனைமறைவசிட்டமேலோன்செருத்தலான்பொழிந்ததீம்பால்
வனைபுகழ்வெள்ளமென்னத்திசைதொறும்வழிந்தமன்றே. (௧௩)

கண்ணகன்குடுமிக்குன்றிற்கல்லெனக்கறங்கியார்த்து
விண்ணிவரேணியென்னவியன்முடிதொடுதுவீழுந்
தண்ணருவருவியெல்லாந்தலைத்தலைவிரிந்துசென்று
புண்ணியப்பாலியாற்றிற்சேர்ந்துடன்போயமாதோ. (௧௪)

பாரிடங்குழித்துவீழும்பல்வயினருவியெல்லா
மோரிரும்பாலியாற்றினொருங்குசென்றணையுந்தோற்றஞ்
சீரியபுவனந்தோறுஞ்சிதறியவினைகளெல்லா
மோரிடத்தொருவனறன்பாலுடங்குசென்றுறுதல்போலும். (௧௫)

விலகிவீழருவித்தாரைவேறுவேறாகவோடிக்
குலநதிப்பாலிவைப்பினேகமாய்க்கூடுந்தோற்ற
மலகில்பல்வழியுமுதாரணிமையினொன்றுமாறும்
பலபலமதமுமீற்றினொருவழிப்படலும்போலும். (௧௬)

மலைநலைகத்தனையகாட்சிவயின்வயினருவித்தாரை
சிலையினின்றிழிந்துமண்மேற்றிரண்டுசென்றணையுந்தோற்ற
முலவையோடிகலிச்சேடனுயர்வரைக்குடுமியெல்லாம்
பலதலைவிரித்துப்பொத்திக்கிடந்தவப்பான்மைபோலும். (௧௭)

குணாபுனற்றெண்டைநாட்டைக்குறும்பெறிந்தடிப்படுத்துப்
புணாதயநடாத்துகென்றுப்புதுமுகிலரசனந்தி

# ௯. திருநாட்டுப்படலம்.

வரைமிசையிருந்தவேந்தாமணிமுடி சூட்டியுய்ப்பத்
துரைபடுபாலியல்லேசிலையினின்றிழிந்துபோந்து. (௧௮)

அரசுகள்சூழ்ந்துசெல்லவருங்கணிமலர்வாய்விள்ளச்
சரிதழற்குமயின்றார்கள்பற்பலதானைவெள்ளம்
விரவிடப்பரியகாலாண்மேருகுமாக்களத்தி
யிருபுடைசமூவிப்போதலிகல்கொடுவையமூர்ந்து. (௧௯)

அணிவருக்கெழுந்தன்றாரும்பெறற்குறிச்சிபுக்கு
மணிவகையாரமபூண்டுமெத்தக்கடவிருந்துமாநதிக்
தண்வறகொளிக்கொண்டேகிநிலத்தலைவெட்டம்போகித்
துணிபடமாக்களெல்லாநசோலைத்தடனீர்த்துச்சென்று. (௨௦)

வேறு.

மண்டமர்மேல்கொடுவெந்தனமின்னே
தண்டகநாட்டுறைதாபசர்நோயோர்
பெண்டிருறுமமாணேருதிறபெட்டென்
றெண்டிசையார்ப்பயிசைபபறைசாற்றி. (௨௧)

இருற்றிவிரிபபடைதாங்கியிபக்கோ
டருத்திறலவெஞ்சிலைகார்த்தளரும்பு
கருப்பயில்கோளெனவேந்திகல்வீர
மருபபகைமாய்த்துறவெட்டிமலைந்து. (௨௨)

முல்லைபின்வேந்துமுடித்தகரந்தை
யொலலையலைத்துயரானிரைபற்றி
மெலலிநழ்தின்றுசிவந்தெழுவேய்த்தோ
ணல்லவர்கற்பையழித்துநடந்து. (௨௩)

வஞ்சிமலைநதழல்பாலையைவாட்டி
யஞ்சியிடாததன்றுணையிருத்தி
யெஞ்சலுருமருதந்திறையோடும்
வெஞ்சமரோற்றுழிஞைத்துணைவேய்ந்து. (௨௪)

தடுத்தெதிர்நின்றதடங்களையெல்லாம்
படுத்துமதன்பயில்பாசறைவீட்டி
மடுக்குளமேரியினவாட்டமனைத்துங்
கெடுத்தனமென்றுதழீஇக்கிளர்வுற்று. (௨௫)

வீறியடாவகைவெஞ்சிறைகோலித்
தூறிடுமள்ளர்தொலைந்தழிவெய்தச்
சீறியடர்ந்தெழித்துமுள்வேலி
சேறிவளைந்துகிடங்கினைநீங்கி. (௨௬)

கொச்சியைமுற்றியக்கொச்சியினுள்ளார்
பச்சிளகொச்சிபதித்தணியாமே
நச்சியதும்மைநறுந்துணர்சூடி
யச்செழுமாமதின்முற்றுமகிழ்ந்து. (௨௭)

வேறு.

இடித்துவெளிசெய்துககொங்கணுறுமைந்தான்
கடுத்தமடவார்வயிறலைத்தனரிரங்கக்
கொடுத்திடுவளங்கள்பலகொள்ளைகொடுமெண்ணி
னெடுத்துவருவெள்வரகுங்கொள்ளுடனிறைத்து. (௨௮)

வெற்றிபுனைமாலிகைமிலைச்சியிருபாலுஞ்
சுற்றிவருபுட்குலநிரைத்தொழுதிதன்னூற்
கொற்றமிகுமார்கலியைநோக்கியறைகூவி
யெற்றுகழிநெய்தல்வழியெய்துறுதலோடும். (௨௯)

பௌவமதுணர்ந்துபவளந்தரளமாதி
வெள்ளவுதிரையேந்தியெதிர்கொண்டடிவணங்கச்
செவ்விதினுவ[illegible]பயமீந்துசினமாறிக்
கௌவியமெய்யன்பொடுகலந்துளதையன்றே. (௩0)

வேறு.

தன்னடிப்படுத்துமேலைத்தண்டகநாடுமுற்று
முன்னுறக்கவர்ந்துகொண்டவளத்தினுமுவிர்ட்டிற்
பின்னுறவளித்துவாணிற்புலவரும்பெட்குமாற்று
லந்நிலையுயிர்களோம்பியரசுசெய்துறையும்பாலி. (௩௧)

காரணப்பொருளின்றன்மைகாரியத்துளதாமென்ன
வாரணப்பனுவல்கூறுமரும்பொருடெளியத்தேற்றும்
பேரிசைப்புவிமேல்யார்க்கும்பெட்டனபெட்டவாறே
சீரிதிற்கொடுக்குந்தேனுத்தரவருஞ்செழுநீர்ப்பாலி. (௩௨)

வறுமையுற்றுழியுந்தொண்டைவளமலிநாட்டோர்தங்க
ளிறுமுடல்வருத்தியேனுமீவதற்கொல்காரற்றே
தெறுகதிர்கனற்றும்வேனிற்பருவத்துஞ்சீர்மைகுன்று
துறுமணலகடுகீண்டுமொண்புனலுதவும்பாலி. (௩௩)

சொற்றவித்தீர்த்தமேன்மைசுவைபடும்பாலோடொக்கு
மற்றையதீர்த்தமெல்லாம்வார்தருபுனலோடொக்கும்
பெற்றிமையுணர்ந்துதொல்லோர்பெயரிடப்பட்டசீர்த்தி
பற்றியதெனலாம்பாலிப்பெருமையார்பகருநீரார். (௩௪)

வேறு.

விளம்புமித்தலைமணிகொழிவிரிதிரைத்தரங்க
வளம்புனற்றடம்பாலியான்வண்மைபெற்றோங்கி

* கலைபடு
+ குடைவேல்
[illegible]

நெருங்குலைபந்தழைவருக்கமேனெடுவெளியலைப்ப
வருங்கண்மாமயில்வீற்றிருந்தசைதருங்காட்சி.
கருங்கணாயிரச்செம்மறன்மருகனைக்காண
மருங்குவந்துதன்னூர்தியைநிறுவுதன்மானும். (௪௪)

சந்துமாரமுந்தாங்கிவம்பலர்ந்ததண்குவட்டான்
மைந்தர்கண்ணையுமனத்தையுங்கவர்ந்திடும்வனப்பின்
மூந்துமோங்கலுங்கொடிச்சியர்குழுக்களுமுகிறோய்
கந்தமார்குழைமுகத்தலரிலவங்கங்காட்டும். (௪௫)

கொங்கையேந்தியவாண்களுமவணகொம்புடைய
துங்கவேங்கையின்குலமெலாமவணபால்சுரந்து
பொங்குநீடுசேவினங்களுமவணவானபுனலை
யங்கண்வேட்டுணுமொற்றைத்தாளெகினமுமவண. (௪௬)

ஆணெலாமொருகன்னியைமணப்பவான[illegible]யுங்
கோணைவேங்கைகள்யாட்டினோடுறவுகொண்டோங்கும்
பேணுசேவினஞ்சிங்கமேலேறிடும்பிழையா
தேணினூறபொலியெகினங்களிடபத்தைவிழுங்கும். (௪௭)

வில்லலர்ந்தபல்லுடுககளும்விண்ணெறிப்படருஞ்
செல்லும்வெண்கதிர்க்கடவுளும்பானுவுந்திறல்சான்
மல்லல்வானவக்குழுவுமெய்ப்பாறவாதிருக்கு
மில்லமெங்கணும்வான்றொடவிழைத்திடுந்துன்றம். (௪௮)

போதுமூன்றினும்போதுசெய்காவிசூழ்பொருப்பு
மேதகுந்தமிழ்க்கெல்லையாம்வேங்கடவரையுங்
காதல்பூப்பலத்தாணிகொண்டறுமுகக்கடவுள்
சோதுநீத்தரசாட்சிசெய்குறிஞ்சியக்குறிஞ்சி. (௪௯)

அன்பெலாமொருபிழம்பெனத்திரண்டகண்ணப்ப
னெமபிராற்கொருவிழியிடந்தப்புகாளத்தி
பொனபிறங்கியமுகலிசூழ்கயிலையம்பொருப்புந்
தனபுலத்திடையுடையதுதடவரைக்குறிஞ்சி. (௫௦)

நாவன்மன்னவர்க்கிரந்துசோறளித்திடுநம்மான்
றேவியோடமர்திருக்கச்சூர்திருவிடைச்சுரமும்
பாவகாரியரெய்தோணுக்கழுகுசூழ்பறம்பு
மேவரத்திகழ்குறிஞ்சியின்பெருமையார்விரிப்பார். (௫௧)

பாலை.

குராவளித்திடுபாவையைக்கோங்குபொன்கொடுத்துப்
பராரைப்பாடலம்பூத்தழறபாங்கரின்மணப்ப

மராமரத்துளர்வண்டுபண்பாடவன்முருங்கை
விராவிவெண்பொரியிறைத்திடும்வியப்பினதொருபால். (௫௨)

எயிற்றிமாவொழினலத்தினுக்கிரியல்போயுடைந்தாங்
கயற்பொதும்பர்புக்கலர்குராப்பாவைகண்டவர்தங்
துயிற்றுசேயெனக்கவன்றுபோய்த்தூதுணம்புறுக்கள்
வெயிறறலைக்கணின்றுயங்குவநிலைமைவிண்டவர்போல். (௫௩)

தூதுணம்புறவினமெலாந்துணையுடன்கெழுமிப்
போதலூடியுமுணர்த்தியுந்தலைத்தலைப்புணர்ந்து
காதலநலார்மொழியையுங்கடந்துசேணிடைச்செ
லேதிலாடவர்தமைச்செலவழுங்குவித்திடுமால். (௫௪)

வெங்கதிர்ப்பிரானண்பகற்போதினில்வேனின்
மங்கைகொங்கைதோய்ந்தளித்திடும்பாலையாமைந்த
னங்கணுனிலவரசர்பாலிருந்துவன்முரமபு
தங்குழுழலிற்சிற்றரசாள்வதுமுளதால். (௫௫)

முல்லை.

நவிலுமிந்நிலப்புறம்பயில்புறவநனமடந்தை
குவிவருந்தழல்வெம்மைகூர்கொடும்பசிதணியச்
செவிலியாய்முகிறீம்பயமூட்டிடவளர்ந்தாங்
கவிழுநீள்வரகாதியாமகப்பயந்தளிக்கும். (௫௬)

கொல்லையெங்கணுங்கொழுமலர்த்தைபுனமுருக்கின்
முல்லைமென்கொடிபடர்ந்தலர்ஙிளாஙிளாமுகிழ்ப்ப
வல்லைவென்றகந்தரப்பிரானரக்கெறிமார்பிற
றொல்லைவெண்டலைமாலிகைதுயல்வரன்மானும். (௫௭)

நீலம்பூத்தலர்பூவையைக்கோட்டுநீள்கரத்தாற்
கோலம்பூத்தபொற்கொன்றைகடழீஇகிடந்தசைவ
வாலம்பூத்தருண்மிடறறினனன்றுமோகினியாஞ்
சீலம்பூத்தமாவிளமுலைதிளைப்பதுதெளிக்கும். (௫௮)

பெண்ணலங்கனியிடைக்குலப்பிடிநடைமடவார்
விண்ணலங்கனிமாதரையெழிலினால்வென்று
பண்ணலங்கனிமிடற்றவர்பணைத்தமூக்கரிந்து
மண்ணிலெங்கணுநாதூக்கிவைத்தெனக்குமிழ்மலரும். (௫௯)

மௌவலங்குழலார்விழிக்குடைந்துவான்குதிக்கு
நவ்விமீண்டகலாவகைமகளிரானனத்துக்
கொவ்வுறுதவராணையிற்றிரியுமொண்மதிகண்
டவ்வுழித்தனதிருக்கையிற்சிறைப்படுத்தலைக்கும். (௬௰)

கற்றைவார்குழலாய்ச்சியர்கயல்விழிமுகத்தின்
பெற்றியொப்புறப்பெருங்குருந்தச்சிமேறழுவி
யொற்றைமானுடைக்கலைமதியதனிழலுறங்கு
மற்றைமானையும்பற்றுவானகதிர்க்கையாலவருடும். (௬௧)

நலம்பயின்றிளவேனிலினவிலுமாங்குயில்க
ளலம்புகார்வரும்போதுவாயடைப்பதுமுன்னாட்
புலம்புகொண்டவர்காரொடுந்தலைவர்தேர்புகுத
வலம்புனைநறுணைவளமொழிகிடைதலானன்றே. (௬௨)

தொண்டைமான்கடக்களிற்றினைமுல்லையாற்றொடக்கி
யண்டர்தம்பிரான்வெளிப்படக்காட்சிதந்தருள்சீர்
கொண்டவானபதிமுதற்பலதனியிடங்குலவக்
கண்டமுல்லையின்பெருமையாரகட்டுரைத்திடுவார். (௬௩)

மருதம்.

பொலஞ்சிறைச்சுரும்புளர்தருகுறுஞ்சுனைப்புறவ
நிலந்தனைப்புடையுடுத்ததுநெட்டிளவாளை
யிலஞ்சிநின்றுமீப்பாய்ந்துவெண்மதிகிழித்தேகிந்
தலங்கொள்வானியாற்றலவுபூந்தடம்பயின்மருதம். (௬௪)

ஒருவனாகியசிவபிரானுலகுயிரளிப்ப
கருணைகூர்ந்துமுன்னவந்தருபேதமுங்காட்டுந்
திருநிகர்ப்பவோர்பாலியேயுவயல்வளஞ்செழிப்பப்
பெருகுதண்புனல்பற்பலகால்களாய்ப்பிரியும். (௬௫)

பிராணமூலமேற்பணைகிளைவளாரெனைப்பலவும்
விராவியொன்றிலொன்றனந்தமாய்க்கவடுவிட்டென்னத்
தராதலம்புகும்பாலியிறபிரிந்துதண்கனைக்க
ணராவுகால்களுமவைதருகால்களுமனந்தம். (௬௬)

நான்முகப்பிரான்வேள்வியைத்தபவருநதியை
மான்மறுத்திடைக்குலையெனக்கிடந்தவைமமா
மீன்முகப்பெருங்காற்புனற்பவீழ்ந்துழக்கும்
பான்முலைக்கருமேதியாற்பருமடையுடையும். (௬௭)

பழங்கண்வேனிலைப்புயல்கொடுபோற்றுதன்னிறைக்குத்
தழங்குமோதையின்மருதம்வாழ்த்தெடுப்பதுதகைய
வழங்குதண்ணுமையோதையுமள்ளரார்ப்பொலியு
முழங்குதீம்புனற்சும்மையுமுடுகிவிண்புகுமால். (௬௮)

பொறிகலிங்கதையும்புறஞ்செலாதடக்கியோர்நெறிக்கே
குறிகொளும்படிசெலுத்துபேரளர்தங்கோள்போற

மரகதந்தளிர்த்தெனவளர்பைங்கூழ்செறி
தரநிறைகழனியுட்சங்கமூர்வன
பரவைநீரமேய்ந்தெழும்படலைகொண்டலுட்
சரமதிறழைந்துசெல்காட்சிசாலுமால். (௭௮)

களமர்கள்களைகளைபருவங்காட்டலு
மிளமயில்வயல்வளங்காணவெய்தியாங்
குளமகிழ்கூர்தரவுழத்திமாரெலாம்
வளமலிபணைதொறும்வந்துமுற்றுவார், (௭௯)

அம்புயமுற்பலமாம்பலாதியாம்
பைம்புதறகளையறப்பறித்துதம்முருக்
கொன்புனற்றோன்றலுங்கொய்தபுன்களை
பின்பினுமுளைப்பதெனபெயர்த்தென்பார்சிலர், (௮௦)

பங்கயமாம்பலுற்பலத்திறந்தேனுண்டு
தங்கியவண்டினந்தமதுவாண்முகஞ்
செங்கனிவாய்விழிசேர்ந்தமூசுற
வங்கலைகட்டெறிந்தகற்றுவார்சிலர், (௮௧)

பாயிதழ்த்தாமரைபறித்தங்கொப்புமை
யாயுநொனமுகஞ்சேர்த்திமைதுதேன
வாய்மடுத்திணையிலதென்றுமாற்றலயோன்
மீயுயாகளைப்புறம்வீசுவாரசிலர், (௮௨)

இணைவிழிக்கிணையிலையென்பதன்மையி
னனுகிநீகாணெனவழைத்துககாட்டலபோற்
பிணையுநாசியினெதிர்பிடித்துமோந்துதேன்
றணிவிலுற்பலமுடிசார்த்துவார்சிலர். (௮௩)

சைவலங்களைகுவான்குனியத்தாழ்குழ
லெய்தியெம்மினத்திணையொறேன்மினென்பபோற்
கையிசைவிழுந்துசிக்குண்ணக்காணியீர்ந்
தையபூங்குழன்முடித்தணைகின்றார்சிலர். (௮௪)

நறுமலர்ப்பங்கயங்களையகாரியர்
கறுவொடுமுள்ளரைக்காம்புயற்றலுந்
தெறுகரங்கிழியப்புண்செய்யுமேதமக்
கிறுதிசெய்வார்கெவரிடரிழைத்திடார். (௮௫)

அலமருவிழியினமாமெனுமுக
மலர்மிசைப்பாய்தருகயலுமாண்டதன்
குலமெனப்புறவடிகூடுங்கூர்மழு
மிலவிதழ்க்கடைசியரொளிதிற்கைக்கொள்வார் (௮௬)

உவகைமீதூரவின்னோர்க்கோதினனிதனைவேண்டிச்
சிவனடிபரசினின்னேதிருவருள்சுரக்குமென்று
அவரொடும்போந்துகாஞ்சியணிநகாவடமேல்பாங்கர்த்
துவரிதழுமையாள்போற்றுஞ்சுடரொளியிலிங்கங்கண்டான். (ச

சேயிழைக்கவுரிசெங்கைதைவரச்சிவந்துதோன்றிப்
பாயொளிப்பவளக்குன்றெனப்பெயர்படைத்துநான்கா
மாயிரமுகங்களங்கணருந்தவர்வழுத்தலவரு
நாயனார்தமைக்கண்டோறுநாரணனிறும்பூதுற்றான். (ரு)

நிறைபெருங்காதல்கூரவாயிடைநியமம்பூண்டு
மிறைவழியிகந்துபாசுபதத்தனிவிரதமாற்றி
முறைபெறுவெண்ணீறங்கமுழுவதும்பொதிந்துபாசப்
பொறைதவிர்த்தருளுமும்மைபுண்டரநுதலிற்றீட்டி. (சு)

கண்டிகைமாலைபூண்டுகதிரொளிபரப்புமாழித்
திண்படைபெறுதல்வேண்டிச்சங்கற்பஞ்செய்துகொண்டு
விண்டலத்திமையோரங்கண்வேண்டுவவெடுத்துநல்க
மண்டுபேரன்பாற்பூசைவிதியுளிவழாதுசெய்வான். (எ)

மாயிருங்கமலப்போதுகைக்கொண்டுமாட்சிசான்ற
வாயிரந்திருநாமத்தானித்தலுமருச்சித்தேத்தி
மேயினன்றிருமாலன்னோன்பத்தியின்விளைவுகாண்பான்
பாயிரமறைகடேறும்பரம்பொருளொருநாளங்கண். (அ)

வேறு.

நறைவாருமிதழ்த்துழாய்த்தொழும்பொருட்டுநவினமாயிரத்திலொன்று
மறைவாகத்திருவுள்ளம்வைத்தருளக்கருவிமுகிலவாட்டுமேனி
யிறையோனும்பண்டுபோற்பவன்முதலாமாயிரம்பேரொடுத்துக்கூறிக்
குறையாதபேரன்பிற்பதுமமலர்கொடுபூசைபுரியுமெல்லை. (கூ)

பண்ணுமொருதிருப்பெயர்க்குநறுங்கமலங்காணாமைபதைத்துநோக்கி
யென்னினிமேற்செயலென்றுதெரிந்துணரான்றனதுவிழியிடந்துபெம்
மான், கொன்மலர்த்தாண்மிசைச்சாத்தினிக்கனிகூர்ந்தானுறுபயினையுங்கொ
டுப்பதல்லான், மென்மையுறத்தாங்கொண்டவிரதத்தைவிடுவர்களோகொ
ள்கைமேலோர். (க௦)

பூதிலகுமழுப்படையோன்மாயவன்றனன்பினுருப்பாடுநோக்கி
மாறிலாதபெருங்கருணையூற்றெடுப்பச்செழுஞ்சோதிமலரப்பாங்கர்
நூறியோசனையளவுமெரிகொளுநநோக்கரும்பேருருவுதாங்கி
யீறிலாக்கதிரிரவிமண்டிலநின்றிழிந்தெதிரேகாட்சியீந்தான். (கக)

இறைவரவுகண்டஞ்சிப்புடைமருவுமிமையவரோட்டெடுப்பநோக்கி
நிறையுவகைதலைசிறப்பத்திருநெடுமாலிருநிலத்தின்வீழ்ந்துதாழ்ந்து
முறைமையினுலட்டாங்கபஞ்சாங்கமுறவணங்கிமுடிகையேற
மறைமொழியிற்றுதித்தாடியானந்தவிழிமாரிவெள்ளத்தாழ்ந்தான். (கஉ)

ஆங்கவனையெதிர்நோக்கிநின்பூசைக்குகமகிழ்ந்தேமுனக்கிஞ்ஞான்று
தேங்கமலவிழியளித்தேம்பதுமாக்கனெனும்பெயரிற்றிகழ்வாயிவ்வூர்
பாங்குபெறுதிருமாற்பேறெனப்பொலிகவென்றருளிப்பானுகோடி
தாங்குகதிர்ச்சுதரிசனப்பெயராழித்தனிப்படையுமுதவியெங்கோன்.

வெல்லரியசெறுநரையுமிப்படையால்வெல்வாயாலீண்டுநின்றாற், சொல்லியபேராயிரங்கொண்டெமைப் பூசைபுரிவார்க்குத் துகடீர்த்தென்று, மெல்லையிலாவீடளிப்பேமிங்கிவையன்றியுந்தீண்டச்சிவந்தாராதிப், பல்குபெயர்கொண்டெம்மைத்தொழுவோருமுர்த்தியினிற் படர்வாருண்மை.

தணிவொன்றுமனமுடையார்புகழ்தீண்டச்சிவநதபிரான்சாதரூபர்
மணிகண்டர்தயாநிதியார்பவளமலையாவாட்டநதவிர்த்தார்பாசப்
பிணிவிண்டசாகிசனர்திருமாறகுப்பேறளித்தாரெனும்பேரொட்டு [ன்.
மணிகொண்டவாயிரமபேர்க்கொபபனவாமறிமதி யென்றருளிச்செய்தா

நம்பிரான்வாய்மலர்ந்தமொழிகேட்டுப்புண்டரிகநயனத்தோன்றல்
செம்பதுமத்தாளிறைஞ்சிச்சென்னிமிசைக்கரங்கூப்பிசெந்நின்றேத்தி
யெம்பிரானிநநகருட்கணெப்பொழுதுவதிந்தவர்க்குமிறவாவாழ்க்கை
யும்பாவீடளித்தருளாயின்னுமொருவரமடியேறகுதவாயென்று. (கக)

வள்ளலேயென்பூசைகொண்டருளுமிவ்விலிங்கம்வணங்கப்பெற்றோர்
பள்ளநீர்வரைப்பினுளசிவலிங்கமெவ்வெவையும்பணிநதபேறு, கொள்ளவருளெனவேண்டவேண்டுவார்வேண்டியதேகொடுக்குமெங்கோ, னெள்ளருஞ்சீர்நெடியோனுக்கவையனைத்துமருளசெய் தவ்விலிங்கத்துற்றான்.

கொழிக்குமணித்தடந்திரைநீரிலஞ்சிதொறுமினவாளைகுதித்துபபாயச்
செழிக்கும்வளம்பொழிற்காஞ்சிப்பலதளியுண்மே தகையதிருமாற்பேற்
றின, வழிச்செலவினொருபோதுவதிந்தவருமாறுதபிறவிபபாச, மொழிப
பரூணிலெஞ்ஞான்றுமதங்குறைவோர்தமக்கினியென்னுரைக்குமாறே.

திருமாற்பேற்றுப்படல முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-கருகக.

## [illegible], பரசிராமீச்சரப்படலம்.

சுழிபாடுபடுமுர்திமலைமகளும்யோகியருநதுழாயினுறும்
வழிபாடுசெயவைகுமணிகண்டர்மாறபேறுவகுத்தாம்பணைகள் [ம்வநதர்
கொழிபாடற்சுரும்பினஞ் சூழ்மருப்பொதும்பாமாற்பேறறின் குணபால்
பழிபாடிக்கொலைசெய்தோன்பரசிராமீச்சரத்தின்பான்மை சொல்வாம்.

சிவம்பழுத்தபிருகுமுனியிடுஞ்சாபத்தொடர்ச்சியினாற்றிருமான்முன்னாட்
டவம்பழுத்தாலனையசமதக்கினியோடிரேணுகைக்குத்தநயனாகி
யவம்பழுத்தகுறும்பெறியுமிராமனெனவைகுநாளனைபாலோர்
நவம்பழுத்ததிங்குணர்நததன்றாதைதனையேவநாடித்தேறி. (உ)

தாதைமொழிகடவாமைதருமமெனத்தனையீன்றுவளர்த்ததாயை
யேதமுறக்கொலைசெய்துமுனியருளான்மீண்டுய்யவெழுப்பிநின்றான
மேதகையமுனிமகிழ்ந்துவெகுளிதனையறவிடுத்துச்சமாதிமேவும்
போதவனைவெகுண்டெய்திக்காத்தவீரியனகோறல்புரிந்தான்மன்னோ.

மிடல்படைத்ததிரடிண்டோளிராமனாநோக்கிநெடுவெகுளிமீக்கொண், டடல்படைத்தவயவேந்தர்குலமுழுதுமிறுப்பேனென்றார்த்துப்பொங்கிக், கடல்படைத்தவிடமயின்றோனருளவேண்டிவிரைந்தெய்திககலந்தார்தங்க, ளுடல்படைத்தபேறெய்துங்காஞ்சியிலோரிலிங்கமமைத்தருச்சித்தேத்தி. (௪)

ஆற்றரியதவமாற்றியைம்புலனுமகத்தடக்கியமர்ந்தானாகக்
கீற்றிளவெண்பிறைக்குழவிதவழுநெடுஞ்சடிலமுடிக்கிழவோனாங்கண்
மாற்றரும்பேரருட்கருணைகூர்ந்தருளியவனன்பின்வாய்மைகாண்பான்
றோற்றமுறுமறைதேறாத்திருவடிகணிலநதோயவருகின்றானால். (௫)

வேறு.

மால்வரையீன்றவயங்கிழைமாது
நூல்வரைமாபுடைநோன்றகைமாவும்
வேல்வலனேந்தியவித்தகனுந்தன்
போல்வடிவந்தழுவிப்புடைநண்ண. (௬)

நான்மறைவள்ளுகிர்நாய்புறஞ்சூழக்
கான்மலர்சேர்ந்தசெருப்பெழில்காட்ட
வூன்மலிகாழகமீதினுறுத்த
தோன்மலிகச்சணிதோற்றிவிளங்க. (௭)

ஏரியல்கொண்டசுவன்மிசையிட்ட
வாரினனுட்குநடையினன்மாணச்
சீரியல்கோக்கொலைசெய்புலையன்போ
லாரிருண்மைத்தனமேனியனாகி. (௮)

வெங்கதிருச்சியின்மேவியகாலை
யங்கலுழ்பூம்புனலாற்றிடையெய்திப்
பங்கமில்செய்வினைப்பான்மைதொடங்கும்
புங்கவமாதவன்றன்னெதிர்போந்தான். (௯)

கொட்குமனத்தலையொருக்கியநொள்கை
வட்குறவைம்பொறிவாட்டுமிராமன
கட்கமழ்கின்றகளிப்பினனாகித்
துட்கெனநேர்வருசோதியைநோக்கா. (௰)

வாய்திறவாதுமலர்க்கையசைப்பிற்
சேயிடையேகெனச்செப்பலுமுக்க
ணாயகனண்மையினண்ணினன்போபோ
நீயெனவிள்ளவுநீங்கலனாகி. (௧௧)

வேறு.

மாயமென்றுரைநான்முகன்மனக்குறனிசேயோ
னாயவிறைசாலவனிமைக்கணுறலோடும்
தூயமுனிசீற்றமொடுசொல்லுமறவாய்மை
போயபசுவூணுகரிழிந்தபுலையாகி. (கஉ)

தருக்குறுமவனெனையிகழ்ந்தனனடமறுசெய்வா
ரொருத்தரிவணில்லையெனவுன்னியிவைகொலென்றான்
மருத்துணர்நெஞ்சடைமறைத்துவருபெருமா
னருத்தமறைநாய்கடமையேயினனவனபால. (கங)

கொற்றவடிவேற்கடவுள்கோனிபமுகத்தோ
னுற்றெழுவெருட்சியரிசேருடியிருமையும்
பற்றினர்களாய்புடைவளைப்பவிருபாலர்
வெற்றியுறுகைப்பவெழுக்சவனைநோக்கி. (கச)

வேறு.

அந்தோபாவமையமிரக்குமபாரப்பானி
சொந்தாய்போலுமென்றுரைவன்றனக்கிமலையிறபுத்
தந்தாள்வெவ்வாய்நாயைவிலக்கத்தவனோன்பி
னந்தாவாய்மையிராமனுநம்மானைமுகநோக்கி. (கரு)

வேறு.

எனைப்புடைபுறாய்நின்பெயசொனூசீறனன்று
னுனக்கிதுபாவஞ்சொணைவெங்கோறுபாவ
நினக்குளதோசொலெனக்குளதோநானயானோ
வெனக்கொருகேளபோற்றேன்றிடுகின்றுயெனவன்றேன். (கசு)

என்னிதுசொறறனையானசமதக்கினியென்பான்ற
னன்மகனுருவஞ்புலையோனெனைநீரணமே
யுன்னுறவாகவுமாத்தநனொறனவொப்பில்லான்
மன்னியசீர்ச்சமதக்கினிதனமகனீயேயோ. (கஎ)

கழியவெனக்குறவாயினையையமிலைக்கண்டா
யிழிவறநின்னையளித்தகவிரோனுகையென்பாளென
பழுதறுசீர்மனையாட்கினியாளாம்பரிசாலே
விழுமியநீயுமெனக்கினியாய்காணெனவிண்டான். (கஅ)

இராமனொருப்பெழநோக்கிவெகுண்டனனெல்லாரும்
பராவுறுவேதியனென்னெதிர்பார்த்திதுசொற்றுய்க்கு
விராவியதண்டமுனக்கரிவிக்குமதேயன்றித்
தராதலமேற்பிறிதில்லெனவோடுந்தலைவன்றான். (ககூ)

யாவருமச்சுறுதாய்கொலையென்றுசெய்மாபாவி
யோவிலருட்குணமொன்றிலையென்புடைவல்லாயே
னுவரிவாய்சிரமும்மரிவாயினிநாணுய்கே
ளோவறுகேளிர்தமைத்தழுவாதவராருள்ளார், (உ0)

பாம்புடனேறும்பழைமைமலிலக்கார்தமரானோர்
வேம்பினையொப்பக்கைப்பினும்விள்ளாருலகத்தோர்
தோம்பலபேசிச்சுற்றம்வெறுக்குங்கொடியோனைத்
தேம்பிடும்வண்ணஞ்செறிடல்வேண்டுமெனவெம்பி. (உக)

சுணங்கனையெல்லாமேற்செலவேவித்தரிசோதிக்
கணங்கெழுகல்லுமோடுமெடுத்தக்கடிதோச்சி
யணங்கொருபாலானெறிவழியம்மாமுனிவெந்தீ
யிணங்கவெருண்டானறன்மெய்நான்புடைவீசி. (உஉ)

ஞாளிகடம்மைப்பதுக்கினனள்ளலருர்செற
மீளியின்மேற்செலவிட்டனவேழமுகக்கோனைக்
கோளுறுதண்டமுரித்திருகூறுபடுத்திட்டான
சாளியொடாடியகண்ணுதலவெய்யகதங்காட்டி. (உங)

வன்மொழிகூறியபுலையர்தொழுத்தைமகனும்
வெள்மகனேவத்தண்டமெரிந்தாய்தெய்வத்தா
லன்னதுபக்கத்தாய்கொலையஞ்சாயருளில்லாய்
நின்னையிவிக்கொல்வேனெனநேர்ந்தானகரமோச்சி. (உச)

நேர்ந்திடுகாலையினீண்மறைஞானிகண்முன்னாகச்
சார்ந்துதுரத்துமுடுக்கமுமத்தரையானைச்சங்
கூர்ந்தபதைப்புடனோடினன்வெண்சிறுகூன்றிங்கள்
வார்ந்தசடைப்பெருமானுமவிரைந்துதொடர்ந்துற்றான். (உரு)

வேறு.

ஒற்றையங்கரத்தாற்பற்றிக்கோடலுமுடையான்றீண்டப
பெற்றுமெய்ப்புளகம்போர்ப்பப்பேரிதுளமகிழ்ந்தானிச்சீர்ப்
பற்றியுமிழிஞன்றீண்டப்படுபெருஞ்சங்கைகொண்டு
முற்றவெந்துயரின்மூழ்கிவெருண்டனனமொழிதலுற்றான். (உசு)

மறிகடல்வரைப்பின்யாங்கணுமினுமறையோன்றன்னைப
பொறியிலியிழிந்தவாழ்க்கைப்புலைமகன்வெருவராமே
செறியழுக்கடைந்தசையாற்றீண்டிமேயவ்வச்சாதி
பிறிவினிற்பிறழாவண்ணம்பிறன்குகடாத்தங்காலை. (உஎ)

இன்னினியுனதுசென்னியிறுவதாதேறறங்காண்டி
புன்னெறிக்குலத்தோயெனனபுகன்றுதன்றுளத்தேவெம்பிப்
பன்னரும்புலையன்றானபாறபட்டேனைநதோசிசி
யென்னுடைத்தவமும்யானுமழிந்தவாறெனப்புழுங்க. (உஅ)

விழிபயினுதலுமுங்கீர்விடம்பொதிமிடறுங்கூர்வாய்
மழுமறிக்கரமுஞ்செங்கேழ்வடிவமுங்கரந்துசாலக்
கழிபுலைவேடந்தாங்கியெழுந்தருள்கருணைத்தோன்ற
விழிவறுபிரமன்கூற்றுச்செவிமடுத்திணையசொல்வான். (உகூ)

வடுவறுமறைவலாளர்மரபினையெனில்யான்றீண்டப்
படுகுவையல்லைநீதான்பார்ப்பனக்கடையனுவை
யடுதொழிற்புலையன்யானவ்வொழுக்கினிற்பிறந்தவாற்று
லிடுகிடைத்தாயைக்கொன்றோயெனினுங்கடையனீகாண். (௩௦)

இழிஞருக்கிழிஞனுயெனக்குநீயடிமைபெய்திக்
கழிபெருமகிழ்ச்சிகூரவாயுனக்கியாவைகளைகளுவேன்
மொழிவதுசரதமென்றனவகைமுனிவன்கேளாப்
பழியுறுகதையிறுக்கப்படுமரவெனப்பொங்கி (௩௧)

அன்னவைமலர்க்கையோசசியடித்தனனமாரசோரப்
புண்ணியமுதல்வன்றானும்பொருகெனமுனிவன்றனைத்
திண்ணியவிரண்டுகையுஞ்சிக்கெனவொரு [illegible] டி
கண்ணறக்கொடிறுவீங்கப்புடைத்தனன் [illegible] யால். (௩௨)

முறைமுறையதிரத்தாக்கியிருவருமுனைந்தவெம்போர்
மிறையுறப்புரிந்தோடுமேலவியறபிராட்டி [illegible] ாக்கி
யிறைவனின்னடிக்கீழன்பினினியவனவருந்தாவண்ணம்
பொறைகொளப்புடைத்தியெனருள்புரிந்தனுமெலிதிற்றுக்க. (௩௩)

கடனறிமுனிவன்வாகைதனதெனக்கருதிவாங்கும்
வடவரைச்சிலையோனமார்பிறகரங்கொடுவலிதிற்றுக்கி
மிடலுறத்தெழிந்தானுகவிண்ணவர்க்கரியகோமான்
கெடலருஞ்சினமீக்கொண்டானபோனமறைக்கிழவன்றன்னை. (௩௪)

கன்றிடக்கரங்கள்காலிற்பிணிப்புறக்கட்டினானறு
ளொன்றினுலுருட்டிச்சேணினுந்தினனவனைவேத
வன்றிறனஞானிசுற்றிவளைத்தனமுருக்குநின்ற
வென்றிகொண்மைந்தர்நோக்கிவலாவிறச்சிரித்திட்டாரால். (௩௫)

திருவிளையாட்டானண்ணல்சேவடிக்கமலத்தாரப்
பருவருமுளத்தனாகிப்பக்கம்புல்செறியநீண்ட
தருவடித்தலத்திருவிசாம்பிறைத்துவீழ்ந்தான்
மருமலர்க்கருமெனகூந்தலிமாறுகைமைந்தனம்மா. (௩௬)

அடங்கருந்துயரத்தாழுமவ்வுழிவேரிக்கஞ்சத்
தடம்புனலகுடைந்துவாசநதாங்கிமெனமலர்ப்பூஞ்சோலை
யிடந்தொறும்வதிந்துவீழ்ந்தாரினுயிர்தளிர்ப்பச்செல்லு
மடந்தையபொன்னமெல்லப்படர்ந்ததுமலயத்தென்றல். (௩௭)

தேம்பொதியிளங்கான்மேனிதைவரத்தெளிவுதோன்றி
மேம்படுமயர்ச்சிநீங்கவிழித்திணைவிடுத்துநோக்கித்
தேம்பினனிடும்பைக்கெல்லையாயினன்றிரியாச்சிந்தை
யேம்பலின்மறையோனெஞ்சத்திவையிவையெண்ணலுற்றான். (௩௮)

வேறு.

மறையொழுக்கம்வழாநெறிவாய்மையோர்க்
கிறைவனு முனிவன்குலத்தெய்தினே
னிறையவேதமுமங்கமிபாயமு
முறைபயின்றேதினனூழ்வறு கலவியும். (௩௯)

பன்னெடும்படையாவும்பயின்றுளே
னின்னனுயவெனயகிறுகாலையின்
முன்னைவல்வினைமூட்சிவிளைந்தவா
றென்னபாவமெவரிதுதாங்குவார். (௪௦)

என்னையீன்றவள்வெம்பழியெய்துறீஇக்
கொன்றுமெனனுபசிரங்குறைபட்டனள்
பின்னரெந்தையும்பேர்ந்த பரசனுற
சென்னியிறுச்சிதைந்தனனயமவோ. (௪௧)

ஈண்டுமற்றுமிழிஞன்புலைக்கரந்
தீண்டியென்னையவமதிசெய்திட
மூண்டவெம்பழிமூழ்கியுமையவோ
மாண்டிலேனுயிர்வல்வினையேனரோ (௪௨)
கவளமாகக்கடலவிடமுண்டருள்
சிவனையேத்தநர்செல்லலுறுாகளாற்
பவனடித்துணைபற்றியுமென்னிடர்க்
கவதிகண்டிலனறபுதமற்பதம். (௪௩)

இன்பஞ்செய்தலிற்சங்கரனெம்பிரா
னினபமாக்கலிற்சம்புவெம்பைநோ
யென்பதோட்டிமியல்பினுருத்திர
னென்பராலவையென்னிடைபொய்த்தவோ. (௪௪)
பேதைநீரிற்பெரும்பிழைசெய்துளே
னுதலாலிவ்வருத்துயரெய்தினேன்
பூதநாதனைப்போதப்பழிச்சியென்
னேதந்தீர்வலெனத்துணிந்தேத்துவான். (௪௫)

வேறு.

மூவாதபடைப்புமுதற்றொழிலைந்
தோவாமையியற்றியுயிர்த்தொகைக
டாவாமனிலமூன்றுமறத்தருவா
யாவாவடியேனுனடைக்கலமே. (௪௬)

படியாதியபற்பலதத்துவமாய்க்
குடிலார்ந்தமகனறகுருஉச்சுடரோ
முடியாமுடிவேமுதலாமுதலே
யடிகேளடியேனுனடைக்கலமே. (௪௭)

உமையாளொருபாலுடையாய்முறையோ
விமையாசலவில்லிறைவாமுறையோ
வமையாவிடமுண்டமைவாய்முறையோ
தமைநாடினர்தந்தலைவாமுறையோ. (௪௮)

கச்சிப்பதியெய்துபுநின்கழல்க
ணச்சிப்பணிசீரநரர்வானவரு
ளிச்சித்தபெறுந்தவரோயெனினும்
பொச்சத்தொடைபோயினதாமுளரோ. (௪௯)

உலையுஞ்சிறியேனிடருனலையோ
கலைகளைபிறகண்டிலனெம்பெருமா
னிலையாதினியேனுயிரங்கிடுவாய்
முலைவான்மதிவேய்ந்தமுடிச்சடையோய். (௫0)

வேறு.

என்றின்னபழிச்சிபிரந்தயாகின்றமேருக்
குன்றன்னதவத்தவனனையனாயகொள்கை
துன்றுந்துதிவார்த்தைசெவிந்துணைமேயறுமின்று
நன்றும்பெரிதுமுளமகிழ்ந்தருணங்கைபாகன். (௫௧)

அன்றென்றிரவ்வுருமுனனுருவாந்தோற்றித்
தன்னேர்வடிவங்கொடிருந்தி[illegible]தயலோடு
மின்றூர்வடிவேற்படைவிண்ணவனேழபுதநே
னொன்றுவருமைந்தரொடிந்திருக்காட்சியீந்தான். (௫௨)

கண்டான்முனிவன்கழிகாதலடுக்கமச்சங்
கொண்டானெழுந்தானறுவிகூருமிக்கணமுற்றும்
விண்டானுவகைக்கடன்மூழ்கிமருட்கைமேவித்
தண்டாதவனபிறபெருமானிருதாள்பணிந்தான். (௫௩)

பணிந்தான்றனைமொல்லையெடுத்தணைத்துப்பணிகோ
டணிந்தானருள்கூர்ந்துநம்பக்கிருந்துமன்பிற்
றுணிந்தாயுளமவேட்டதுசொல்லுதியெனவுள்ளந்
தணிந்தார்வமுறக்கரமஞ்சலிசாத்தினனு. (௫௪)

பின்றாழ்சடிலத்திறையோய்பிழையொன்றுமில்லா
வென்றாதையாருஞ்சமதக்கினியென்னுமஞ்சும்
வென்றான்றனையேகயவேந்தனருச்சுனன்றான்
கொன்றானவனைக்குலத்தோடறக்கொன்றழித்து. (௫௫)

எந்தைக்கவர்தங்குருதிப்புனலங்கையேந்தி
நிந்திப்பறுதாப்பணமாற்றியசிந்தைநேர்ந்தே
னந்தத்திறலுன்னடியேற்கருளென்னவையன்
வந்திக்குமழுப்படைமீதுகடைக்கண்வைத்தான். (௫௬)

திருவுள்ளமுணர்ந்துகளிச்சிதிருந்துதன்கூற்
றொருதிண்படையாக்கவுவற்கருநல்கியெங்கோன்
பெருவெண்களிறுளிதடிபயிலும்பேணலானாச்
செருவின்கண்விடாதுசெருத்ததனைவெற்றிகொள்வாய். (௫௭)

பரசுப்படைபெற்றனையப்பெயர்பற்றிவாழ்கென
றரவச்சடையங்கணனின்னருள்செய்யவன்றோன்
மரபிறவொருநிவ்விலிங்கத்துமகிழ்ந்துவாழ்வாய
புரமட்டருள்புண்ணியவிபபுனலயாறுமூழ்கி. (௫௮)

கற்றைக்கதிர்வெள்ளொளிகான்றிரு கட்டுறுக்குங்
கொற்றச்சசிநான்முதலுள்களிறுகொளாவுமெனப்பேர்
பறிப்புயிலிவ்விலிங்கமபணிந்தனபர்க்கேனற
தறைப்பகனல்குநொய்துட்யாககமயீஇ (௫௯)

எனவேண்டிவணங்கிவணங்கியெழுந்தகாலை
முனிவன்றனக்கவவரமுறறுமவழுங்கியூரிய
பனிமால்வரைநல்கியபைந்தொடிமைந்தரோடு
மனலங்கைகொளண்ணல்கரந்தபினங்கணியங்கி. (௬௦)

முனிவன்முனிவன்மழுவான்மணிமோலிவாய்ந்த
சினவெம்படைவேந்தர்தமைசெருவிற்படுத்து
கனலன்னசெழுங்குருதிக்கயநீர்நிறைத்திட்
டினமன்னுயிர்க்கடனுற்றிமெய்யின்பமுற்றான். (௬௧)

அப்பொற்பினருட்சிவலிங்கமெய்யன்பினங்க
ணைப்பெற்றியரோனுமிறைஞ்சினிறைஞ்சமுன்னாக்
கைப்பட்டதோராமலககக்கனிபோலவீடுஞ்
செப்பறகரிதாகியசெல்வமுமெய்திவாழ்வார். (௬௨)

பரசிராமீச்சரப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கருஎ௬.

## ௩௫. இரேணுகீச்சரப்படலம்.

கொங்கவிழ்நறுமலர்க்கொன்றைவேணியன்
றங்கியபரசிராமீசஞ்சாற்றினு
மங்கதன்றென்புடையலைநதிக்கரைப்
பொங்கர்சூழிரேணுகீச்சரத்தைப்போற்றுவாம் (௧)

கரேணுகதிப்பரைகணவனன்பர்பா
தரேணுகவசமுடற்றுங்கிரோர்நதமன்
னரேணுகவேல்பரசிராமனம்புதா
யிரேணுகையென்பவளழகினெல்லையாள். (௨)

விச்சைதேர்பெற்றியவருமவேந்தனார்
மெச்சியவரத்தினிற்றோன்றுமெல்லிய
லச்சமதக்கினிமனைவியாயினாள்
பொச்சமில்கற்பினிற்பொலியுமேன்மையாள். (௩)

மனையறக்கிழமையினொழுகுமாணிழை
நனைமலர்க்குழலியோர்ஞான்றுபொய்கையிற்
கனைதிரைத்தடம்புனல்கயரப்போந்துழி
வினைவழிக்கண்டனன்கார்த்தவீரியன். (௪)

காணடலுங்காமவேள்கணைக்கிலக்கமா
யாணடைகையுவளொதிரனுஞ்சினைறனன்
மாண்டதன்புறவடிநோக்குமாதரா
ளீண்டுபேரழகுடையிறையைநோக்கலள். (௫)

இனிச்செயலெவனெனவெண்ணிவேந்தர்கோன்
புனற்குமேல்விசும்பிடைப்பொலிந்துதோன்றினான்
பனித்தநீர்ப்பரப்பினைப்பதகனிழலை
முனிக்குரிமரபினாண்முந்துநோக்கினாள். (௬)

காமனுஞ்சிறிதுதன்மறுகைகாட்டினான்
பூமலர்க்கூந்தலாளுளத்தைப்பொள்ளென
வாய்மையிற்றன்வழிப்படுதலுமாண்குடத்
தாமுகந்தெடுத்துமீண்டகத்தைநண்ணினாள். (௭)

எதிருறப்போந்துழிமுனிவனோறனான்
மதிமுகமனைவிபாணித்தவாற்றினைக்
கதுமெனவறிவினிற்கருதித்தேர்ந்தனன்
முதுநெறிகோடியமூர்க்கன்செய்கையே. (௮)

வடவையின்வெகுண்டுதன்மகனைநோக்கினான்
படர்புகழிராமநிற்பயந்தபூங்குழை
கடல்புரையெழினலங்காமுற்றண்மினான்
விடமெனத்தோன்றியகார்த்தவீரியன். (௯)

ஆங்கவனிளமையுமரசுமாற்றனு
நீங்கருமடைமையுநிறைந்தநீர்மையா
லீங்கிவட்பற்றுவனெம்மையெண்ணலா
னோங்குயர்குணத்தினேயுரைப்பக்கேட்டியால். (௧௦)

என்னுடையாணையினிற்றியேலிவள்
சென்னியைத்தடிமதிவிரைந்துசெல்கெனத்
தன்னுடைக்குருமொழிசிரத்திற்றாங்கினா
னன்னையைக்கொடுமழுத்தனுஞ்சினனரோ. (௧௧)

அல்லலேபெண்ணெனப்பிறத்தலாங்கதி
னல்லலேயிளமையிற்சிறத்தலாங்கதி
னல்லலேகட்டழகுடைமையாங்கதி
னல்லலேயிரவலார்சார்பினுறுதல். (கஉ)

அரங்குறைபடுத்தவாளங்கையோர்திறல்
லரங்குறைபடுத்திடாவுறுவனன்னைதன்
சிரங்குறைபடுத்துமீண்டெய்திதகேசிகன
வரங்குறைபடுத்திடாவடிவணங்கினான். (கங)

துன்பமுற்றருந்தவனிரங்கிச்சொல்லுவான்
வன்பெருமனைவனமகட்குமைந்தனீ
யென்பதுமென்னிடத்தன்புமின்றியா
னின்புடைக்கண்டனையினிநீடியோய். (கச)

என்னுரைநிறுவினையேனுந்தாயைக்கொலை
நன்மையன்றுலகமும்பழிநவிற்றுமென்
றன்னுரைப்படியவணைத்தாழ்ந்துழல
மென்னியைப்பொருந்துறச்சேர்த்தெழுப்பியே (கரு)

பொன்னடிவணங்கியஞ்சலித்துப்போற்றியே
னன்னைநின்கருத்தினுக்கடுத்தவாறுசெல
கென்னவங்ககற்றினையெய்துவாயெனத்
தன்னுடைத்திருமகற்கியம்பினாபதன். (கசு)

வெருளியேயுயிர்களெலாம்விளைக்குறுதீவினை
வெருளியேகுணநலமயிரதமாய்க்குமால்
வெருளியேயறிவினைச்சிதைக்கும்வெம்மைசால்
வெருளியிறகொடும்பகைவேறொன்றில்லையால். (கஎ)

என்றிவைதன்மனத்தெண்ணிவெருசின
மொன்றறத்துறந்தினிதுறையுங்காலைய
புனறெழில்வேந்தனோடுணர்ந்துபொளளென
வென்றிமாதவன்சிரந்தணித்துமீண்டனன். (கஅ)

மதலையினுவிபெற்றதன்றமாணிழை
யிதமுறுகணைவனையிழந்ததன்பின்
னுதலருமகன்வரப்பேறுநோக்கியப்
புதல்வனதிசைவுபெறற்குப்போயினாள். (க௯)

இளங்களிவண்டினமிமிரும்பூம்பொழில்
வளங்கமழ்காஞ்சியைமருவிமைந்தனு
ருளங்கொளவழிபடுகரினாங்குற
விளங்கொளிச்சிவக்குறிவிதியிற்றாபித்தாள். (உ0)

மகவிடத்திருத்தபேரன்பின்மாட்சிமை
தகவுறப்பூசனைதவாதுபல்பக
லகமுறப்புரிவுழியருளியாங்கெதிர்
நகமடப்பிடியொடுமெபன்றோன்றினான். (உக)

நுண்ணிடையிறோனுமைமடநதைநோக்கினு
ளுண்ணிகழ்காதலினுருகிக்கைதொழூஉ
வண்ணமெனகுயிலினஞ்சமழ்ப்பவாய்திறந்
தண்ணலைப்பழிச்சினறைதன்மேயினாள். (உஉ)

ஏதமிலுயிர்த்தொகையவற்றினுக்குநீ
தாதைதாயினைவைத்தையலாகுமாற
கோதறுமிருமுதுகுரவர்மாட்டெவர்
மேதகுமானம்விட்டியம்பிடாதவா. (உங)

வேறு.

அடியனேன்பலதிறத்திலுமபரிபவமடைநதேன்
பொடிகொள்மேனியாயிங்குனைப்பூசனைபுரியும்
படியிலாப்பெருவாழ்வுபெற்றெய்தினேனடியோர்
கடிதராதருள்வைத்தெனைக்காப்பதுன்கடனால். (உச)

புகழுமாக்கமுமுத்தியுமுயிர்க்கருள்புராண
னிகழுமின்னலூநதவிர்பவணிருண்மலக்கிழங்கை
யகழுநாயகனையாங்கணுநிறைநதவனடியா
ரிகழுமன்பினுக்கெளியவனசிவபிரானென்றும். (உரு)

கொழுநன்யாரினுமினியவனென்றுகூறுவரக்
கொழுநனிவ்வுடற்குரியவன்குறிக்கிலாருயிர்க்குக்
கொழுநனறந்தைதாயசெல்வமுமேனவுங்கொனறைக்
கொழுநனைத்தொடைக்குளிர்சடைச்சிவபிரானென்றும்.

இனையவாயினபெருமைகளெடுத்தெடுத்தெனக்கு
வினையினீங்குமென்கணவனுடொறும்விரிததுரைக்கு
மனையனிற்றொழுதய்ந்துளாரளவிலாரடியேன்
றனையனுக்குமீண்டரும்பெறறபேறுதநதளித்தாய். (உஎ)

ஐயனேயடியேனையுங்காத்தருளசலத்
தையலேசகமுழுவதுமளிததிடுநதாயே
யுய்யுமாறெனைக்காத்தருளுமைச்சரணடைநதேன்
பொய்யர்சிநதையினகப்படாய்போற்றியென்றிரந்தாள்.

அம்மையப்பராயவிலமும்புரந்தருள்கருணைச்
செம்மலார்கைமுகிழ்த்தெழத்திருவுளமகிழ்ந்தே
யெம்மைவேட்டனைவிளம்புதியிமயமீன்றளித்த
கொம்மைமென்முலையுனக்கவைதருமெனக்கூற. (உகூ)

அன்பினேத்திகின்றிரேணுகையணியிழைவேண்டு
மென்பணிக்கினியாய்கனிவிழுத்தகவெய்தித்
துன்பமெண்ணிலபட்டயான்றாயநின்னருளான்
மன்பதைக்கெலாம்வழிபடுதெய்வமாய்வயங்கி. (௩௰)

போகமவ்வவர்வேண்டியபுணர்ப்பெலாங்கண்கூ
டாகநல்குபேறெனக்கருளிவ்விலிங்கத்தி
னேகநாயகவினிதமர்ந்திருமையுமெவர்க்கு
நீகனிந்தருள்புரிமதியெனநிகழ்த்துதலும். (௩௧)

அண்ணலாருமைகூற்றிரேணுலவட்கவையுதவி
மண்ணின்மேற்கலியுகத்துறுமானிடர்கருது
மெண்ணமெண்ணியாங்கியவுமிழிகுலத்துள்ளார்
நண்ணிவேட்டனசாலமிக்களிப்பவுநல்கி. (௩௨)

காமபளுள்பெறத்தெய்வதத்திருவுருக்கொடுத்துக்
கம்பனூர்மலைமகளொடுங்கரந்தருள்செய்தார்
வம்புவார்குழலிரேணுகைமடந்தையப்பொழுதே
யம்புவிக்கொருதெய்வதமாயினளம்மா. (௩௩)

வேறு.

காதராவணியிறைவர்பலகைவாட்கையிறைவர்
போதராசனமுதறபலகணம்புடையுற
வேதர்ாசிகளபயில்விரிபொழிற்காஞ்சியின்
மாதராளாயினட்டதெய்வமாய்வைகினாள். (௩௪)

எண்ணியாங்குதவிசெயிரேணுகையீச்சரத்
தண்ணலாரபெருமையாரளவிடற்பாலரோ
கண்ணுமிக்காதையைககற்றுரைபபோரையவ்
வொண்ணுதற்றெய்வதமூறுசெய்யாதரோ. (௩௫)

இரேணுகீச்சரப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௬௯௦அ.

## ௩௧. யோகாசாரியர்தளிப்படலம்.

உரவுநீர்ச்சடைமுடிப்பகவனுருமையொடும்
விரவிவாழிரேணுகையீச்சரம்விளம்பினும்
பரசிராமீச்சரத்தெனுதுபாலியோகமாக்
குரவர்சூழ்பஃறளித்திறனினிககூறுவாம். (௧)

சுவேதனேசுவேதகேதுக்கருத்தொடர்பிலாச்
சுவேதசிகன்சுவேதாச்சுவன்றூயசீர்ச்
சுவேதலோகிதனொடுஞ்சுதாரனேசாதனஞ்
சுவேதநீற்றணியொளிர்துந்துமிமுதலியோர். (௨)

ஏயுமெய்த்தவமருவிலகுளீசன்முடி
வாயினோர்மற்றுமெண்ணில்லவரகிலரும்
பாயசீர்யோகமாக்குரவாகள்படைமழுத்
தூயவன்கூற்றினிற்றோன்றியோரிவர்கடாம். (௩)

யோகமாக்குரவர்தம்முயாபரந்தெய்தவு
மோகவல்லிணையுறமுத்தியினவைகவும்
போருவெணகயிலையின்மெய்த்தவம்புரிவழி
யேகநாயகனவர்க்கெதிரெழுந்தருளியே. (௪)

வேறு.

அம்மநீர்கச்சிமூதூரணுகிமாசிறல்லைகு
மெம்மடிவழுத்துவெவ்வேறிலிங்கமங்கிருத்திப்போற்றி
யம்மர்தீர்தவங்களாற்றிவைகுமினண்டுநுங்க
டம்மனக்கருத்துமுற்றத்தருதுமென்றருளிச்செய்தான். (௫)

மற்றவர்தொழுதுபோற்றிவள்ளலைவிடைகொண்டேகி
முற்றிழைமகளிர்நல்லாருடலிறுத்தத்தமுத்தங்
கற்றைவெண்ணிலவுகான்றுகங்குலிருள்பருகுநீண்ட
பொற்றடநெடுந்தேர்வீதிப்பொலிதிருக்காஞ்சிநண்ணி. (௬)

முழங்கிசைஞிமிறுபாயமுகைமுறுக்குடைந்துதீந்தேன்
வழங்குபூங்கமலத்தெண்ணீர்மணிச்சிவகங்கைதோய்ந்து
பழங்கணோயறுக்குமாவிற்பகவனைவழிபாடாற்றித்
தழங்கொலிமறையினூற்றுற்றணிந்தனியிலிங்கஞ்செய்தார். (௭)

முன்பொருகாலத்தங்கண்முதல்வனைத்தொழுதுமுந்நூற்
றைம்பதிற்றைவர்யோகாசாரியராகிமுத்து
தம்பதமாகக்கொண்டாரவரெனத்தாமுமன்பி
னம்பனைத்தத்தம்பேராலிலிங்கநிறுவிப்போற்றி. (௮)

கறையணிமிடற்றுப்புத்தேள்கருணையாலுகங்கடோறு
நிறைபுகழ்படைத்தயோகாசாரியநிலைமையெய்திக்
குறைவிலாமுத்திபெற்றாராங்கவர்குலவிப்போற்று
மிறையவன்றளிகள்யார்க்கும்வீடுபேறெளிதினல்கும். (௯)

வென்றிகொளினையவெல்லாம்பரசிராமீச்சரத்தின்
றென்றிசைதொடங்கிச்சார்ந்தவதீர்த்தத்தின்வடபால்காறு
மொன்றருஞ்சுவேதலிங்கமுதலிலகுளீசமீறுத்
துன்றிடுமிவற்றுண்மேலாச்சொலப்படுமிலகுளீசம். (௧௦)

யோகாசாரியர்தளிப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௧௬௧௮.

# ௪௭ சருவதீர்த்தப்படலம்.

இருட்டொடும்பிறவிமாற்றுமிலகுளிச்சரீசமீருத்
தருக்கறுகாட்சியோகாசாரியர்தனிகள்சொற்று
மருத்துறைதமலர்மேற்பூத்தவளம்புனல்குடைவோர்தங்கள்
கருத்தவிர்சருவதீர்த்தக்கரைப்பொலிதலங்கள்சொல்வாம். (௧)

குடவளையலறியீன்றருரூஉமணித்தரளக்குப்பைப்
படலைவெண்ணிலவுகானறுபடரிருளிரிப்பஞாங்க
ருடைதிரையொதுக்குந்தெண்ணீரொலிபுனற்சருவதீர்த்தத்
தடநெடுங்கரையிறகாமீச்சரமெனுந்தலமொன்றுண்டால். (௨)

கருப்புவிற்குழையவாங்கிக்கடிமலர்ப்பகழிதூண்டு
மருப்பிளங்கொங்கைச்சேனையடல்வலிமகாமன்முனநாண்
மருப்பொகியிகழிகழ்கோமானமனத்திடைபிறந்தானையன்
திருப்பதமிறைஞ்சிப்போற்றிச்செய்நமறநிதனைவேண்டும். (௩)

மகப்பயில்பிறவிக்கேதுவாகிவண்புணரப்புரல்கி
யிகபரமிலசிரிரதிக்கெனறுமினியனாய்க்கொடுப்போர்கொள்வோ
ரசர்திருநதினையசெய்கையாறியென்னுணைமூன்று
சகந்தினுஞ்செலுத்தும்பேறுதந்தருளென்னக்கேட்டு. (௪)

மற்றெமக்கினியமூதூர்வளம்பயில்காஞ்சியங்க
ணுற்றெமைவழிபட்டேத்தியுங்குவைபெறுகென்றெங்கோன்
சொற்றலும்விரைந்துகாஞ்சிநண்ணியொய்திக்காம
னற்றமில்சருவதீர்த்தத்தடந்திரையலைக்குங்கோட்டின். (௫)

தவாதபேரன்பிறகாமீச்சரன்றனையிருத்திப்போற்றி
யுவாமதிமுகத்துமென்றேளொள்ளிழையுமையாடன்னைக்
கவான்மிசைக்கொண்டபெம்மான்கண்ணருள்கிடைத்துநெஞ்சத்
தவாவியபேறுமுற்றமகிழ்லையெய்தினனால். (௬)

ஏதமிலுயிர்களெல்லாந்தோற்றுதற்கேதுவாகிக்
கோதறத்தானமீவோன்கொள்பவன்றானுந்தானாய்
மேதகுமிறைமைபெறறுவிளங்கினன்மறையோரேற்கும்
போதுளத்தவனையெண்ணிற்புணாதவிர்நதுய்வாரன்றே. (௭)

பரவினோர்விழைந்தகாமப்பயனளித்தருளுங்காமீச்
சராகர்வந்தவாறுசாற்றினமிதன்பாலாகப
பரிதிமான்றடந்தேரிர்க்கும்பரிக்குழம்பிடறிப்போய
திருமணிச்சிகரக்கோயில்வயங்குதீர்த்திசமுண்டால். (௮)

குழையுழைநெடுங்கட்செவ்வாய்க்கோமளச்சயிலப்பாவை
விழைதகத்தழுவுமாற்றல்விரிசினைத்தனிமாநீழன்
மழைதவழ்மிடற்றுப்புத்தேள்வருகெனவிளித்தான்று
தழைபுனற்றலைவரேடுந்தடந்தியவடிவநதாங்கி. (௯)

விழுமியவண்டத்துள்ளும்புறத்தினும்விரவுதீர்த்த
முழுவதுந்திரண்டுகாஞ்சிமுதுநகர்க்குடபாலெய்திக்
கெழுமலர்த்தனிமாநீழறகுழகனையுமையாள்வல்லைத்
தழுவலுமெழுந்தவேகாதணிநதுமீட்டல்கியங்கண். (௧௦)

கலைமதிக்குழவிமோலிக்கடவுளைத்தீர்த்தராசத்
தலைவனென்றிருத்திவீங்குநதடம்புனலருவிக்குன்றச்
சிலைநுதற்பிடியினோடுமருச்சனைதிருந்தச்செய்ய
மலையினைக்குழைத்ததிண்டோள்வள்ளலுமெதிரோநின்று. (௧௧)

இற்றைஞான்றாதியாகநும்மிடத்தெய்திமூழ்கிச்
செற்றமின்முனிவர்விண்ணோர்தென்புலவாணர்தங்கட்
குற்றநீக்கடன்கணல்கியுறுபொருளுறுநர்க்கீந்து
மற்றெமையீண்டுக்காண்போர்முத்தியின்மருவச்செய்கேம். (௧௨)

இன்னமும்புகலக்கேண்மினெனப்பெருங்கருணைகூர்ந்து
தன்னிகர்பிராட்டியாரத்தழீஇக்கொளச்செய்தவாற்றா
லன்னதற்கியையக்கைமாறளிப்பவனென்னவங்கேழ்ப்
பொன்னவிழ்சடையோன்றீர்த்தப்புனல்களுக்கிதனைநாட்டும். (௧௩)

கொலைகளிற்கொடுமைசான்றபார்ப்பனக்கொலைவல்வீரக்
கொலைகருக்கொலைதாய்தந்தைக்கொலைகளைக்கோட்டுநல்லான்
கொலைமுதற்பிறவுநீங்குங்கொடுவினைப்பாசத்தெவ்வைக
கொலைபுரிமரபினும்பாற்குடைநதெளமத்தொழப்பெற்றோர்க்கே. (௧௪)

முரிதிரைசுருட்டுதெண்ணீர்நும்மிடத்தொருகான்மூழ்கி
விரிபுகழ்த்திருவேகம்பம்விழைதகக்காணப்பெற்றா
ருரிமையினான்றநாற்கூற்றுறுதியும்பெறுவர்மீள
வரிவையரகட்டுளெய்நாதெம்மருளசட்டின்வாழ்வார். (௧௫)

என்றிதுநிறுவித்தீர்த்தநாயகனிலிங்கத்துற்றா
னன்றுதொட்டங்கண்மேவுமலங்கொளிச்சருவதீர்த்தத்
தின்றடம்புனலின்மூழ்கியெழில்வளர்திருவேகம்பஞ்
சென்றுகண்டிறைஞ்சப்பெற்றோர்செய்கொலைத்தீமைதீர்வார். (௧௬)

தந்தையைச்செகுத்தபாவந்தணந்தனன்பிரகலாதன்
முந்தையோர்ச்செகுத்தபாவம்வீடணன்முழுதுந்தீர்ந்தான்
மைந்துடைப்பரசிராமனவீரனைவதைத்தபாவஞ்
சிந்தினன்சருவதீர்த்தச்செழும்புனல்குடைந்தபேற்றால். (௧௭)

அருச்சுனன்றுரோணமேலோனாதியர்ச்செகுத்தபாவம்
பிரித்தனனசுவத்தாமன்பெறுங்கருச்சிதைத்தபாவ
மிரித்தனனுலகிலின்றுமெண்ணிலர்சருவதீர்த்தத்
திருப்புனல்குடைந்துநீராக்கொலைவினைத்தீமைதீர்ந்தார். (௧௮)

சிலைநுதன்மகளிர்மைந்தரின்றுமத்தெண்ணீர்மூழ்கிற்
கொலைவினைப்பாவந்தீர்வார்குணகடற்பரப்பென்றெண்ணித்
தலைவருமுகிலின்கூட்டந்தனித்தனிவாய்மடுக்கு
மலைபுனற்சருவதீர்த்தப்பெருமையாரளக்கற்பாலார். (௧௯)

மற்றதன்கரையின்கீழ்பால்வருணனெம்பெருமான்றன்னை
முற்றிழைக்கங்கையாளோடிருத்திமுன்றொழுதுநீரு
ளுற்றுறையுயிர்க்குநீர்க்குமொருதனித்தலைவனாகப்
பெற்றனனதன்பேர்கங்காவரமெனப்பிறங்குமாலோ. (௨௦)

பாற்றினமிடைந்தகூர்வாய்ப்படைமழுக்குடங்கைப்புத்தேண்
மாறறருங்கருணைமுந்நீர்வாரியினிறைநறுந்தேங்கு
நாற்றிசையணவுஞ்சீரதிநளிபுனற்சருவதீர்த்த
மேற்றிசைக்கரைகண்மேவும்விச்சுவநாதத்தானம். (௨௧)

மலர்தலையுலகின்முக்கண்வானவனினிதுறைவுறுந்
தலமெலாமருவுங்காசிவிச்சுவநாதனறன்பாற
கலிபுகழ்விசுவநாதமுதல்வனுங்காசிதன்னி
லில்கொளிமாடக்காஞ்சிநகரொமக்கினிதென்றெண்ணி. (௨௨)

வெள்ளிவெண்கயிலையாதியிடங்களின்மேன்மைசான்ற
வள்ளலம்பழனக்காஞ்சியணிநகர்ச்சருவதீர்த்தப
பள்ளநீர்க்கரைகணெய்திவைகினன்பரிவாலங்கண்
வள்ளலைத்தொழுதுமுத்திமண்டபங்காண்போர்முத்தர். (௨௩)

மண்டபவுருநாள்செல்லாக்காஞ்சிமாநகரின்மூன்று
மண்டபந்திகழுமுந்தீச்சரத்தெதிர்வயங்குமுத்தி
மண்டபமொன்றுசாறவதீர்த்தத்தின்மருங்குமுந்தி
மண்டபமென்றுகண்டோர்தமக்கெலாம்வழங்குமுத்தி. (௨௪)

உருவமென்கமலம்பூத்தவுயர்சிவகங்கைத்தென்பாற
திருவிராமீச்சரத்துச்சிவபிரானறிருமுன்னாக
விருவினைப்பிறவிக்கஞ்சியெய்தினோர்க்குறுபேரின்ப
மூருவுறும்பரமாநந்தமண்டபமொன்றுமாதோ. (௨௫)

மண்டபமினையமூன்றும்வைகறையெழுந்துநேசங்
கொண்டுளநினையப்பெற்றோருணர்வெலாங்கொள்ளைகொண்ட
பண்டைவல்வினையின்வீறும்பற்றியமலங்கண்மூன்றும்
விண்டுபேரின்பவெள்ளவேலையிற்றிளைத்துவாழ்வார். (௨௬)

சருவதீர்த்தபபடல முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௬௪௪.

## ௵ நவக்கிரகேசப்படலம்.

தழங்குபெரும்புனற்புரவைச்சுரவதீர்த்தத்தடங்கோட்டின்
முழங்குமறித்திருக்கரத்தமுதல்வனிடங்களொடுதுணைத்தாம்
வழங்குவளிக்கடவுளுமொன்பதிற்றுக்கோளும்வழிபட்ட
குழங்கனறுந்தொடைக்கொன்றைக்குழகன்றளிகளினிப்புகல்வாம். (க)

பைத்தலைப்பூண்வயிரவருர்பணைத்ததடநதோளநதகனை
முத்தலைச்சூலத்தலைநின்றிழித்தருளான்றமுமுழங்கழல்வா
யத்தகைத்திங்களூலத்தாலகழ்ந்தசூலததடநதீரத்த
மித்தனைக்கட்சிறப்பெய்துமுவாவிலநரிணிதாடி. (உ)

தென்புலத்தோர்கடன்செலுத்திலனையார்துறக்கஞ்சென்றெய்தி
யின்புறுவாரதனைக்கணிலிங்கமமைத்தமருந்திறைவன
மென்பனிநீர்செய்வநதிவேரிச்செழுமபூப்பலகொணடு
வனபகலவழிபட்டுக்கந்தவாகனெனபபெற்றுன். (ங)

மருந்தேத்தருஞ்செவ்வநதிச்சரமால்வனைப்பின்வடகுடக்காந்
திருந்தேத்துக்கதிர்ப்பரிதிசெல்வன்பரிதிகுளமதொட்டுக்
கருத்தேய்த்துவிடளிக்குமநீராட்டிககருணாரு
ருருத்தேத்துஞ்சுரர்க்கருளுமொளியைத்தொழுதுவரம்பெற்றுன். (ச)

வீங்கிருள்சீத்தொளிபரப்பிப்பைங்கூழ்புரக்கும்வெண்சதிரோன்
றேங்கமலமுகையவிழ்க்குஞ்சுரவதீர்த்தத்தென்றிசையி
னுங்கணறுஞ்சுவைத்தெள்ளாரமுதத்தடந்தொட்டதன்கோட்டிற்
பாங்குபெறப்பிஞ்ஞகன்றளருச்சித்தேத்திப்பயனபெற்றுன். (ரு)

நலமொன்றுசெவ்வந்திச்சரக்கீழ்நாகசோழிலிங்க
நிலைமைந்தன்மதிமைந்தன்வியாழம்வெள்ளிரிநசனி
யலமந்தவிருபாநகளருச்சித்தருங்கோணிலைபெற்றா
வலம்வந்தங்கவைதொழுவோர்தம்மைக்கோள்கள்வருத்தாவால். (சா)

நவக்கிரகேசப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கஙறு0.

## ௵ பிறவாத்தானப்படலம்.

பவனனேடொன்பதிற்றுக்கோளகளும்
மிவறிப்போற்றுமிடங்கள்கூறினுஞ்
சிவனைச்செவ்வாய்முதலியோர்தொழும்
புவியிற்பிறவாத்தானம்போற்றுவாம. (க)

வாமதேவனென்னுமாமுனி
காமரன்னைகருவின்வைகுநாட்
பேமுறுகருமபிறவியஞ்சினு
னேமுருமையிறுதினக்குமரால். (உ)

பொதியுமாயப்புவியிறப்போன்றிநான்
மதிமயங்கிமற்றுமின்னணங்
கொதிபிறப்பிறகொட்புறுதெனக்
கதிபனேயிங்கருளிச்செய்யென. (௩)

தோற்றமீறில்லாதசோதிவெள்
ளேறதினானையிதயத்தனயினாற்
போற்றுகாலைபுனிதனுண்டு, நீடுச்
சாற்றலுற்றனறவமுனிக்கரோ. (௪)

மண்ணின்மீதுதோன்றிமறநெறைமை
நண்ணிக்காஞ்சிநகரிற்பூசனை
பண்ணுமோவெம்பவத்தொடக்குனை
யண்ணுறுதெனவருளிச்செய்தனன். (௫)

வள்ளல்புகலுமாற்றங்கேட்டன
னுள்ளமேனமேலுவகைபூத்தனன்
பள்ளமுநீர்ப்படிமிசைப்பிறந்
தெள்ளருஞ்சீர்க்காஞ்சியெய்தினான். (௬)

இலிங்கமங்கணிநிறுத்தினாற்
புலங்கொண்முறையிற்பூசையாற்றுபு
கலக்குறுபிறவிக்கரிசினீங்கினன்
மலங்கருஞ்சீர்வாமதேவனே. (௭)

வேறு.

அன்னவாற்றாற்பிறவாத்தானமாயதா
லின்னதானம்வழிபட்டேத்தப்பெற்றவர்
பின்னர்மாதர்கருவினெய்திப்பேதுறார்
கன்னிபாகன்கருணைவெள்ளங்காண்பரே. (௮)

அங்கட்போற்றிவாமதேவனருளினாற்
றுங்கக்கயிலையெய்தினானருடொழுதெழூஉக்
கங்கைச்சடையானுதவிலிங்கங்கைக்கொடு
பங்கப்பழனக்காஞ்சிப்பதியின்மீண்டரோ. (௯)

மேன்மைசான்றபிறவாத்தானமேற்றிசை
ஞானவாவிஞாங்கர்முத்தீச்சரனென
மானமுத்திதனியினிறுவிவாழ்த்தினு
னேனவெண்கோட்டணியார்க்கினிதாமன்னதே. (௰)

பிறவாத்தானப்படல முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - கஙக௦.

## (௫) இறவாத்தானப்படலம்.

புள்ளிவண்டுபெடையொடாடிப்பொங்கிற
பள்ளிகொள்ளும்பிறவாத்தானம்பன்னிருந்
துள்ளிவாளைபாயுநீர்சூழ்ந்ததனயல்
வெள்ளிவரையாரிறவாத்தானம்விள்ளுவாம். (௧)

இறவிக்கஞ்சிச்சிஃறுபதர்கண்மாதவ
முறையிற்செய்தார்முன்னாளநாண்முன்னுற
நறவிற்றிகழுமுளரிமேலானண்ணியின
றறவாக்கென்னேவேட்டதென்றுணுங்கவர். (௨)

உலகமுழுதுமுதவுமெந்தாயுன்னடித்
தலமேயன்றிச்சரணமில்லேஞ்சார்வதற்
கலகிலச்சமுற்றேமதனைவெல்லுமா
றிலகவெங்கட்குரையாயென்றங்கேத்தினார். (௩)

செங்காலன்னபபாகன்கேளாத்தேத்துணர்க்
கொங்கார்பொங்கர்க்காஞ்சிநண்ணிக்கோயிலை
பங்காராதிபகவன்பாதம்வழிபடி
னங்கேயிதனைபெறலாமென்றனவர்களும். (௪)

அன்னத்தோன்றலடிகள்போற்றிவிடைகொ(டு)
நன்னர்க்காஞ்சிநகரநண்ணிநாயகனை
றன்னைத்தாபித்தேத்திச்சாவாமாட்சியின்
மன்னப்பெம்மானுதவப்பெறறுவாழ்ந்தனர். (௫)

சுவேதனென்பான்வாழ்நாட்கழிவுதுன்னுநாட்
சுவேதநதீறறுமாடச்சூழலதனிடைச்
சுவேதநல்லானூர்திநோன்றுடொழுதனன்
சுவேதநீற்றனீத்தானிறவித்துன்பமே. (௬)

மார்க்கண்டேயனங்கட்போற்றிமறலியைத்
தாக்கிநிலைமைபெற்றான்சாலங்காயினா
ருக்கமைந்தன்மகனுமங்கணைத்துபு
சாக்காடற்றான்கணநாதச்சீர்தழுவினான். (௭)

ஆயுண்மாய்வினின்னுமங்கணெண்ணிலர்
ராயவன்பிற்றொழுதுநிலைமைபெற்றன
ரேயவாற்றலாயுள்வேட்டோர்யாவரும்
பாயசீர்த்தியிறவாத்தானம்பணிகவே. (௮)

இறவாத்தானப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௬௬௮.

## ௨௰௬ மகாலிங்கப்படலம்.

வெள்ளைத்திங்கட்பிள்ளைக்கீற்றுயிளிர்சடை
வள்ளற்கோமானிறவாத்தானம்வாழ்த்திருஞ்
கிள்ளைச்சொல்லார்பயிலுமதனின்கீழ்த்திசை
விள்ளாற்கருமாலிங்கத்தானம்விள்ளுவாம். (௧)

வேறு.

வையமுழுதுமடியவருமோருழிமுடிவின்
வெய்யவிருள்வந்தடரவிருநீர்ச்சலதிவேகஞ்
செய்துகிமிர்ந்துபொங்கித்தேங்கிக்கிடந்தகாலைப்
பையவுறக்கநீத்துமீளப்படைக்கவுன்னி. (௨)

துங்கத்தனதுநகரிற்சுடருமறையின்கிழவ
னெங்குமலைகள்புரளவேகப்புணரிவெள்ளந்
தங்குசெயலைநோக்கித்தடவுக்கருவிமுகில்போ
லங்கணரவிற்றுயிலுமையன்றனையுங்கண்டான். (௩)

கண்டுபுடையினணுகிக்கடுகவெழுப்பிமையல்
கொண்டுநீயாரொன்றுவினவக்கொண்டலனையா
னண்டமுழுதுங்காக்குமகிலமுதல்வன்யானே
மிண்டுநீயாரொன்பால்வேட்டதென்கொலென்றான். (௪)

நறவமொழுகுமலரோன்கேட்டுநகையுட்கொண்டு
பிறருமல்லர்நீயுமல்லைபேணியுலக
நிறுவுமுதல்வன்யானேயென்றுபிணையநெறியின்
மறலிக்கூறித்தம்முளுடல்வளர்த்துநின்றார். (௫)

சிறைநாளுங்கழலச்சிலையினுணுப்பூட்டி
முந்துகணைகடொத்தார்மூரிக்கனலிவருண
விந்துவிரவிப்படையுமேவியவைகண்மடியப்
பந்தவினையின்மருள்வார்தத்தம்படைவிட்டார்த்தார். (௬)

மும்மைப்புவனமீன்றோன்படையுமுகுந்தன்படையுந்
தம்முட்பொருதுமாய்ந்தபின்னர்க்கமலதவிசோன்
வெம்மைப்பாசுபதமாப்படையைவிடுபமாயோன்
செம்மனுருத்திரத்தின்படையைச்செலுத்திநின்றான். (௭)

அம்மவிரண்டுபடையுமயுதவருடநேர்ந்து
தம்முளுடலுங்காலைத்தழங்குமெரியின்பொறிக
டும்மவெழுந்துதோன்றிச்சோதியிலிங்கவடிவாய்
நம்மையுடையபெருமானவற்றினடுவுநின்றான். (௮)

நின்றசோதியுருவினேர்ந்தவிரண்டுபடையுஞ்
சென்றுகரப்பநோக்கித்தெருமந்தரியுமயனு
மின்றுதோன்றுமிதுவென்னென்றுதம்முளெண்ணிக்
கன்றுமிதன்றனடியுமுடியுங்காண்டுமென்று. (௯)

சேழலெகினமாகிக்கீழ்மேலுந்துருவி
யூழினிரண்டைஞ்ஞூறுவருடமுழிதந்தற்றார்
வாழிமுடியைக்காணான்வண்டொராலுமலரோன்
பாழிச்சிறகர்முறியாபயையுளெய்திவீழ. (௧0)

காறூர்துளவத்தவனுநாடிச்சரணங்காணான்
வீறும்வலியுங்குன்றியெய்ப்புமிளைப்பும்விரவ
வேறும்பரவைபெருநீரிடையுளொழுந்தங்குற்று
மாறுமிருவர்களுமாலெய்திமருட்கைகொண்டார். (௧௧)

வேறு.

ஏமுறுபொழுதவனொலிவடிவினுதமதெழுபுமுனிருதிறனு
யோமெனவுமையெனமருவியிருக்கோடியர்நெறியருள்புரியெசுவுஞ்
சாமமுமெனநிலைபெறவிரிவுற்றங்கவைதம்வலிமிகுமவர்முற்
காமுறுதகையநல்வடிவொடுநின்றிணையனகருணையினுரைசெயுமால். (௧௨)

எவனடிமறையவர்மகவினையாலிருவினைவலிகெடவழிபடுவா
ரெவனரியயனெனுநுமையொருதனிடவலவடிவினில்வரவருள்வோ
னெவனுமைநும்பதமுறநிறுவுமிறையவனுமதிருள்கழியவரு
மவனதுகுறியிதுவறிமினெனுவருள்வழிவருமறையவைபுகல. (௧௩)

நறைகமழ்துளவணிதொடையவனுநகைமலரணைமிசைமறையவனு
மறைமொழிசெவியுறமயல்கழிவுற்றலைகடல்வருவிடமமுதுசெயு
மிறைவனைமுறைமுறைபரசினராலெனையுடைமுதல்வனுமவனெதிர்நின்
றுறைபெருமயலினையினிவிடுமோவுதவுநுமவிழைவனவுரைமினென.

பங்கயனிருகரமுச்சிமிசைப்பயில்வுறவடிதொழுதுளமுருகி
யெங்குறையின்றுபொறுத்தருளியெளிவருநாயகவுனைஞ்ஞரா
துங்குறுமயலினையெனையனுகாதன்புடைநிலைபெறுமன்புதவி
மங்கலிலூழிதோறென்வடிவில்வந்தருளெனமொழிவிண்டனனே. (௧௫)

திருமகள்விழைதருதிகழ்மருமச்செல்வனுமடியிணைதொழுதினியிம்
மருளினையொருபொழுதினுமடராதுன்னடிவழிபடுசெயல்பிறழல்
கருமுகிலுறழ்மிடறுடையவநின்கருணையின்னிடைநிலைபெறநிறுவி
லொருகுறையுளதுகொலடியடியேற்கென்றுளமகிழ்வுடனோதினனால்.

வேறு.

இவ்வண்ணமிருவர்களுமிரந்தேத்திவிண்ணப்பஞ்செய்யக்கேளா
வவ்வண்ணமாகவெனப்பெருங்கருணைகூர்ந்தருளியகிலமீன்ற
மைவ்வண்ணக்கருங்கூந்தன்முலைச்சுவடும்வளைத்தழும்புமாருமேனிச்
செவ்வண்ணப்பரமேட்டிபின்னருமங்கவர்க்கிதனைத்தெரித்துக்கூறும்.

இற்றைநாணீர்காணுமிவ்விலிங்கப்பெருவடிவமிறுதிக்கால
முற்றுநாளணுகாதுகொற்றங்கொடிருக்காஞ்சிமூதூர்மாடே
பற்றுபெருங்காதலினுற்றுபித்துவழிபட்டுப்பரசியானைப்
பெற்றியுறுவியனுலகம்படைத்தளிக்கும்பெருமதகைபெற்றுவாழ்மின்.

வெண்டிரைநீரகல்வரைப்பினும்முதலோர்விண்ணவர்களவுணர்சித்தர்
பண்டைவினைக்குறும்பெறியுமுனிவரர்மானிடர்யாரும்பாசக்கூட்டம்
விண்டகலும்படியின்றதொட்டெம்மையிலிங்கத்தின்மீளாநேசங்
கொண்டுபூசனைபுரிகபுரிவோர்க்குமயலென்றுங்குறுகலோம்பல். (௧௯)

கடப்பாடுவறுமைபயமனக்கவலைபசிபாவங்கடுநோய்மற்று
முடற்றுமையாங்கவர்க்குமீளவினைப்பிறவியுறலுறினுமின்பங்
கிடைத்தானுப்பெருமகிழ்ச்சிதலைசிறப்பநனிவாழ்கிளருஞ்சீற்ற
நடைக்காலன்மற்றவர்பானணுகற்கஞ்மானைவலியான்மன்றே. (௨௦)

வேதியர்மன்னவர்வணிகர்வேளாளர்சங்கரத்தின்மேயோராக
மூதிமையோருரகர்தயித்தியரரக்கர்கந்தருவர்முனிவராகப்
பூதிதருமிலிங்கபூசனையில்லார்பூதிசாதனங்கள்பேணு
றோதிலராமிழிஞரினுமிழிஞரோயவரொடுபேச்சியம்பிடுருரும்- (௨௧)

நியதிமகந்தவந்தானம்விரதநிலைபிறவற்றினிகழ்த்தும்பூசைப்
பயனைவையுமிலிங்கபூசனைக்கோடிகூற்றினொருபயனுக்கொவ்வா
வியனுலகமுய்யுமுறையிவ்வாறுநமதர்ணைவிதித்தேம்போற்றி
யுயலுறுவீரென்றருளிச்சிவபெருமானடியருளக்கோயில்புக்கான். (௨௨)

பாப்பணையிற்றுயில்வோனும்பனிமலரிற்பயில்வோனும்பணிந்துநீங்கி
யாப்பமைநீர்த்தடம்பொய்கைத்திருக்காஞ்சிவளநகரமெய்தியாங்கண்
மீப்பொலியுமகாலிங்கநிறீஇத்தொழுதுபயன்பெற்றார்விரிநீர்வைப்பி
னீப்பரியசிவலிங்கவழிபாட்டின்பேறெவரோநிகழ்த்தவல்லார். (௨௩)

மகாலிங்கப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் (௧௬௧௯.)

## (௬)ஆ வீராட்டகாசப்படலம்.

தண்காமர்புனல்குடையுநதயலார்திமிர்ந்தநறுந்தகரஞாழ
லெண்காதங்கமழிலஞ்சிமகாலிங்கத்தளிபுகன்றுமிதன்வடாது
விண்காவலுடையார்முன்னிளநகைபூத்திவ்வாலம்விடுக்காவன்றி
யுண்காவெனறருள்செய்தான்வீராட்டகாசநகருளாத்துமாலோ. (௧)

வள்ளவாய்நறைக்கமலவெண்பீடத்தரசிருக்குமாதரன்னப்
புள்ளவாநடைநல்லாண்முலைமுகட்டிற்கோட்டியபூங்களபந்தோய்ந்த
கள்ளவாந்தொடைத்திண்டோண்மறைக்கிழவனொருவனுக்குக்கடையேனு
ளளத்துள்ளவாமிறைவகுத்தபராத்தங்களோரிரண்டுமொழிந்தகாலை. (௨)

ஐவண்ணநிறம்படைத்ததிருமுகமைந்துடையபிரானருளாலந்திச்
செவ்வண்ணக்காலத்தியுருத்திரப்புத்தேளுதற்கட்செந்தீப்பொங்கி
மொய்வண்ணவண்டமெலாமுழுதுதிமிர்ந்தெழுந்துருக்கியுண்டுதேக்கி
மெய்வண்ணமனத்தன்பர்வினைப்பறம்பினீருக்கிவிட்டதாக. (௩)

ஆயநாளிரவில்லைபகலில்லையயனில்லையரியுமில்லை
மேயவான்முதற்பூதமிலையேனைப்பவுதிகத்தைவிளம்புமாறென்
பாயபேரண்டமெல்லாமிவ்வாறுபட்டீற்றிப்புரமூன்றட்ட
காய்கணையோனுணர்ந்தமேலீட்டிற்றன்னியல்புகருத்துட்கொள்ளா. (௪)

கண்டாரூமழியாதுதன்னொருபாற்பெருமாட்டிகாப்பவைகு
நடைமாறுத்திருக்காஞ்சிநகர்மன்னியுலகின்றநங்கைகாண
விடையாமவிரவெல்லாந்திருக்கூத்துநவின்றருளியெறுழ்சால்வெள்ளை
விடையோனுந்தனிப்பாகனூர்த்தார்த்துவீரநகைவிளைத்தான்மேன்மேல். (௫)

அவ்விரவுபுலர்காலைத்திருநடனநீத்திலிங்கவடிவமாகி
யவ்வரைப்பின்விளங்கினனுதலினால்வீராட்டகாசத்தேவா
மவ்விலிங்கம்வழிபட்டுச்சிலர்சித்தரறபுதம்ஞ்சித்திபெற்று
ரவ்வியல்புதனைக்கேட்டுக்கொங்கணமாமுனிச்செல்வனங்கணெய்தி. (௬)

அவ்விலிங்கமேன்மையினையளந்தறிவானுங்கதன்றன்சென்னிமீது
செவ்வனேதன்குளிகையீந்திட்டான்மற்றவற்றின்சிரமேல்வைப்பி
னெவ்வமுறநீருக்குமனையதையக்கணமேயவ்விலிங்கமுள்ளால்
வெளவியதுதனைக்கண்டான்வியப்பெய்தியவ்விலிங்கமுன்னர்வைகி. (௭)

மெய்த்தவங்களினிதாற்றிப்பேறுற்றானின்னுமவண்மேவிச்சீர்சால்
சித்திகளையுழவாதுபெறுகின்றோரொல்லையிலர்செந்நீர்தேக்கு
முத்தலைவேல்வீராட்டகாசிசன்மேன்மையெவர்மொழிவார்மாய
னத்தலத்தேவழிபட்டுப்பவளநிறம்பெற்றனவ்வகையுஞ்சொல்வாம். (௮)

வேறு.

விரிதிரைசுருட்டிக்கரைமிசையெறியும்வெள்ளிவெண்பாற்கடல்வரைப்பி
னெரிமணிமாடப்போகமாபுரத்தினெய்தருந்தனியிடத்திருந்து
புரிமுறுக்குடைந்துநறவுகொப்புளிக்கும்பூந்தவிசணங்கினேடிணங்கி
வரிவளைக்குடங்கைவானவன்விளையாட்டியற்கையின்மகிழவுறுமொருநாள்

மாயிருஞாலமுழுதுமீன்றளித்துமனைவியுமணனுமாயோ
ராயிடைப்பொழுதுகழிப்பியதம்முட்கதைசிலவறைகுவானமைந்தார்
பாயபாப்பணையிலறிதுயிலமர்வோன்பனிமலர்க்கிழத்தியைநோக்கித
தேயுறுண்ணுசுப்பினகன்றபேரல்குலொருகதைகேளெனச்செப்பும். (௧0)

நன்னிறம்படைத்தநாமநீர்ப்பரவைநளிதிரைப்பாற்கடன்மாமை
புன்னிறந்தோற்றவெள்ளொளிவிரிக்கும்புகரறுகயிலையெம்பெருமான்
மின்னிடைமருங்குலுமையுடனொருநாட்கறவருவெள்ளருவியஞ்சாற்
றன்னிறமாண்டமந்தரப்பறம்பிற்றனியிடத்தினிதுறுமேல்வை. (௧௧)

எழான்மிடற்றளிகள்கொள்ளைகூட்டுண்ணவீர்ந்தொடைநறுவிரியைம்பாற்
கழாமணிமேனிப்பிராட்டியைநோக்கிக்காளியென்றெம்பிரானழைப்ப
வழாநிலைக்கற்பினுள்ளகமவெதும்பிவரிவிழிசிவந்திலமுகுத்துக்
குழாமுடையிமையோரேத்தெடுத்திறைஞ்சுங்கோமளையின்னதுகூறும்.(௧௨

விடிந்தகைக்காள நிறம்படைத்துளன்யான்வெண்ணிறம்படைத்துளைநீயே
நெடுந்தகாய்நமக்குப்புணர்ச்சியெவ்வாறு நிகழுமற்றிங்கிதுகாறும், கடுந்
தகைகெண்மாட்டருளிஞலின்பக்கலவியிற்றிளைத்தனையினிநா, ணடுந்தகை
ப்பண்டையோய்கவுரியாம்வண்ணம்பெறுமுறையருடியென்றிரந்தாள் (கங)

பொலங்குவட்டிமயப்பனிவரைப்பிராட்டிப்புகன்றன திருச்செவிசாத்தி
யிலங்குவெண்ணீறுச்சுந்தரக்கடவுளியம்புவான்வரிவிழிகேட்டி
கலங்கலுவாய்நலகடவுளர்கருமப்பொருட்டினையிம்முறையழைத்தே
நலங்கொளவுலகாரொடாரும்புரத்தனங்கடனுதலிற்கண்டாய். (கச)

மற்றதுபின்னர்நசெளிதிந்கவுரநிறம்பெறுமாறுனக்குரைப்பல்
வெற்றிடமின்றியெங்கணுநிறைந்துபரவெளிப்பரப்பிடைமேவும்
பெற்றியன்யானேயாயினுந்தகைசால்பீடியர்தலங்களின்மாட்டு
மற்றமின்மறையோரகததிறுமுலவாவருள்சுரந்தினிதுவீறறிருப்பேன்.

மேம்படுமவற்றினுந்தமநதளிகள்விதியுளிமறைநெறியொழுக்க
மோமமிக்குயர்ந்தோருள்ளமுமெனக்குச்சிறந்தனவவற்றினு மேலாய்த்
தேம்பொழிலவேலிக்காசிமாநகரும்யோகிகள்சிந்தையுஞ்சிறந்த
வாம்பகரவற்றிற்காஞ்சியுமுண்மையடியவருள்ளமுஞ்சிறந்த. (கசு)

தகைபெறுமவற்றின்வேறெனக்கினி பதானமறறெங்கணுமில்லை
நகைமலர்க்கொடியேயநகவொய்திநயந்தெனையருச்சனையாற்றி [ள்
மிகையறுதவத்தானவேட்டவாபெறுதியென்றலும் விளங்கிழையுலமயா
பகைவினைநரக்குநகாஞ்சியினெய்திப்பஞ்சதீர்த்தக்கரைஞாங்கர். (கஎ)

மாதவமியற்றிபொன்னுருப்பெற்றுககவுரியாய்வயங்கினளிளைய
மேதகுமிறும்பூதென்னெனப்புகல்வேனவெறிமலர்ப்பங்கயத்தவிசின்
மாதர்வாணகையாயென்றெடுத்துரைததானமநதரமலமரச்சுழற்றி
யோதநீரளக்கரமுதெடுத்திமையோர்க்கூட்டியபெருந்திறற்குரிசில்.

செய்யவள்கேட்டுவியப்புமீக்கூர்ந்துசெப்புவாளென்னையாளுடையா
ளையவிச்செயலைக்கேட்டொறுமுலவாவற்புதம்பயக்குமான்மன்ற
மெய்யுணர்வின்பச்சததியுஞ்சிவனும்விளைக்குமிவ்விளைவுகளெல்லா [ளே.
மையறத்தெளிந்தோர்திருவிளையாட்டின் வண்மையென் றியம்புவர்மன்

இற்றலாற்காமற்காய்ந்தமுறறுணர்ந்துவரம்பிலின்புடையவீசனுக்கு
மீற்றெவனுளதோவவ்விளையாட்டுமுலகெலாமுய்யுமாறன்றே
யறறெனவுணராக்கயவர்கள்காமத்திறமெனக்கருதுவரனையர்
பெற்றியையாரோதெளிதரறபாலார்பிறங்கொளிமணிநிறக்குரிசில். (உ௦)

நிலையியற்பொருளுமியங்கியற்பொருளுநிலைபெறத்தொழிற்படுத்துடைய
தலைவனங்கவனேபனிவரைபிராட்டிதனையுநின்னையுமிடப்பான்
மலரணைப்பத்தேடனையுமெனையும்வலப்புடைக்காலருத்திரனைக்
கலைமகடனையுமுளத்திடைத்தர்தான்காத்துயிர்த்தழிப்பதுகருதி (உக)

அகிலமுந்தானேயருட்டொழிலடாத்துமாங்கவற்கெவற்றினுஞ்சால
மிகுபெருங்காதலுமையவளிடத்தும்விரவுமின்னிடத்தினுமன்றே
முகிலுறழ்கூந்தலவளெனநீயுமுதல்வனேயுன்னடியேற்கு
மகிழ்வுமீக்கிளைப்பவவ்வுருப்பெறுதியென்றனண்மலரிணைக்கிழத்தி. (௨௨)

விளங்கிழைமாற்றமச்சுதன்கேளாவெகுண்டுநின்மனக்கருத்திதுவேற்
களங்கனியனையேன்றன்னுடனிந்நாள்காறுநீபொலஞ்சுடர்நிறத்தாய்
வளங்கெழுமின்பமென்னனாநுகர்ந்தாய்மற்றினிச்செக்கர்வானுருவ
முளங்கொளப்பெறுகேனென்றவட்கியம்பிக்கதுமெனக்கரந்தனனாங்கு.

கச்சிமாநகரமெய்திவீராட்டகாசநல்வரைப்பினுக்கெதிரா
வச்சிவன்வீரநகைதிரண்டனையசக்கரதீர்த்தமுண்டாக்கி
முச்சகமேத்துங்கங்கையிற்சிறந்தவத்தடமூழ்கிநோன்பியற்றிப்
பச்சைமால்வதிந்தான்வதிந்திடம்பச்சைவண்ணனாலயமெனப்படுமால்.

ஆங்கனம்மைவைகுநாடொறுமீரேழாயிரமளிகெழுபொகுட்டுத்
தேங்கமழ்கமலங்கொண்டுவீராட்டகாசமாதேவனையருச்சித்
தோங்குபேரன்பிற்றொழுதெழுந்திரப்பவுலப்பருங்கருணைமீக்கூர்ந்து
மாங்குயில்பாகனெதிரெழுந்தருளிவழங்கினன்பவளநேர்வடிவம். (௨௫)

பொரியரைக்காயாம்போதுறழ்வண்ணங்கழீஇத்துகிர்புரைநிறமெய்திப்
பெரிதுளமகிழ்ந்தாளாயிடைச்சிலநாள்வைகிமீண்டரவணைப்பெருமான்
விரிதிரைத்தீம்பாற்கடலகத்தணுகிவிரைமலர்க்கிழத்தியோடிணங்கித்
தெரியிழைத்திருவேகாண்டிநீபவளச்சேயொளிதழைதருமிவ்வடிவம்.

கச்சறப்பணைத்துப்புடைபரந்தெழுந்தகதிர்மணிமுலையினாயிதுவென் [ப்
னிச்சையாற்பெற்றேன்விழைந்தவாறென்மாட்டினலதுகொனக்கேட்டு
பச்சிளந்தோகையிந்நிறமடிகளிச்சையாற்படைத்ததேன்மாய
விச்சையேபோலுநிலைமையன்றெனகிதென்பயன்விளைத்திடுமென்றாள்.

பாய்சிறைக்கலுழப்புள்ளரசகைக்கும்பஃறலைச்சேக்கையன்வெகுளா
நீயினியிருந்தைவண்ணமாகென்னச்சபித்தலுநேரிழைமேனிச், சேயொ
ளிகருகக்கண்டுளம்பதைத்தாள்சிறியனேன்செய்பிழைபொறுத்திங், கே
யுமிச்சாபந்தவிர்த்தருள்பொறையாள்கொண்கனேயென்றடிபணிந்தாள்.

தெம்முனைகடந்தகிரியோனிரங்கிச்செற்றத்தால்விரைந்துனைச்சபித்தே
னம்முறையாற்றாற்கரிநிறம்பெற்றாயாயினுமுன்னையின்விழைய
வெம்முலைப்போகமெனக்குளதாகவெருவலையெனத்தழீஇக்கொள்ளச்
செம்மலர்த்திருவுமடியிணையிறைஞ்சிதிருந்துதன்னிருக்கையுட்புக்காள்.

புக்கபினங்கட்பாங்கியர்தம்மோடுசாவினள்புதுநறாக்கான்று
நக்கபூஞ்சோலைக்காஞ்சிமாநகரைநண்ணியாங்கிளைவிழிகளிப்பத்
திக்கெலாம்பரசத்திகழுலகாணித்தீர்த்தநீர்த்தடங்கரைமாடே [ன்.
மைக்குழலுமையாளினிதமர்ந்தருளித்தவஞ்செயும்வரைப்பினைக்கண்டா

அனையகல்வரைப்புறண்பிலமாகியருட்பரவெளியதாய்த்திகழுங்
கனைகடலுடுக்கைநிலமகட்குந்தித்தானமாங்கமழ்நறுங்கடுக்கைத்
தனிமுதற்பிரமந்தலைக்கொருவடிவாந்தாழ்குழலுமையவட்கடியார்
வினைதபுமூலத்திருவுருவதுவேவிளங்கொளிக்காஞ்சியம்பதியுள். (௩௧)

குறைவிலாநிறைவாயுண்மையாயறிவாய்க் கொட்புறுமனமடங்கிடமாய்
மறைமுடிப்பொருளாயின்பமாய்ச்சிவமாய்மாசறவயங்குபே ரொளியை
நிறைதவயோகத்தலைவரிவ்வாறுநெஞ்சகத்தேவழிபடுவா
ரறைகடற்பரப்பிற்காஞ்சிமாநகரினுமிடைவழிபடுவோரால். (௩௨)

ஒருமுறையங்கட்காமமாந்தருமமுறுநர்தமக்குமத்தருமந்
தருபயன்கோடியாதலிற்கரடத்தடத்திழிகடாம்படுகலுழிப்
பெருவரைவதனப்பிள்ளையைக்குகனைப்பெற்றவளமர்பிலமதுதான்
கருதருகாமக்கோடியென்றுலகிற்காரணப்பெயரினால்வயங்கும். (௩௩)

அன்றியுங்காமக்கிறையவர்தனதரனையவர்கோடியர்த்தரலா, லென்று மோரியல்பினெங்கணும்விரவியெவற்றினுங்கடந்தபேரொளியைக், குன் றுறழ்கொம்மைக்குவிமுலைத்தடத்தாற்குழைத்தருள் கருணையெம்பிராட் டி, நன்றுவீற்றிருக்கும்பேரொளிப்பிலத்திற்கப்பெயர்நாட்டலுமாமால்.

இன்னுமிப்புவனப்பரப்பினிற்காமமென்பனமனைவியர்மக்கள்
பொன்னணியிருக்கைப்பூண்முதற்பலவாம்பூந்தளிரணிநலங்கவற்றுந்
தன்னடிவணங்கியிரந்தவர்தமக்குத்தடங்கிரியயர்தபேராட்டி
யன்னவைகோடியளித்திடலானுமப்பெயரெய்துமங்கதுவே. (௩௫)

அல்லதூஉங்கவைத்தாட்கரும்பகட்டூர்தியடுதொழிற்கூற்றினைக்குமைத்த
கொல்லையேற்றண்ணனுதல்விழிச்செந்தீக்கோட்படு மொருதனிக்கருப்பு
வில்லியைவிளையாட்டியற்கையிற்கோடிகாமராவிழித்திணைக்கடையா
லல்லியங்கோதையாங்களித்திடலாலப்பெயர்பூண்டதுமாமால். (௩௬)

மற்றுமாருயிர்சேர்நாற்பொருட்பயனில்வகுத்தமூன்றாவதுகாமம்
பற்றுகாமத்திற்கோடியாமுடிவிற்பயில்வதுவீடுபேறுறு
முற்றவர்தமக்குவீடுபேறளிக்குமுண்மையினாலுமப்பெயராற்
சொற்றிடப்படுமாலுலகெலாமீன்றுளமர்ந்தருள்சுடரொளிவிமானம்.

பின்னருமொன்றுககரமேயகரமகரமாப்பிரிதருமூன்று
முன்னவேறுகைக்குமயனரியீசனாயமுத்தேவரைப்பகரு
மின்னவர்தம்மையுகந்தொறுங்கோடிமுறையெழில்விழிகளிற் படை
மின்னிடைப்பிராட்டியென்பதனாலுமப்பெயர்விளங்குமென்பதுவே.

வேறுமொன்றுங்கட்காவெனப்படுவாள்வெண்மலராட்டிமாவெண்பா
ளூறுதேங்கமலப்பொகுட்டணையணங்காமுங்குவரிருவருமுகிலை
மாறுகொளைம்பாலுமைவிழிக்கோடிதன்னிடைவருமுறையானு
மேறுமத்திருப்பெயரெம்பெருமாட்டிக்கென்றெடுத்தியம்புவருணர்ந்தோர்.

விந்துவின்வயங்கியம்பைவீற்றிருக்கும்வியன்றிருச்சக்கரவடிவா
மந்தவான்பிலந்தானியம்பியகாமமனைத்திற்குமாத்திரமாகிப்
பந்தமில்காமக்கோட்டமென்றொருபேர்பரித்திடுமற்றெவற்றினுக்கு
முந்தியபீடமாதலினுந்திபீடமுமொழிந்திடப்படுமால். (௬0)

வேறு.

இனையதாகியதிருப்பிலமதனையெழானமிடற்றினஞ்சுருப்பினமுராஅ [தே
நனைகலுழ்ந்தலர்மலர்த்தவிசிருந்தை நகைமலர்க்கொடிகண்டுகைதொழு
யினையகுழலினிடப்புறம்வைகியடங்கலாபுரமழலெழச்சிரித்த
முனைவனுக்கொருசத்தியாயின்பாய்முழுதுமாகியவகிலகாரணியை.

பாதமொன்றொடுநிவிர்த்தியாற்றராக்கட்பதமிரண்டொடுபதிட்டை
யாற்புனற்கட்,பாதநான்கொடுவித்தையாற்கனற்கட்பதங்களெட்டொடு
சாந்தியால்வளிக்கட்,பாதமொன்பதன்றொடுவெளிப்பரப்பிற்பகருஞ்சாந்தி
யினதீதமாங்கலையாற், பாதமாயிரத்தொடுபரவெளிகட்பயிலுமக்கரத்
தனிமுதற்பரையை. (௬௨)

கருமைசெம்மைவெண்ணிறமுடையாளைக்காமக்கோடிவான்பிலவடி
வாளை,யருவிதாழ்ந்துவட்டணிமலைமகளைமாயையோடுலகனைத்துமீன்றுளை
யுருகிநெக்குநெக்குளப் பெருங்கோயிலுள்ளுறுத்தி யென்னுடம்பினைப்
பொதிந்து, மருவுமிக்கருநிறஞ்செறிவொழிப்பானகருணைசெய்கெனவழி
படலுற்றான். (௬௩)

வருணனுருனைவாருணியென்னப்பிருகுமாதவற்கருளியவாற்றாற்
றிருந்துவாரநாளுனைவழிபடுவார்பெருவளத்தொடுவாழ்வரொன்றுரைப்ப
வருவினைப்புலக்குறும்பெறிந்துயர்ந்தபிருகுமாமுனிமகளடியேற்குங் [ய்.
கருணைசெய்வதுகடனுனக்கன்றேகருப்புவில்லியைக் காய்ந்தவர்க்கினியா

காவெனப்பெயரியகலைமகளைமுந்தைஞான்றுநின் கண்ணெனப்புரந்தாய்
மாவெனப்பெயருடையமற்றெனையுமலர்ந்தநின்விழிபோற்புரந்தருளி
யேவெனப்பிறழ்தடங்கணாய்காமக்கண்ணியாம்பெயரெய்துவையென்று
ப்,பூவெனப்பயிலணிமிஞிறுகிழத்திபோற்றிசைத்தலுமெதிரெழுந்தருளி
எம்பிராட்டிவான்கருணைகூர்ந்தருளியேடவிழ்ந்த பூந்தவிசுறையணங்கே
கம்பியாதிமற்றுன்னுடற்கருமைகரியசாரு மாக்கழிகமுனையிலு
நம்புநல்லுருப்பெறுதியப்பொழுதேகாரணைநகுமிச்சுரியவளாவாய் [ய்.
வம்பறுத்தெழுந்தோங்கியண்ணாந்தமதாதல விங்கியவனமுலைத்தோகா

அழுந்துவாய்ந்தநின்வடிவினிறகழியுமனையசாந்தணிந்தவினர்தமக்கு,வி
ழுவுமின்பமுஞ்செல்வமும்புகழுமேகலின்மையுமிகழுமற்றொழிக,பழைய
வேதமுற்றுணர்ந்துயர்சிறப்பிறபனுவலாட்டியுமிவணமர்செயலாற், கழி
விலன்பினீவேட்டவாறெனக்குக்காமக்கண்ணியாம்பெயருறுகென்ன.

இனையவாறிவணிகழ்வுழிச்சுரும்பரிமிருந்தாமரையுந்தியங்கடவுண் [தக்
மனையகத்துமாமடந்தையைக்காணன்மனமழுங்கினன் பிரிவுநோய்வருத்
கனைகடற்பரப்பெங்கணுந்தேடிக்காஞ்சிமாநகராவயிற்கண்டா
னனையதாரமுமிறைவியுந்தம்முளுறைவகேட்டவணொளித்துநின்றனனால்,

ஒள்வளைக்கரத்திருவருமவளையுணர்ந்துநோக்கின ளென்னையாளுடையா
கள்வனொத்திவணிற்பவன்யாரோயெனக்கடாயினள்கடிமலரணங்குந் [ள்
வெள்கலுற்றுமுன்னிறைஞ்சினன்மாயோன் விரைவினம்பிகைதிருவடிவ
ணங்கி, யுள்ளகம்பெருமகிழ்ச்சியிற்றிளைபபவொருமருங்குறவொடுங்கிநி
ன்றனனே. (௪௧)

நங்கைநாகனைக்குறிசிலைநோக்கிநன்றுவந்தனையோவெனவினவி, யங்கண்
மூச்சகநீபுரந்தளிக்குமாருயிர்த்தொகையினிதுவாழ்ந்தனவே, பங்கயக்க
ணுயென்றலுங்கலுழப்பாகனின்னருட்கருணைபெறலுடையே,மெங்கள்வா
ழ்வினுக்கெவனகுறையானுமிவளுமுய்ந்தனமெனத்தொழுதுரைத்தான்.

இறைவியின்னருமொன்றவற்கியம்புமீண்டுமுப்பதிற்றிரண்டறம்வளர்
க்கு, முறையினென்னறச்சாலையீதிங்கோர்மூரிப்பாரிடமிதற்கிடையூருய்
க், குறைவிலாற்றலினுழிதருமதனைக்குறும்படக்குறி நீயெனவேவ, நறை
மலர்த்துழாய்மோலியுமிவ றருஞ்சிநயநதுபஞ்சதீர்த்தத்தடங்கரைப்பால்.

அன்றுபாரிடம்பாரிடைவீழ்த்தியாற்றலான்மிதித்ததன் மிசைநின்று
னின்றவன்றனையுநதிமேலெழும்பவொரித்திருநதனனிருந்தவன்றனையும்
வென்றிசால்விறற்பூதமேலுநதநீண்டுமெற்றதன்மிசைப்படக்கிடநதான்
கன்றுபூதமும்வலிமுழுதிழநதுக்கமலக்கண்ணனைவணங்கியொன்றிரக்கும்

வள்ளலேமலர்த் திருவிளையாடுமார்பனே பெரும்பசியெனை வருத்த
வுள்ளுநடநதுளேனுண்டுசோறடியேறகொருமகனறனை யுயிரொடுமுதவி
ற், கொள்ளுமப்பலியேற்றுளமகிழ்வேன்கொடுத்தியிவ்வரமெனக்கெனவ
ரவப்,பள்ளியோனுமற்றுகெனவிளம்பியபந்தாபோற்றவத்தலத் தினிதிரு
ந்தான். (௫௮)

கள்வனின்றவனிருந்தவன்கிடந்தோனென்னுநால்வகைக்கரிசறு வடிவா
ல்,வெள்வளைக்கரக்கடவுளங்கமர்நதானவிமலநாயகியாளையினுற்றுன்.
முள்ளெயிற்றராப்பணம்புரையல்குன்முளரிமாதுமப்பிலத்தயலிருந்தாள்
புள்ளுயர்த்தயற்கினியவாமங்கட்போற்றபெற்றவாவை [illegible]

கறைமிடற்றிறைவைகும் வீராட்டகாசமேன்மையின் றொடர்ச்சியாலிங்
யறைகழற்றிருநாயகன்வரலாறனைத்துங்கூறினுமத்திருநகரை [சே
நிறைவிருப்பினுல்வழிபடப்பெறுவோர்நிலமிசைப்பெருவாழ்வின ராகிப்
பிறைமுடிபிரான்றிருவடிக்கலப்பிற்பெறலரும்பரபோகமுற்றிருப்பார்.

வீராட்டகாசப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௭௪௬.

## ௫௩. பாண்டவீசப்படலம்.

பேரின்பச்சாக்கியனூர்கல்லெறிகும்பேறுதவு
வார்தங்கும்வீராட்டகாசவரவிதுவாற்
சீர்தங்குதென்பாற்றிருபாண்டவீச்சரமாங்
கார்தங்குமிஞ்சிக்கடிநகரங்கட்டுரைப்பாம்.

தருமம்பயந்ததநயன்முதலோ
ருருக்கெழுவெங்காட்டினுரோமசனேயாதித்
திருமுனிவர்தம்மோடெந்தீர்த்தமெலாமாடக்
கருதிநடந்தார்கழியாதகாதலார். (௨)

அங்கங்கிலிங்கநிறுவியருச்சித்துப்
பங்கந்துமிக்கும்பரம்பொருளைப்போற்றிசைத்துச்
சிங்கம்படுக்குந்திறலார்வருநெறியாற்
றெங்கம்பொழில்சூழ்திருக்காஞ்சிநண்ணினார். (௩)

அங்கட்பலதளியுநோக்கியகமகிழ்ச்சி
பொங்கித்திருக்கம்பமாதியாப்புண்ணியநீர்க
கங்கைச்சடிலக்கடவுளிடமெல்லாந்
துங்கப்பேரன்பிற்றொழுதுதொழுதேகினார். (௪)

வீராட்டகாசங்கடைக்கால்வியன்மலர்கொண்
டாராப்பேரன்பினருச்சித்ததன்றென்பா
லோராரத்தத்தம்பெயர்சாத்தியெல்லாருந்
தாரார்த்தகொன்றைச்சிவலிங்கந்தாபித்தார். (௫)

அறமைந்தன்வீமனவிசயனலர்பூந்தார்
நறவுண்டதிண்டோணகுலசகாதேவர்
மறனின்றியினைவர்மனைக்கிழமைபூண்ட
முறையொன்றுகற்பிற்றுரோபதைமுன்னுளோர். (௬)

சீரார்திருட்டத்துமனன்சிகண்டிமற்று
மேரார்கழற்காலயதுமரபின்மன்னருட
னூராறுற்கன்பினுரோமசர்முற்கலனார்
பாராவியாதர்முதலாயபனமுனிவர். (௭)

என்றிவையொல்லாமிலிங்கந்தனித்தனியே
நன்றிருத்தியேத்திநயப்பாடுபெறலரா
லன்றவர்கள்போற்றுமிலிங்கமவைகண்டோர்
மன்றினடமாடும்வள்ளலருள்பெறுவார். (௮)

அன்னவற்றின்றென்பாற்கயிலாயமவ்வரைப்பி
னன்னர்க்கயிலாயநாதன்றனைநிறுவி
மன்னுந்திசைக்கிறைமைபெற்றான்மருவலார்க்
கின்னல்புரிமுத்தலைவேலீசானனென்பவே. (௯)

பாண்டவேசபடலமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௧௭௫௫.

## ௫௪ மச்சீசப்படலம்.

பார்த்தராதியோர்வழிபடும்புக
ழார்த்தசூழல்கள்விளம்பினுமருள்
கூர்த்தவப்புலக்குடககணிப்பிநீர்த்
தீர்த்தனார்நகர்மச்சீசங்கூறுவாம். (௧)

ஒப்பிலற்புதமுணர்த்தவெம்பிரா
னிப்பிமுத்தமங்கெடுத்தளித்தலாற்
செப்பரும்புகழிப்பித்தீர்த்தமென்
றப்பெரும்பெயரதனுக்காயதே. (௨)

மற்றதன்கரைமச்சலிங்கமென்
றற்றமில்லரியருச்சித்துள்ளது
உற்றபாதகச்சோமகாசுரன்
கற்றுமாமறைகவர்ந்தொளித்தநாள். (௩)

ஒத்தொழிந்தனவுலகம்யாவையு
நீத்தவேள்வியநிலைமைகுன்றலாற்
றீத்தெறும்பசித்தேவர்மாயனைச்
சேர்த்துநீசரணெனத்துதித்தனர். (௪)

அஞ்சலீரெனவருளியச்சுத
னெஞ்சகத்துறநினைவினாடினா
னெஞ்சுருமறையாவுங்கைக்கொடு
வஞ்சனூழியுண்மறைந்தவண்ணமே. (௫)

பிருகுமாமுனிசபித்தபெற்றியா
லொருவருங்கயலுருவுதாங்குபு
மருமலர்ப்பொழிற்காஞ்சிவைப்பிடைப்
பொருவிலிப்பிநீர்ப்புடையினண்ணினான். (௬)

வேறு.

சலங்கொண்மீனுருத்தன்பெயர்நாட்டியங்
கிலிங்கமன்பினிருத்தியருச்சனை
துலங்கச்செய்தருள்பெற்றுத்தொகுநிதிக்
கலங்கண்மல்குகடலகத்தெய்தினான். (௭)

சோமகன்றனையட்டுச்சுருதிகண்
மாமறைக்குலத்தார்க்குவழங்கினா
னாமநீர்க்கடனாகணைப்பள்ளிமேற்
றாமரைக்கண்வளருந்தகைமையான். (௮)

சங்கநேருருப்பஞ்சசனப்பெயர்
வெங்கனானையுமாயிடைவீட்டியே
அங்கவோசைவலம்புரித்தோற்றமா
மங்கவன்றனெனும்பெயரணிந்தனன்

கச்சிமாநகர்வைப்பிறகருந்துழாய்
மச்சமர்ச்சித்தமச்சலிங்கத்தினை
நச்சியேத்துநாதாம்பெறுநனனல
மிச்சகத்தெவரிற்றென்றளப்பரோ. (௪௦)

மச்சேசப்படல முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-களசுரு.

## [illegible] அபிராமீச்சரப்படலம்.

காவுசூழக்கஞலிச்சுருப்பின
மேவுமச்சலிங்கேசமவிளமபினும்
வாவிமல்குமதன்வடமேற்றிசைத்
தாவில்சீரபிராமீச்சரஞ்சொல்வாம். (௧)

வேறு.

மாவலியெனபபெயர்மரீஇயதானவர்
காவலனுலகெலாங்காத்தளிக்குநாட்
டேவாகட்கிறையவனரசுதேயதலின
யாவதுசெயலெனகனியெனறெண்ணுழி. (௨)

செநதளிர்மலரடிததிருவினாயக
னிநதிரநகிளையவனெனனககாசிபன்
மைநதனாய்ககுறளுருத்தாஙகிமன்னினன்
முநதையோர்க்கரசியலுதவமுனனியே. (௩)

ஆலங்கொளிக்காஞ்சியினபிராமீச்சர
விலிங்கமங்கியல்புளிவழிபட்டேததினன்
வலமபெறச்சிலபகல்வைகிககங்கைநீ
சிலம்புவேணியனருள்செய்யப்போந்தனன். (௪)

வெய்யவாளவுணர்கோன்வேள்விச்சாலையி
னெய்திமூவடிநிலமிரநதுவேண்டினன்
கைதவமுணர்ந்தெதிராதடுத்தகாழ்படு
மையறுவெள்ளியைவிழியைமாறறினன். (௫)

தன்னடிமும்மையினளவைசாலிட
மந்நிலையவுணர்கோனளிபபவேன்றனன்
கொன்னுறவளர்ந்தனனண்டகூடமேற
சென்னிபோயுரிஞுறததிகழ்ந்துதோன்றினன். (௬)

ஈரடிப்படுத்தனனுலகம்யாவுமற்
றோரடிக்கிடம்பெறுறுதவினன்றனை
[illegible]யுரிடைப்பாதலச்சிறையினுக்கிறு
[illegible]த்தரற்கிறைமைநல்கினன். (௭)



மறுவறுங்காஞ்சிமாவனைப்பினன்னுயு
நறுமலர்ச்சடையபிராமநாயகன்
பிறைமுடிக்காட்டுவான்வாமனப்பெயர்
நிறைபுனற்குண்டமொன்றகழ்ந்தநீடியே.

புண்ணியப்பூம்புனலாட்டிப்போர்விடை
யண்ணலைத்தொழுதலகளந்தபேருருக்
கண்ணுதன்மகிழ்வுறக்காட்டிப்பூந்துழாய்ப்
பண்ணவனுயிடைப்பணியினமேயினான். (க)

அபிராமீச்சரப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-களஎச.

## கண்ணீசப்படலம்.

வாமனப்பெயர்மாணிதொழும்மபி
ராமநாதவரைப்புவிளம்பினு
நாமநீர்த்தடங்காஞ்சிநகர்வயி
னேமமாண்டகண்ணீசமியம்புவாம். (க)

கடலுயிர்த்தகடுவிடந்தாக்கிமுன்
னுடலெலாங்கரிவுற்றுவெதும்பலாற்
படவராவணைப்பண்ணவனமாழ்கியவ்
விடமயின்றவிமலனைப்போற்றுவான். (உ)

கச்சியெய்தினன்கண்ணலிங்கத்தினை
நச்சியன்பினிறீஇநயந்தேத்தினான்
பச்சைமென்கொடிபாகனகருணைகூர்ந்
திச்சையாதுவிளம்புதியென்றலும். (ங)

குமுதவாய்ப்பசுங்கோமளைகூறநீ
யிமிழ்திரைக்கடல்வெவ்விடமென்பொருட்
டமுதுசெய்தனையங்கதன்முன்னமத்
திமிரநஞ்சஞ்சிறிதெனைத்தாக்கலால். (ச)

மேனிமுற்றுங்கருகிவெதும்பினேன்
யானினிப்புமவெப்பிதுவாற்றலேன
கானிலாயகங்கைததொடையொடு
துனிலாப்பிறைசுற்றியமோலியாய். (ரு)

பங்கநீக்கிநலந்தருபான்மையாற்
சங்கரன்சிவன்சம்புவுருத்திரப்
புங்கவனெனநாமங்கள்பூண்டனை
யங்கணுவடியேனுனடைக்கலம். (சா)

என்றுமாயனிரந்திதுவேண்டலுங்
கொன்றைமாலைக்குழகனிரங்கினான்
மன்றலந்துணர்வாசத்துளவினோ
யொன்றுகேட்டியுனக்கிதுவேண்டுமேல். (எ)

என்றும்யாமகிழ்ந்தோம்பலிங்கமுற்
சென்றுநம்முடித்திங்கணிலாத்தய
வின்றுகச்சிநிலாததுண்டமாலென
வொன்றுநாமம்பெறுதியென்றும்பர்கோன். (அ)

நாமவெந்துயர்தீர்திறநல்குபு
வாமமேகலையோடுமறைந்தனன்
றாமலர்த்துளவோனுநதொழுதெழூஉத்
தீமைதீரத்திருமுன்னர்லவகினான. (க)

கரியவன்பணிகண்ணலிங்கீசனை
யுரியவன்பின்வழிபடுவோரும்பர்
மருவிவாழ்குவர்மற்றுங்கவுசிகீச்
சரமொன்றுள்ளதுசங்கரலருனமே. (க0)

வளையணங்குவடிவிற்கழிந்தகா
ருரிவைகோசத்துதித்தகவுசிகி
யிருமையன்பினிருத்தியருச்சனை
புரியும்பொற்பதுமற்றும்புகலுவாம். (கக)

வேறு. உலகாணித்தடமருங்குமாகாளீசமொன்றுளதுமாகாளனெனு ம்பேரன்பின், விலகாதபாப்பரசுவீடுபேறுவிழைந்தேதென்றிசைக்கயிலை வேணித்திங்கட், கலையானைத்தொழுதுறைநாளாணையாற்றாற் காஞ்சியிற் போந்தவ்விலிங்கநிறுவிப்போற்றி, நிலநீடுதென்கயிலையீளநண்ணிநீப்பரி யபெருவாழ்வுகிலாயதன்றே. (கஉ)

கண்ணீசப்படல முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-களஅகூ.

## குமரகோட்டப்படலம்.

கடப்பரும்பிறவிவேலைசுவற்றுங்கண்ணலிங்கமொடுகவுசிகலிங்க, மட ப்பிடிக்கிடமளித்தபிரான்மாகாளலிங்கமெனுமூன்றுமொழிந்தா, மடற்ப டைச்செறுநர்சேனையனைத்துமழித்துழச்சிகிணமுண்டுதினைதுக், குடர் க்கொழுந்தொடையிலைச்சியசெவ்வேற்குரிசில்வாழ் குமரகோட்டமுரை ப்பாம். (க)

தருக்குமிக்குடையதாருகனென்னுந் தானவர்க்கிறையைவெய்யகள த்தின், முருக்கியாருயிர்செகுத்துவிசும்பின்முதல்வனுக் கிறைமைநல்கிய பின்னர்ச், செருக்கடந்தவடிவேல்வலனேந்துஞ்செம்மல்வெண்கயிலைமால் வரையெய்தி, மருக்கடுக்கைமுடிவள்ளலையோர்பானமலைமடந்தையையு ணங்கிமகிழ்ந்து. (உ)

நெட்டிலைவாழைக்குலங்கணெருப்புறழ்செம்பழப்பூக
மட்டுமதுக்கழைதூணத்தியாத்தவிர்காழ்வடநாற்றி
மட்டவிழ்பூந்தொடைதூக்கிவன்னவிதானம்விதானித்
திட்டுமணித்திருக்கோயிற்கெழில்புரிந்தாரொருசாரார். (௩௨௮)

வாசக்கொழும்புழுகபயிவண்ணமலர்த்துகளட்டி
வீசிச்செழும்பனிமன்னீராவிரைகமழ்தீம்புகையேற்றிக்
காசைத்தகர்த்துக்கரைத்துக்கவின்றிருமாளிகைச்சுற்று
மாசைச்சுவர்த்தலமுற்றுஞ்சித்திரித்தாரொருசாரார். (௩௨௯)

வீறும்விரைப்பாளிதங்கள்வெறுவியவல்சியக்காரச்
சோறுபுளிந்தயிர்ச்சொன்றிதுப்புடையேனைப்புழுக்க
ஞறுநறுங்குய்க்கருனைமுதலியநால்வகையுண்டி
யாறுசுவைத்திறம்விம்மவட்டனராலொருசாரார். (௩௩௦)

ஓட்டொழியாநறுந்தேறலொண்மலர்சூற்றன்கொண்டு
சூட்டொடுகண்ணிகளிண்டைதொங்கன்முதறபலவாக்கி
யீட்டுநறும்புகையேற்றியீர்ம்பனிநீர்தெளித்தம்பொற்
சேட்டொளிமுழியமைத்துச்சேர்த்தனராலொருசாரார். (௩௩௧)

செம்பொனிழைத்தசும்பிற்றெய்வதமந்திரமோதி
யம்பொனிழைத்துகில்வாய்ப்பெய்தலையெறிதீர்த்தம்வடித்துக்
கொம்பிஞெகிழ்ந்தனர்கொண்டுகுளிர்மணிக்கோயிலினுள்ளாற்
பம்புநிறைகணிறையப்பாய்த்தினராலொருசாரார். (௩௩௨)

சுடர்விடுமாடகச்செம்பொற்றூமணிவட்டகையோடு
படலிகையாதிகள்சுத்திபண்ணியமைத்துநறும்பூ
வடைதளிர்யாவையுமாய்ந்தங்கார்த்திமணத்தவேலாதிக்
கடிதிருமஞ்சனமட்டிக்கனிமிருந்தாரொருசாரார். (௩௩௩)

அங்குபலாக்கனிதாற்றுத்தூத்திரள்வாழைப்பழங்கண்
மாங்கனிக்குப்பைநரந்தமாதுளைநேரொலுமிச்சந்
தேங்கமழ்தெங்கினகுடக்காய்தீம்படுபூகப்பழுக்கா
யாங்கணிரப்பினாகைக்கொணடணுகினராலொருசாரார். (௩௩௪)

ஆனுடைப்பாற்குடங்கோடியருஞ்சுவைநெய்க்குடங்கோடி
தேனுடைப்பொற்குடங்கோடிசெழுங்கரும்பட்டதண்சாறு
தானிறைபொற்குடங்கோடிதயிருடைப்பொற்குடங்கோடி
வானமிழ்தக்குடங்கோடிவல்லையுய்த்தாரொருசாரார். (௩௩௫)

திருமலியோவியப்பட்டுந்தீபத்தியன்றவெண்பட்டுங்
குருமலிபாசிலைப்பட்டுங்கோபங்கர்த்தசெம்பட்டு
முருவுடைமாழையம்பட்டுமொளிர்தருநீனிறப்பட்டுந்
தருவுதவும்பலபட்டுந்தந்தனராலொருசாரார். (௩௩௬)

விற்படுமேரவிருதம்பைமின்னுமிழ்பொன்னணிபட்ட
மற்பகைவிள்ளவிளங்குமங்கதமாழிகடகம்
பற்பலகண்டத்தணிகள்பாயொளியாரமுதலாங்
கற்புகழுய்த்தனகொண்டுகெடுத்தனராலொருசாரார். (௩௩௭)

முழுதுலகுங்கமழ்கிற்குமுருகுடைச்சந்தனத்தேய்விற்
புழுகினைவாக்கிநுணங்கபபொடிந்திடுகப்புரமட்டிச்
செழுவியகுங்குமம்பெய்துசெறிவுறமட்டித்தெடுத்த
விழுதமைபொற்குடமேந்திவினைநதனராலொருசாரார். (௩௩௮)

கண்ணாடிசாமரைவெண்கேழ்க்கவிகைவளியெறிவட்டம்
புண்ணியநீறுபளிதம்புகைமலிகுங்குலியங்கள்
வண்ணமணிக்குடநதட்டோடாராதனைக்குவருந்த
வெண்ணினுறுப்பிறபிறவுமீட்டினராலொருசாரார். (௩௩௯)

நெய்விரவம்புயநாளநீளிழைந்திபமனாநதம்
பைவிரிபாந்தளுயிரத்தபருஉமணிதீபமனாநதந
தெய்வதத்திபமனாநதந்தீமபுகைவர்க்கமனாநதங்
கைவகுத்தெங்கணுமலககண்டனராலொருசாரார். (௩௪0)

மாடகவச்சிரப்பத்தர்வார்நரப்பின்னிசையாழும்
பாடுறுபாடலுமொன்றப்பண்ணினமைமபினகளொன்று
மீடுறுபற்பலியங்களெழுப்புமினென்றுமிடைநயக
வாடுமினென்றும்விண்ணோரைப்பணித்தனராங்கொருசாரார். (௩௪௧)

வேறு.

இன்னணம்பணியெலாமிகுளைமார்செய
மின்னவிர்மணிவடஞ்சுமநதவெம்முலைக்
கன்னிமாமண்டபநின்றுங்காதலாற
கொன்னுமாபத்திரக்கூவனண்ணினாள். (௩௪௨)

நிறைபரஞ்சுடரடிநினைந்துகூவனீர்
மறைநெறிவிதியுளிவழாமையாடியே
யிருசுப்பநநலரொடுத்துநீட்டிய
வறுவையிறைற்றிமெய்யீரமாறினாள். (௩௪௩)

தேசிகப்பட்டிரண்டுடுத்துத்தீவினை
யாசிரித்தருளுநீருகமெங்கணும்
பூசிமுப்புண்டரம்பொறித்துகண்டிகை
நேசமுற்றணிநதுசெய்நியமமுற்றியே. (௩௪௪)

காவலர்பூசனைபுரியுங்காதலான்
மேவரவேண்டுவகொண்டுமெல்லியற்
பாவையர்புடைவரப்படர்நதிரண்டெனு
மாவரணந்தனையணுகினாளரோ. (௩௪௫)

சங்கினமவயிரொடுதாரைகாகளம்
பொங்கொலிச்சின்னங்கள்வீணைபூங்குழல்
வங்கியம்பேரிவார்முரசந்திண்டிம
மெங்கணுங்கடலுடைந்தென்னவார்ப்பவே. (௩௪௬)

கின்னரர்கருடர்கிம்புருடர்பாண்செயக்
கன்னியரொதிரொதிர்கலவியாடிடத்
துன்னியமுனிவரர்ஞானருமவேதிய
ரொன்னருமறைமுழக்கெடுத்துஞ்சூழவே. (௩௪௭)

ஐவகைப்பிரமுமங்கமாறுமோர்
கைவளர்முகனுடைக்கடவுளயேழமுங்
கொய்விலாக்கடம்பணிகோவுமோகையான்
வைகுமச்சூழலைவலங்கொண்டெய்துவார். (௩௪௮)

ஐங்கரப்பிள்ளையைநிருதியாசைபிற
செங்கைவேலிளவலையுலவைத்திகங்கு
முங்குறுபூசையினுவப்பச்செய்துபோய்
மங்கலந்திவாழ்வாயதனண்ணியே. (௩௪௯)

வாயிலோர்பூசனைமரபினாற்றினண்
மாயிருமறைத்தனிமாவினீழல்வாழ்
நாயனார்தமைவிழிநயப்பக்காண்டலு
மீயுயர்காதலானவீழ்ந்தெழுந்தனள். (௩௫0)

ஒருங்கியமனத்தினஞ்செழுந்துமோதியே
கருங்குழற்கறைமேற்குவித்தகையொடும்
பெருங்களிதுளும்பியுள்புகுந்துபிஞ்ஞகர்
மருங்குறமுறைமுறைவணங்கியேத்தினள். (௩௫௧)

முருகலர்மாவடிமுளைத்ததீஞ்சுவை
யருள்விளையமுதினையாரக்கண்களாற்
பருகினள்பனமுறைபழிச்சியண்ணலார்
கருணையேநோக்கிவெங்களிப்பினீடினாள். (௩௫௨)

விழிகளானந்தநீர்த்தாரைமெய்யெலாம்
பொழியநெக்குருகினள்புளகம்போர்த்தனள்
மொழிதடுமாறினளறிவின்முற்றிய
தொழிலமைபூசனைதொடங்கனமேயினாள். (௩௫௩)

வேறு.

வழுவறுதோற்றமாதிவழுக்கியபாவத்தீமை
கழுவநின்பூசையினாட்கடைப்பிடித்தருளாற்செய்கேன்
முழுதருள்வழங்கியூறுநீக்கிமுன்னின்றுகோடி
செழுமதிமுடியாயென்றுசங்கற்பஞ்செய்துகொண்டாள். (௩௫௪)

பூமுதற்பூதசுத்திபுரிந்தகப்பூசையாற்றிக்
காமருமலரும்வாசவருக்கமுங்கலந்ததெண்ணீர்த்
தோமில்பாத்தியமேயாசமனமருக்கியானாய்நாக்கி
மாமுரலிதழித்தாரானமுடியினைசமலனைமாற்றி. (௩௫௫)

மாதர்வண்சத்தியாதிசத்திபீடிலகவாய்ந்த
வாதனமதன்மேல்வைகுஞ்சதாசிவவடிவினின்ற
சோதியைத்திருவேகம்பச்சுடரினைநடுகிழ்பக்க
மீதறநிறைந்துவிம்முமானந்தநிமலவாழ்வை. (௩௫௬)

சீத்திருளறுக்குநோக்காற்றெளிவுறக்கண்டுபோற்றிப்
பாத்தியமுதலாமுன்னம்ப ரமுகமுடியினீந்து
நாத்திகழ்மனுவின்மாண்டநறுமதுப்பருக்கநல்கி
யாத்தனூல்விதியினாற்றான்மறித்துமாசமனமீந்தாள். (௩௫௭)

இணங்கியநெய்பால்பெய்தவின்னமுதிசையநல்கி
மணங்கமழெண்ணெய்க்காப்புமாநெல்லிமஞ்சட்காப்பு
மணங்கருங்கபிலையைந்தநறுமதுப்பல்குடத்துத்தீம்பால்
குணமலகெழுதயிரநெய்சொட்டேன்ருளிரிளநீருமாட்டி. (௩௫௮)

கருப்புமிழ்தேறலாட்டிப்பல்கனிவருக்கமாட்டி
யருத்திகூரன்பினோன்றசந்தனக்குழம்புமாட்டி
மருக்கமழ்நறுந்தகோத்திமதிதடங்கூவுறநெண்ணீ
ருருத்திரமனுக்களோதிவிதியுளிநிறையவாட்டி. (௩௫௯)

நுழையுநூற்கலிங்கமேர்திரொய்தெனமேனியொற்றி
விழைதருநறும்பட்டாடைவிளங்கெழின்முநூல்சாத்தித்
தழையுமான்மதங்கற்பூரஞ்சந்தனக்கலவைசாத்தி
யிழையணிவருக்கமேனையீர்நறுந்தொடையலங்கல்சாத்தி. (௩௬0)

நறுவிரைத்தூபநீபங்காட்டிநால்வகைவேறுண்டி
யறுசுவைத்திறத்தின்மாணவமுதுசெய்வித்துச்சீத
முறுபுனலுதவிக்கைவாய்பூசியொண்பழுக்காய்வாசம்
பெறுமிலைமுகவாசங்கணமந்திரம்பேசிநல்கி. (௩௬௧)

அதிற்புனைதீபமெல்லாமினிதளித்தரக்குநன்னீர்
மகிழ்ச்சியிற்சுழற்றிப்பல்காலவலஞ்செய்துவணங்கிப்போற்றி
யிகப்பிலஞ்செழுத்துமெண்ணியின்னனபிறவுமாற்றி
முகிழ்த்தபேரன்பினூன்றபூசனைமுற்றச்செய்தாள (௩௬௨)

முற்றுவித்தெழுந்துமீண்டுமெய்யொளிப்பிலத்தினபாங்க
ரற்றமிலறமெண்ணான்குமருள்வழிவளர்ப்பாளாகிப்
பற்றலார்புரஞ்செற்றானையிம்முறையெண்ணில்பன்னாட்
சிற்றிடையெம்பிராட்டிபூசனைசெய்துவாழ்நாள் (௩௬௩)

அன்னணமளவில்காதலருச்சனைத்திறத்தினோங்க
மன்னியமறைநூல்வாய்மையாகமவழியிறபேணுந்
தன்னிகரிமயமீன்றமதராரித்தடங்கட்செவவாய்
மின்னிடைக்கொருநாளங்கணிகழ்ந்ததுவிளம்பலுற்றேன். (௩௬௪)

பண்டுபோற்கம்பையாற்றுமணிப்புனல்படிந்துமெய்யிற்
கண்டிகைநீறுதாங்கிக்கடப்படுநியமமாறறித்
தொண்டினில்வழாதபூசைத்தொழிற்றலைநின்றகாதன்
மண்டவேகம்பனாைமஞ்சனமாட்டுங்காலை. (௩௬௫)

மருமலர்த்தனிமாநீழல்வள்ளலார்மேன்மேலன்பு
பெருகியகருத்தினுட்சூப்பேரருட்கருணைகூர்ந்த
வொருதிருவிளையாட்டாலேபத்தியினுறுதிநோக்கித்
திருவருள்புரிவானெண்ணியிதுதிருவுள்ளஞ்செய்தார். (௩௬௬)

விழுமியவண்டத்துள்ளும்புறத்தினும்விரவுந்தீர்த்த
முழுவதுமொருங்குநண்ணமுன்னினாமுனனலோடு
மொழுகுநீர்க்கம்பையாற்றினுடன்விராய்க்கடைக்கால்வெள்ள
மெழுவதுகடுப்பவெல்லாப்புனலும்வந்திறுந்தவன்றே. (௩௬௭)

வேறு.

மிடைவானவர்திசைகாவலர்புவிமேலவர்காணாஉக
கடைநாளனுகிற்றெலனவெருவிக்கலுழ்கண்ணி
ரிடையாறெனவிரவக்கொடுவேகத்தொடுமெவ்வெப்
புடைநீர்களுமுடனூகியகம்பைப்புனல்வருமால். (௩௬௮)

படலைக்கருமுகிலும்மிடையிடையேபடரொளிசேர்
தொடலைக்கதிருடுவுந்துவளூறுபாசடைவிரவு
மிடையிற்றிகழ்மலரும்மெனவிலகக்கனமுமுட்
படமிக்கெழுபரவைப்புனல்பயமுறறிடவருமால. (௩௬௯)

அடிநேடியதிருமாலெனவிருமாநிலமகழ்
முடிநேடியமலரோனெனவிண்மேற்செலமுடுகுங்
கடவாமுரணிருவோரொதிர்கனலாயெழுமுருவ
முடையானெனவிரைசெல்புனல்கீழ்மேனுறநிலையும். (௩௭0)

வாழைக்கனிபலவின்கனிமாவின்கனிநெடிய
தாழைக்கனியகில்குங்குமநிறைசநதனமலர்தேன்
வேழத்துணிமுதலின்னனகொடுமேவலினுமையா
ளூழிற்புரிபூசைக்குரியவையுய்ப்பவருறழும். (௩௭௧)

இருபாலினுமணிதங்கியவிருகோடுபடைத்து
வெருவார்களும்வெருவித்துயர்மேவத்தவுரறி
மருவார்குழலுமையச்சுறவரலாலுயர்கம்பை
பெருமானெனிர்பண்டெய்தியபெருவேழமுநிகரும், (௩௭௨)

வேறு.

மலைபடுவளங்கள்வாரிமணிபலவரன்றிப்பொங்கி
யலையெறிந்திரைத்துவிம்மிவிசும்பெலாமடைத்துப்பம்பித்
தலைவருவெள்ளந்தன்னைத்தடவரைபயந்ததிங்கட்
கலைநிறைவதனத்தேவிகாண்டலும்வெருஉக்கொண்டாளால். (௧௭௩)

புடையுறுமிகுளைமாரும்பொள்ளெனவச்சம்பூப்பத்
தடைபடாதணுகுநீத்தந்தனையெதிர்நோக்கிநோக்கிக்
கடல்கிளர்ந்தனையவெள்ளங்காரணமின்றியென்னே
விடையவன்பூசைநாப்பண்மேவியவாறென்றெண்ணி, (௧௭௪)

என்னுடைத்திங்குதன்றாற்பூசனைகிடையூறுகத்
துன்னியதிதுவாமென்றுசொல்லருங்கவலைகூர்ந்து
சென்னியின்மதியம்வைத்தார்திருவடியிதயத்தெண்ணு
முன்னரப்பெருநீர்வெள்ளமுடுகிவந்தடுத்ததாக (௧௭௫)

துன்புறநோக்கிநெஞ்சந்துண்ணெனத்துளங்கியாவா
வும்பர்வான்றடவிச்செல்லுமொபபரும்பெருநீர்வெள்ள
மெம்பிரான்மிசையேநண்ணுமினிச்செய்வதென்னேயென்று
தம்பிரானார்பாலன்புதழைநதெழுமுள்ளத்தோடும். (௧௭௬)

அட்டொளிப்பசும்பொன்மேனிவடிவெலாமதிர்ப்புக்காட்டப்
பொட்டணிநுதலின்பாங்கர்க்குறுவெயர்ந்திவலைபூப்ப
மொட்டிளமுலையிற்றூங்குமுத்தொளிவடங்களாட
விட்டிடைவருந்திச்சாலவிறுமெனத்துவணுவாட. (௧௭௭)

கூந்தலினறவநதோய்ந்தகுருமலர்ச்சுரும்பரார்ப்ப
வேந்தகலல்குற்சூழ்ந்தவெரிமணிப்பருமமார்ப்பச்
சேந்தொளியிலிறுஞ்செம்பொற்கிண்கிணிசிலம்போடார்ப்பக்
காந்துபொற்கடகக்கையிற்நதிரவளைக்குலங்களார்ப்ப. (௧௭௮)

ஒருகொடியெழுந்துசெம்பொனுயர்வரைக்குவடுதன்னை
யிருகொழுந்திருபாற்போக்கித்தழீஇயெனவெழுநதுவல்லே
முருகலர்வேதியும்பர்த்தன்வலமுழநதாளுன்றிக்
கருமணிப்பாவையனாள்கணவனைத்தழுவிக்கொண்டாள். (௧௭௯)

மணிமுலைக்குவட்டிணுடுவளைக்கையானெருக்கிப்புல்லித்
தணிவருங்காதல்விம்மக்காதலிதழுவலோடுந்
திணியிருளறுக்குஞ்சோதித்திருவுருக்குழைந்துகாட்டி
யணிவளைத்தழும்பினோடுமுலைச்சுவடணிந்தாரையர். (௧௮௦)

வேறு.

வற்றிநின்றருந்தவமுயன்றுபனமறை
கற்றவருணர்வையுங்கடந்தபேரொளி
சிற்றிடைத்திருந்திழைத்தேவிவால்வளைப்
பொற்றழும்பொடுமுலைச்சுவடுபூண்டதே. (௧௮௧)

உருவருவனுமலையுண்மையினமைமற
திருளொளியன்றிநின்றிலகுபேரொளி
மருமலர்க்கருங்குழன்மங்கைவால்வளைப்
பொருதழும்பொடுமுலைச்சுவடுபூண்டதே. (௩௮௨)

பெருவிரலளவையினுளத்திற்பேணிநின்
றருவுயிர்முழுவதுமாட்டுமொளவொளி
யருள்பொழிகுறுநகையணங்குவால்வளைப்
புரிதழும்பொடுமுலைச்சுவடுபூண்டதே. (௩௮௩)

உயிர்ப்பினையொடுக்கியேவிழித்துறங்குவோ
ரயர்ச்சியிலகக்கணுணோக்குமாறொளி
குயிற்பெடைச்சினமொழியிறைவிகோல்வளைப்
புயத்தழும்பொடுமுலைச்சுவடுபூண்டதே. (௩௮௪)

என்றுமோரியல்பினிற்பகலிராவற
நின்றவரன்பினுக்கணியவொளொளி
மென்றளிர்ச்சீறடிவிமலைகைவளைக்
கொனறழும்பொடுமுலைச்சுவடுகொண்டதே. (௩௮௫)

மனத்திடைத்தனைநடிநினைந்தமாத்திரை
வினைப்பெரும்பிறவிவேரகழுமெய்யொளி
யனைத்துலகீனறருளமலைபல்வளை
யினைத்தழும்பொடுமுலைச்சுவடுமேற்றதே. (௩௮௬)

வடவரைகுழைத்ததோர்பவளமால்வரை
முடிவொடுமுதலிலாமாவினமூலத்து
மடநடையிளங்கொடிவளைக்கரத்தொடு
குடமுலைக்கமமயோருருவமெல்லிறதே. (௩௮௭)

வேறு.

அம்பொன்வால்வளைத்தழும்பொடுமுலைச்சுவடணிந்து
கம்பனைப்புடைவாழ்க்கையார்கருணைகூர்ந்தருளி
நம்புமோகையிற்பெருங்களிசிறந்தனுநலமார்ந
தும்பரிமபரிதுயிலொலாமுவகைநயிற்களித்த. (௩௮௮)

திகழும்வாணமுமாசறந்திகழ்ந்தொளிபடைத்த
தக்கயல்லியமெண்ணிலதழங்கினவிளங்கால்
புகருமெய்யெனப்புதுமணங்கொண்டெழுந்தசைந்த
விகடற்பெரும்புவியெலாமடங்கினதுகள்கள. (௩௮௯)

மந்திரத்தழல்வலஞ்சுழிந்தெழுந்தொளிதிகழ்ந்த
சுந்தரப்பொலமபூமழைநிரந்தரஞ்சொரிந்த
சந்தமாமறைதனித்தனிமகிழ்ந்தெழுந்தார்த்த
வெந்தவையமும்பலிடையின்றியோங்கினவால். (௩௯௦)

அந்தவேலையினிறைவிதனையிவளைத்தழும்பு
சந்தமென்முலைச்சுவடுதேரய்தனியுருப்பொலியச்
சுந்தரந்திகழ்சுடரொளியிலிங்கத்தினின்று
முந்துதோன்றினார்மூவருக்கறிவருமுதல்வர். (௪௦௦)

தோன்றிவாணிலாச்குறுநகைதோற்றிமீக்கடுக
வேன்றவெள்ளநீர்சறுவதீர்த்தப்பெயரிசையான்
மான்றுமேதகநிறுவினார்மாதினைத்தழீஇக்கொண்
டான்றகாதலாற்செய்யவாய்முத்தமுண்டளித்தார். (௪௦௧)

தோகைமஞ்ஞையஞ்சாயலாய்துளங்கியுள்வெருவே
லோகையுற்றனங்காண்டிநீயென்றுரைத்தருள
வாகையேற்றினார்தம்மணவாளநற்கோல
மேகாயகிநோககிளுளிணைவிழிகளிப்ப (௪௦௨)

தழீஇயகைகளைவிடுத்தெழுந்தவணியிற்றாழ்ந்து
குழீஇயவன்பினலஞ்சலிசென்னிமேற்குவித்தாள்
கழீஇயசெம்மணிவடிவினைக்காண்டொறுமுலவாக்
கெழீஇயகாதலாற்கிளர்ந்தெழுமுவகையிற்றிளைத்தாள். (௪௦௩)

வேறு.

நெடியவன்பிரமன்காணுநின்மலக்கொழுந்தேபோற்றி
யடியனேற்கபயநல்குமருட்பெருங்கடலேபோற்றி
படிமுதலாருருகிவேறுமாம்பரனேபோறறி
கடிமலர்த்தனிமாநீழற்கடவுளேபோற்றிபோற்றி. (௪௦௪)

பெறலரும்பெரும்பேறின்றுபெற்றனனடியேன்போற்றி
முறைமுறையுலகமெல்லாமுகிழ்த்தளித்தழிப்பாய்போற்றி
யறைகழல்கறங்கமன்றினிநதொழினடித்தாய்போற்றி
நிறைமலர்த்தனிமாநீழனித்தனேபோற்றிபோற்றி. (௪௦௫)

தரைபுனலிரவியிந்துதழலுயிர்வளிவானென்று
வுரைபெறுவடிவோரெட்டுமுடையனேபோற்றிபோற்றி
வரையெழும்பரிதிசெந்தீமதியமைவிழியாய்போற்றி
விரைமலர்த்தனிமாநீழல்வித்தகாபோற்றிபோற்றி. (௪௦௬)

கறைமணிமிடற்றாய்போற்றிகண்ணினுண்மணியேபோற்றி
மறவியின்வழிபட்டோர்க்கும்வழங்குபேரருளாய்போற்றி
நிறைபரஞ்சுடரேபோற்றிநெஞ்சகவிளக்கேபோற்றி
மறைமுதற்றனிமாநீழல்வள்ளலேபோற்றிபோற்றி. (௪௦௭)

முன்னுறுபொருள்கட்கெல்லாமுற்படுபழையாய்போற்றி
பின்னுறுபொருள்கட்கெல்லாம்பிற்படுபுதியாய்போற்றி
புன்மதியாளர்தேருப்பூரணமுதலேபோற்றி
சின்மயத்திருவேகமபசிவசிவபோற்றிபோற்றி. (௪௦௮)

வேறு. என்றுளரெக்குருகியெல்லையிலன்பினளாய்
மன்றன்மலர்த்தொடையல்வார்குழல்போற்றிசெயக்
கொன்றைமுடிச்சடையார்பேரருள்கூர்ந்தருளித்
துன்றியகேண்மையினுன்மற்றிதுசொல்லினரால். (ச0க)

பொங்கிமணங்கமழப்பூசுநறுங்களப
மங்கலமென்முலையாய்காளிமகிழ்ந்திதுகே
ளங்கனைநின்னொடுநாம்வேறலமாரமுதத்
திங்களும்வெண்ணிலவும்போலுமெனத்திகழ்வேம். (சக0)

இலளிதையாம்பெயரான்முன்னிவணெம்முருவிற்
பலர்தொழவந்துலகம்பங்கயனாதியெலா
மலர்தரநல்கினைபின்மற்றொருகூறபமதிற
சலமறுமெய்ஞ்ஞானசத்தியினீங்கியரோ. (சகக)

அந்தணனுக்கருளியாக்கியதுப்புதவிக்
கந்தமலர்க்கடவுள்கான்முளைதன்மகளாய்
நிந்தனைசெய்தவனைநீத்தவனாக்கிறைபால்
வந்துமறித்துமெமையன்பினமணந்தனையால். (சகஉ)

இத்தகுநீயுலகம்யாவையுமுய்யுமுறை
யத்தணிமந்நரமேல்யாமருளாறறினிலைுப்
பொய்த்திறனில்கழுவாயின்றுபுரிந்தனையாற்
கொத்தலர்மென்குழலாய்வேட்டதுகூறுகென. (சகா)

வன்றனிமால்விடையாய்மந்தரம்வண்கயிலை
வென்றவினைச்சிவலோகத்தினுமேதகவுற்
றென்றுநமக்கினிதாமிநகராதலினிங்
கொன்றுநர்யாவர்களுமுத்தியுறப்பணியாய். (சகச)

மறந்துமறம்பிறழாக்காஞ்சிவளம்பதியி
னறிந்துசெய்தீவினையுமன்றியெழுந்தனவும்
பிறிநதுதவப்பயனென்றெண்ணிலவாய்பெருகி
யறம்பொருளின்பமெலாமாகவுநீயருள்வாய். (சகரு)

இங்கிவைவேண்டுமெனக்கெம்பெருமானெனமீப்
பொங்குபெருங்கருணைப்பூரணிவேண்டுதலுஞ்
சங்கணிவெண்குழையார்தந்திருவுள்ளமகிழ்ந
தங்கலுழ்மேனியினாய்கேளிதுவென்றருள்வார். (சகசு)

வேறு.

செய்சிலைநீள்புருவத்தேந்திளமென்முலையாயெம்மிடையெம்மடியார்தம்மிடையெய்தலுறச்,செய்பிழையன்றிவருந்தீவினையேனையெலாஞ்சீர்வளர்காஞ்சியினிற்றேய்ந்துதவம்பெருகி, மெய்திகழ்நாற்பயனுமேவிநீதிஇயினமால்வேறுமுனக்கினியென்வேண்டுவதென்றிடலு, மொய்யொளிமேனியினுன்முன்னெழுதேத்தியிளமூரன்முகத்தலரப்பேசதலுற்றனளால். ச்ள

வேறு.

முதுகுடுமிப்பொலங்குவட்டுமந்தரத்தின்முன்னரொருகாலைக்காளியென்று
புதுமையுறவிளித்தனையாலதுகேட்டருண்டியிலேபோலிருந்தேனந்நா
ளிதுபொழுதுமிவ்வாறேவிளித்தருளிச்செய்தாய்மற்றித்தனைமாற்றி
விறுவணியுஞ்சடையானேகவுரநிறம்பெறவேண்டுமருளாயென்றாள்.

ஆண்டகையாரதுகேளாக்குறுமுரனமுறுத்தரும்பவருளிச்செய்வார்
மாண்டவலிதததித்தியராலலைப்புண்டிவ்வுலகம்வாழ்வானெண்ணி
யீண்டுமுனையவ்வாறுவிளிததேமிககருமகோசமின்னேமாற்றி
வேண்டியவாகவுரநிறம்பெறுதிநீவிண்டிடுமக்கோசந்தன்னில். (௪௧௯)

கூற்றமுழ்ழ்சும்பனையுநிசும்பனையுங்கொலைசெய்யச்சூழுகாருட்கத்
தோற்றுகிறறகவுசிகியாந்துறகைபிறித்தோனாறுமித்ராசாண்டியென்றார்
கோறமுருடியுமக்கணமேவரியரவிளமூதரிப்போர்க்காளமேனி
மாறறினுமணிக்கவுரவுருப்பெறறாய்காதலனைவணங்கிச்சொல்வாள்.

நாதனேநினனருளாலிபபொழுதேக்கவைகதாளவடிவமாறறிக்
காதல்புரிகவுரிமெனவயங்குறாற்றுமவிளிகாஞ்சிமாடே
மாதரொடுவானவர்தங்குழாமொருஙகபபரிவனாய்ச்ஞிமழ்ந்தவண்ண
மேதகையகடிமன்றலெமககிந்நாளுண்டாகவிழைகினறேனால். (௪௨௧)

உருத்திரர்கள்கணநாதர்பலவேறுகடவுளர்சூழுவணனூர்தி
மருததமலரணைப்புத்தேளிருதவித்தமாதவர்மறறுள்ளோர்யாருங்
கருத்துவகையுறத்தத்தம்பன்னிகளோடிங்கெம்மைமக்கண்ணிறகாணு
மருத்தியினுலொருங்கணைந்தாரண்ணலேயருளென்றுபினனுமவேண்டும்.

இவ்வதுவைகவுரிதிருக்கலியாணமென்றுலகினவழங்கவேண்டுஞ்
செவ்வியுறவைபாட்டைக்கன்னிவனயானிறுதச்சிறநதயாற்றுற்
பௌவநீரகல்வரைப்பிறவைப்பாற்றமணியல்குற்பணைத்தோண்மாத
ரெவ்வெவருமையாண்டிறகன்னியாகளசவுரியொனறுதலவேண்டும்.

ஏராருமையாண்டிற்கன்னியரைச்சைவநெறிமறையோர்க்கீயுஞ்
சீராளர்குலமுதலோர்சிவலோகந்தனிற்சிவணப்பெறவும்வேண்டுங்
காராருமணிமிடற்றுபெனததொழுதுவணங்குதலுங்காமற்காய்ந்த
பேராளர்திருவுள்ளஞ்செய்தருளிபபெருங்கருணைகூர்ந்துசொல்வார்.

திருத்தகுவண்காஞ்சிதனிலாணடுதொறும்பங்குனியுத்திரநாள்யார்க்கு
மருத்திபுரிதிருவிழாநிகழ்ந்திறறின்வதுவைநமக்குமைவதாகப் [யக்
பொருத்தமுறக்காண்டியெனதகமிழ்முனிக்கன்றருள்புரிந்தே மதனுற்பா
கருத்துடைகடும்பிலத்தயலேயாண்டுதொறுங்கடிநமக்குநிகழ்வதாக.

கல்யாணமண்டபத்திறுனக்குரிமைத்தொழினமறையோர்கன்னிசெய்ய
வெல்லாருமிதுகண்டுகளிப்புறுகவின்னுமுனைக்காண்டோறு
நல்வாய்மையறம்வளர்க்கும்வித்தாரெல்லிருநாழிதருகேமந்த
நெல்லாலேயிகபரத்துமுயிர்ப்பைங்கூழ்தழைகவெனவிறுவல்செய்தார்.

பாங்கெலாம்பனிமலர்ப்பந்தர்கட்பொதி
வாங்கியவெழில்பெறவகுத்துமாமணம்
வீங்கியநானநீர்தூவறநிறைத்தநில
மாங்கசவாதுகமெனவகம்பரப்பினார். (கஎ)

பந்தரின்புடையெலாம்பங்கயப்புன
லந்தரராட்டியரலங்கறபொய்கையுஞ்
சுந்தனங்கறபகந்தருக்கணமலகிய
சுந்தரப்பொழில்களுநதுவனறச்செய்தனர். (கஅ)

வேறு.

யவனர்தந்தொழில்திறமாகமற
கவுரிமன்றலெனக்கறங்கும்பணைச்
சிவமலிந்தசெழுங்குரலகேட்டது
முவகைகூர்ந்தனரொனைகர்மாக்களே. (கசு)

இயங்குமாநதாநெருக்கினிசிறுவீழ்
தயங்குகாழகளுநதாரும்புலையன
முயங்குமாதருகுதவுமொய்த்தொளி
வயங்குவீதியிறகுப்பைகண்மாற்றுவார். (உ0)

சந்தமலகுதமணியச்சுண்ணமுஞ்
சுந்தரககருப்பூரதூளகளுந்
கந்தநீரறகலாதுமறுகெலாம்
பந்துணூட்டிப்பணியபாகளெனப்வே. (உக)

வணடுளரமலாவராமணிப்பந்தரும்
விணடுழாவுபதாகையுமவிர்மணி
கொண்டதோரணக்கூட்டமுமயாணரிற்
பணடையுளளவபாரதியயறறுவார். (உஉ)

தாமநாற்றித்தமணிபவேதியிற்
பூமெனிாவிறைபூரணகும்பமுங்
காமர்பாலிகையுங்கதிாதீபமுர்
அமமுநதொருபபாரிடநதோறுமே. (உங)

நித்திலத்தினூற்றுபுவேதியிற்
சிதறித்துச்செழுமபொனின்மாளிகை
பித்தியோவியமபெடபப்புதுக்குவார்
பத்திமாடம்பழுதொழித்தாக்குவார். (உச)

இருகவுட்டுளைவீர்ங்கழிக்கடக்
களிறன்பண்ணுவர்கால்விசைத்தோடுவாம்
பரிகள்பண்ணுவாபார்குழியாழிவி
ரதம்பண்ணுவரெங்களுமெண்ணிலார். (உரு)

வாணிகோன்பணிபாலுகம்பப்பெயர்வயவன்
வாணிலாவலையாயிரம்வாயில்வைத்தூத
வாணறாவிரங்கரங்கொடுமணிமுழாமுழக்க
மாணமத்தளமாதவன்மத்தளமெழுப்ப. (எக)

காமநோக்கியைமணம்புணர்காதலன்வந்தான்
பூமுலைச்சுவடணிந்தருள்புண்ணியன்வந்தான்
யாமெலாமுய்யவந்தவன்வந்தனனென்றூத
தாமவித்திலச்சின்னமுங்காளமுந்தழங்க. (எஉ)

ஓவேய்ங்குழல்யாழிசையெங்கணுங்கிளர
வேதநாவொசையுமாகமமுழக்கமும்விம்ம
மாதர்நாடகநூன்முறைநடந்தையர்நடிப்பப்
போதவிண்ணவர்பூமழைவியனிலம்போர்ப்ப. (எங)

வீதிவாய்த்திருவிழாவணிதொழுதிடப்போந்த
பேதைபேரிளம்பெண்முடிவாயபல்பருவ
மாதர்யாவருநாணொடுவளைகலைதோற்றுக
காதல்வேள்சிலைபூங்கணைமாரியிற்குளிப்ப. (எச)

புதியசாமரைவெண்குடைபூங்கொடியிடைய
வெதிரிலொள்கைவிளக்கார்வலங்கொண்டெழுந்தருளி
மதுரமென்மொழிமங்கலவாழ்த்தொலிமலியக்
கதிர்மணிக்கோயிலினருட்காட்சிதந்தளிந்து. (எரு)

மீண்டுகோயிலிற்றன்னெழுந்தருளிமெல்லணைமேன்
மாண்டமெல்லியற்பணிவரையணங்கொடும்வைகி
யாண்டுநின்றமாலயன்முதலியாரையுநோக்கி
யீண்டுநீர்வரம்வேண்டுவகொண்மினென்றிசைத்தான். (எசு)

வேறு.

இருமுதுகுரவர்பாதமிமையவர்வணங்கியிந்தத்
திருமணங்காண்டல்பெற்றேமுய்ந்தனந்தினைநீர்வைப்பின்
மருவினர்வழுவைசெய்யுமிடரெதாறுமன்னியாங்காண்
டிருநலமுதவல்வேண்டுமிவ்விருவீருமென்றார். (எஎ)

இவ்வரமளித்தெங்காஞ்சியிருநகர்காவல்பூண்டு
செவ்வணிக்குறையிலென்றுசிவபிரான்பணித்தலோடு
மவ்வருள்சென்னிமேற்கொண்டகமகிழ்ந்திமையோரெல்லாந்
தெளிவைநீர்க்காஞ்சிமூதூர்க்காவல்கொண்டிருந்தாரங்கண். (எஅ)

அரந்தைதீர்கவுரிகூற்றிற்றோன்றியவணங்குமென்னை
வரைந்துகொண்டருண்மோவென்றுவணங்கிநின்றிரப்பவந்நாட்
கரந்தைவார்சடையோன்மன்றன்முடித்துநீகச்சிமூதூர்
புரந்திவணுறைதிநற்காவென்றருள்புரியப்பெற்று. (எகூ)

கன்னிகாப்பெறும்பேறெய்தக்கவுசிகிமடந்தைகாஞ்சிப்
பொன்னகர்காவல்பூண்டுபொங்கொளிக்கவுசிகேசன்
றன்னையங்கிருவிப்பூசனைமுந்தகேயாணபிறைநதி
யின்னீர்ந்துலகமுய்யவிருந்தனள்புகந்தகாடல். (௬௦)

சும்பனேநிசும்பனெனபோருலசெலாந்துளககநோக்கி
யம்புயக்கடவுள்போர்தங்கண்ணலுக்கியம்பிவேண்ட
வெம்பிரானருளாற்கன்னிவிந்தவெற்பெயதினைவகி
வெம்புயாளவுணர்தம்மைச்செகுத்துமீண்டினிதுவாழ்ந்தாள். (௬௧)

பகர்பெருவளஞ்சாலிநதமன்றலைப்பணபுகூர
வகனமர்நதேதகினோர்கள்கண்டவரறையக்கேட்டோர்
தகவுறநினைந்தோரொலலாநதையலார்மன்றல்வாய்ந்து
புகலரும்பரமானந்தமன்றலும்பொருநதிவாழ்வார். (௬௨)

திருமணப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உருஉ.

# விம்மிதப்படலம்.

சாமகண்டாதம்மாணையாலகிலமுநதழைப்பக்
காமநோககிமைலைனகறங்சரிசறவளர்க்கு
நாமநாவயற்கசெமாநகர்வயினளவில்
சேமவிம்மிதமுள்ளனசிலவெடுததிசைப்பாம். (௧)

தெள்ளொளிக்கதிர்ப்பன்மணித்திரளெலாஞ்செறியப்
பள்ளநீர்க்கடலாகரமாகியபரிசின்
வெள்ளவேணியாருளினலறபுகவிளைவென்
றுள்ளவைக்கெலாமுறைவிடமாயதுகாஞ்சி. (௨)

தீண்டில்யாவையுஞ்செய்யபொன்னாக்குவதிறலின்
மாண்டசித்தர்களெணணிலர்வழிபடடபடுவ
வேண்டிலெனனவுமளிபயனமெயத்தவமுடையோர்
காண்டகும்பலவிலிங்கமக்கடிநகருளவால. (௩)

ஒருதனிப்பொருளிருசிறனுகியவ்விரண்டு
மொருமையுற்றிடும்வியப்புமங்குள்ளதுவிரிக்கி
லொருபரம்பொருள்சிவனுடுசத்தியென்றிரண்டா
மொருமையுறறிடுமுமையவள்கமபனைத்தழுவி. (௪)

இருமையோர்பொருளெண்ணிலவாததுமெண்ணில்
பொருள்களொன்றெனததிகழ்தலுமுடைத்ததுபுகலி
னொருசிவச்சுடர்பற்பலவடிவுகொண்டுறையு
மருவுபன்மறையொருதனிமாவெனவயங்கும். (௫)

மற்றுமூன்றிடம்வேதிகைவயல்களுற்றவிசு
பொறறவைந்தருத்தடமறுபுட்களோம்பொதியில்
பற்றுமென்பொய்கையொன்பதுசிலைபொழில்பத்தாங்
கொற்றமனறுபத்தோடொருகூவலுங்குலவும். (௬)

ஒன்றுபல்பவத்தாதையர்க்காட்டுமொளிசே
ரொன்றுபல்பவத்தாயரைவேண்டுறிக்காட்டு
மொன்றுபல்பவக்கிளைஞரோடுரைபயில்விக்கு
மென்றுமூவகைத்தானமவ்விருநகருடைத்தால். (௭)

ஊங்கணைந்தவர்க்கமுதநீருதவிடுமொன்று
பாங்கினவேட்டனயாவையுமயர்கிடுமொன்று
மூங்கையேசவும்பேசினோளமூங்கைமையுறவு
மாங்களிப்பதொன்றுகமுதத்தெறறியுமுளவால். (௮)

மீளமீளசெல்லுநெறிநாறுமவ்வுலகேரோர்பழன
நாளின்விதைமன்றேபடவிலகுமோர்கழனி
தாளினேருழவினறியேதகும்பயிர்விளைக்குங்
கோளதொனறெனவயலகண்மூன்றுள்ளனகுறிக்கில்.

வேறு.

தன்பகுப்பின்முவரொடுமுனிவாவன்றோர் பழிச்சிடவாழ்சதுமுக னைக்காட்டுமொன்று, தன்பகுபபினமூவாதிருமுதலோர்சூழநற்றுமாலைச் சார்ந்தோர்க்குககாட்டுமொனறு, தனப நபபினமூவரொடுகணங்களபோ ற்றுநதமுறகாலருததிரனைககாட்டுமொனறு, தனபகுபபினமூாததிகளோ டென்றூழ்காட்டுநதவிசொனறுமடங்கலனைநானறுமனறும். (௧௦)

ஓவாமையமிழ்தொழுக்கும்பொலமபூச்சூதநதன்னிழலைப்பிறர்க்குத வாக்காஞ்சியொனறு, பூவாறுகாயாதுகனிவனவெரும்பூம்புளிபல்வகைப் போதுந்தருமதுகந, தாவாதசெமபொனமலாதறியெனறுஞ்சாறறரியதெ ய்வதமாத்தருககளெநதுந், தேவாதிதேவரினிசமருங்காஞ்சித்திருநகரினிரு ம்பூதுதிகழவோங்கும். (௧௧)

எல்லியிடைப்பங்கயமும்பகற்காலத்தினிருஙகுமுதச் செழும்போது மலர்ந்துதிகதேன, பில்குவதொன்றெருகாம்பின்முளரிமூனறுபிறங்குபு னற்றடமொன்றுகுளித்தோரொய்த, வலலைவானரத்துருவமளிப்பதொன் றுமூழ்கினோமாற்றார்க்குக்கொடியதீமை,நல்குவதொனறுடிதுறுநறா க்கின்பநலந்தருவதொன்றெனலாந்தடாகஙமநதே. (௧௨)

பெய்யாதகாலத்தினகவிக் கொண்மூவருவிக்கும் பெருமஞ்ஞைகும றதுலெல்லா, மெய்யாமைபின்றியுணர்கிள்ளையேனைக்கணிதநூலெலலா த்துமெடுத்துயாக்குமார்நை, வையாதுமுழுதுணர்ந்தகபோதம்பாடுநல் லிசைநூலனைவல்லநலஞ்சேர்பூவை, பொய்யாதவேட்டவெலாம்வழங் குகேயிப்புள்ளுமெனவறுபுறவைபொருந்துமாங்கண். (௧௩)

வானுடர்வார்த்தைசெவிப்புலனுமொன்றின்மதகரியை மூயலூக்கித் தூக்குமொன்றின், மேனுகருலகுவிழிப்புலனுமொன்றினரே யினர்க்குத் திசைமயக்கமெய்துமொனறிற, காணாநெய்யின்றிவிளக்கெரியுமொன்றிற்பாதலத்தோர்கழறுமொழிகேட்குமொன்றி, லானுதுதுந்துமிகண்மூழங்குமொன்றிலாகவேழ்பொருததானம்வயங்குமாலோ. (கச)

சூழ்குநர்க்குப்பொன்னுருவ மளிக்குமொன்று முழுமணியோர் தருமொ[illegible]வின்ஞோர்கோமான், வாழ்வளிக்குமொன்றுமனக் கினியவெல்லாந்தருமொன்றுவேண்டியதைவழங்குமொன்று, மீட்டுணைத்தாமெய்ஞ்ஞானமளிக்குமொன்றுவீடுதவுமொன்றுவினைப்பிணிநோயமுற்றும், பாழ்படுத்துமொனறென்ன மலங்கண்மாற்றுமபனிமலர்ப்பூம பொய்கையிருநான்குமேவும. (கரு)

திண்டினைத்தேவாக்குமொருகல்பாம்பின் கடிவிடந்தீர்த்திடுமொருகல்சித்தியெல்லா, மாண்டளிக்குமொருகலுயிருதவுமொருகல்வழக்கனைத்துநடுவாய்நின்றறுக்குமோர்கல், பூண்டபிணிமுழுதுமறப்புண்மாற்றுமோர்கன்மொய்யொளிமெய்தத்துணியுறப்பொருத்துமோர்க, லீண்டியதீவினையிரிக்குமோர்கன் ஞானநல்குமொருகலெனச் சிலைகளொன்பதோங்கும். (கசு)

ஒன்றினானுபெறக்கனகமாரிபொன்றி னிரசதமாமழை யொன்றின் முத்துமாரி, யொன்றிலொளிரருவிரதமாரியொன்றிலவயிரமழை யொன்றில்வயிடூரியமாரி, யொன்றிலொளிவிடும்புருடராகமாரி யொன்றிலடற் புள்ளேற்றுபபச்சைமாரி, யொன்றினிலிந்திரநீலமாரியொன்றிற பொழியுமலாப்பொழிலிவையோரொன்பதோங்கும். (கஎ)

சொல்லருமாபாவிபுறின்மூங்கையாகத் தஞ்சோரர்களை மருளுறுத்துங்கல்விதேற்றும், பல்வகையவடிவுறவுஞ்சாவாமேனனமபாலிக்குமபாதலஞ்சேர்பிலதனைக்காட்டும், வல்லவாகநதிசைமயக்கும் பொன்மாணிக்கமழைபெய்யுமபகலிரவுமாறுக்காட்டுஞ், செல்லுமதனைப்பிறர்காணுவியப்பஞ்செய்புமிவைமனறமொருபனைத்துக்குழுமாலோ. (கஅ)

தயிர்க்கூவல்பாறகூவனறுநெய்க்கூவனமதுக்கூவல் செழுங்கருப்புச்சாற்றுக்கூவன், மயக்கமறமுத்திநெறியுறசுமாகமற்றுலகினகத்திகாட்டுமும்மைக்கூவல, வியப்பெய்தநிழல்பிணிக்குங்கூவல்யாரின் வித்தின்றினாறுசெயும் விரிநீர்க்கூவ, லயர்ப்பின்றியங்கனைநதோமீளச்செய்யுமருங்கூவலொடுங்கூவல்பதினொன்றுமால். (க௯)

தன்னிடையெள்ளினைப்பெய்யின்மறறோர் ஞாங்கர்த்தயில மெழச்செய்வதொருசெக்குமுண்டு, மன்னுயிர்செய்வினைப்பயனைத் தாமேநல்குஞ்சிலையொன்றுசிலைப்பாவையொன்றுமன்னுங், கன்னிமதிற் காஞ்சிநகர்காவல்பேணுங்கருமேனிவயிரவமாக்கடவுள்பாத, நன்னடனச்சிலம்போசையிடையறுதுரானிலத்தோர்வியப்பெய்தக்கேட்குமோர்பால். (௨௦)

இன்னனவாமதிசயங்கண்மற்றுமுள்ளவெல்லையிலையவைமுழுது மறிவார்யாரோ, முன்னுகத்தினெல்லார்க்குங்காட்சிவெய்துமூண்டகொடுங் கலியுகத்திற்படிமைவாழ்க்கை, மன்னினோர்சிலர்க்கன்றிதந்தோன்றுமுத்தி மருவினர்க்குமேனுலகினைவைத்தவண்ண. மன்னமலிவயற்காஞ்சி வரைப் பின்வாழ்வாரகங்களிப்பக்கலைணுதலாரமைத்தவாரும். (௨௧)

இன்சுவைத்தமேன்மையெலாங் கண்டுங்கேட்டுமிந்நகரிற் கொடுந்தீ மையிழைப்பாராயி, னங்கவரோகயவரெனப்படுவரந்தோவறிவின்றி யறி யாதுஞ்செய்தபாவப், பங்கமெலாமொழிவெய்துமறிந்துசெய்யிற்பாற் றிதாமாதலின்றுற்பயனும்வேண்டி, யுங்குறைவோர்தத்தமக்குவிதித்தவாற் றொழுகியேகம்பரருட்குரியராவர். (௨௨)

விம்மிதப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨௫௪.

[illegible] ஒழுக்கப்படலம்.

மாதரையெல்லாம்வீழமடவனுயின்றதாயைக்
காதலனானச்சிக்கடியனுஞ்சிவன்வாழ்வைப்பிற்
பாதகம்புரியலகாஞ்சிபபதியிலடைச்சிறிதருசெய்ய
லோதியவிதியினூறேயொழுகுதன்முறைமைத்தாமால். (௧)

செந்துவர்படருமாழித்தினக்ரனெழுமுன்கன்ன
லைநனெவெழுந்துவெண்ணீறணிந்துயர்மாவின்மூலத்
தெந்தையைக்காமநோக்கிவிறைவியைநினைந்துபோற்றிப்
புந்தியினுறத்தான்செய்யும்பொருளறஞ்சிந்தைசெய்து. (௨)

கரகமுந்தண்டுமற்றுங்கரந்தழீஇக்காமரூர்க்கு
நிருதியிறபடர்ந்துகாதினீண்டமுப்புரிநூலேற்றித்
தரணியிறதிரணமிட்டுச்சந்திகள்பகலவடக்கு
மிரவுதென்பாலுநோக்கியிருந்திரண்டியக்கநீத்து. (௩)

குறியிடக்கரத்துப்பற்றிக்குறுகிநீர்முகநதிட்டோர்கால்
வெறிகமழ்புனலான்மண்ணாற்குறியினைவிழுமிதாக்கி
நிறையமண்முக்காலிட்டுக்குதங்கழீஇக்கழுவுநீள்கைக்
கிறுதியினீரைக்காலுமிருகைசேர்த்தேழுகாலும். (௪)

அடியெழுகாலும்பூசியறலினூற்சுத்திசெய்க
விடனுடையில்லோர்க்கீதாமிரட்டிமும்மடங்குநாற்றி
கடனறிபிரமசாரிகாட்டகத்துறைவோன்மற்றைக்
கெடலருந்துறவியின்னோர்கெழுதகவியற்றல்வேண்டும். (௫)

கோணர்வுறுநீர்வாய்ப்பெய்துகொப்புளித்திருகாற்றூய்மை
யணையநீர்குடித்துப்பின்னரணிவிரலுறுப்புதீண்ட
லிணைவிழைச்சுணவுமாற்றியக்கமுற்றிடுறுலெண்கா
லிணையிலீரொண்காலெணகாற்கொப்புளித்திடுதல்வேண்டும். (௬)

சலமலம்விடுக்கும்போதுநகைதயுலார்கலவிப்போதுங்
குலவெரிவளர்க்கும்போதும்வெண்பல்கோதினும்போது
முலவுநீர்குடையும்போதுமுணவினும்பேசகசெயயார்
மலவிதூரக்குமெங்கோனவகுதந்நூன முறையினிறபோர். (௭)

விதித்தகோதினறுதூயமென்புனல்படிந்துமேனி
கதிர்ப்பநீறணிந்துசந்திககடனபுரிந்துபோனபின்
முதிராச்சியினிலிஙகபூசைநாடொறுமுட்டாதாறறித
துதித்தனர்காலநதோறுமேகம்பநதொழுதுபோறறல். (௮)

இம்முறையொழுக்கினமாறுதிபஙகுறுமபிரமசாரி
செம்மணிவடிவிறகமபாதிருவருள கிடைததலவேண்டி
மம்மரில்குரவன்மாட்டமறையெலாமுறையிறுதன்
மும்மறையிரணடொனறுமுறறுறபயிறலவேணடும். (௯)

மடங்கலிற்கனனிதன்னின்மதிநிறைந்தாறுநாளோதத்
தொடங்குகமகரந்தநாட்டுசளாமுழுக்கமீணடு
மடங்கரும்வெண்கேழ்பபக்கததோதுசவஙசமாதி
யுடங்குதேய்பக்கத்தோதல்விலக்குநாளோதல்வேண்டா. (௧௦)

செல்வநாளுடையேநண்டநிடிழ்முநநூலுத்தரிய
மவ்வவர்தமககுவெவ்வேறருமறைவிதித்தவாறறு
லெவ்வமின்மறையோராதிமூவருமியலபிறகொளக
செவ்வழல்விதியிநோம்பியணிகவத்திருவெண்ணீறே. (௧௧)

முன்னிடைகடையினறப்பவதிச்சொன்மொழிந்துபார்ப்பார்
மன்னவரவணிகாபிசசையேறபதுமரபாமாயுண்
மூன்றுறமிளையர்தம்மின்மூத்தவர்ப்பணிகதாழ்ந்த
பின்னவர்தமக்குமூததோராவாழ்கதுனபேசல்வேண்டும். (௧௨)

ஓதியபிரமசாரியொழுக்கினில்வழாதுநின்று
மூதருமறைநூல்கற்றோர்முனிவர்தங்கடனிற்றீர்ந்து
வேதமாமூலத்தெங்கோனதிருவருண்மேவபபெற்றுப்
பேதமில்பெருவீட்டின்பப்பேறதினுக்குரியராவார். (௧௩)

வேறு.

பின்னவர்கள்பற்றிகந்துபத்தியினாற்றிருக்காஞ்சிப்பேரூர்வாழ்க்கை
மன்னுதல்வேட்டனராயினேகம்பன்றனக்கணித்தாயிருக்கைகைவகுப்
பன்னருஞ்சீர்க்கண்டிகைநீறுடல்வயங்கச்செய்பணிகள்பலவுமாறறித்
தன்னியமாந்தருமூலச்சட்டோரினியமுட்டாதுதொழுதுவாழ்வார். (௧௪)

வேறு. வற்றருமறையவ்வாறேநிவாழ்க்கையிற்
பற்றிலனுயிடிற்றுரவன்பாலென்று
முற்றினிதுறைகபற்றுடையனேயெனிற்
பெற்றியினருட்குருவிசைவுபெற்றரோ. (௧௫)

கடவுளர்பிதிரர்தங்கடன்கணீக்குவான்
வடுவறுமிலக்கணமாண்டகற்பினின்
மிடலுடைக்கிழத்தியைவிதியின்வேட்டுப்பி
னெடுமனைவாழ்க்கையினொழுகனீதியே. (௧௬)

கருதுமுப்பதிற்றிருகவளமென்பத
மிருபொழுதுண்டலுமெச்சமைவகை
புரிதலும்விதித்தநாண்மனைவிபூண்முலை
மருவலுமினையவுமிவர்க்குமாகுமே. (௧௭)

ஓதெரிசமிதையினேம்பலெய்வமா
மேதமில்பிதிருக்கீதல்வனதாம
பூதருக்கிடுபலிபூதவேச்சமே
வேதியர்க்கோதனமவிசனமானிடம். (௧௮)

பெருமறையோதுதல்பிரமவேச்சமிவ்
விருமகமைந்தனுடபிரமவேச்சஞ்ஞான
திருமிகச்சிறத்தலிற்றெய்வவேதிய
ரொருதலையாகவிவ்வோம்பல்வேண்டுமால். (௧௯)

வைகறையெழுந்துசெய்வினைகண்மாண்டகச்
செய்துமாநகர்ப்புறத்தொழுகுநதெய்வநீ
ராய்ந்தினர்குடைந்துவெண்டுகிலிரண்டுடுத
தைதுறுகண்டிகைசிறணிந்துபின. (௨௦)

வண்புதற்றருப்பைமேல்வைகிமும்முறை
யொண்புனல்வேதவகளுவப்பவாசமித்
தெண்பெறுவாய்துடைத்தியலபிற்றீண்டியே
பண்பயின்மறைகளைப்படித்தல்வேண்டுமால். (௨௧)

மாதவப்பேற்றினன்மறைசளண்ணலைச்
சூதமாய்நிழற்றலிற்றொல்லையேயம்ப
நாதனுக்கினியதிப்பிரமயஞ்மக
மேதகுமறங்களுண்மிக்கதாகுமால். (௨௨)

ஆற்றலுக்கியையவெவ்வளவைததாயினும்
போற்றருமறையினைப்போற்றிமேதகச்
சாற்றுகாயத்திரிசதவுருத்திர
மேற்றவைத்தெழுத்திவைவிதியினெண்ணியே. (௨௩)

உடையொழிந்திருநீராடுதலாடையொன்றுடுத்தூண்டவிரியக்க
நடைவழிச்சாம்பராணிலேதிர்நன்ஞறவிடுதலாங்குமிழத
லுடையிலாமாதைநோக்குதலிருகாலொளிநாதசெங்கனலிடைக் காய்ச்ச
லிடையுறுமத்திவேலையினருந்தலிவைகளும்விலக்கெனப்படுமால். (௪௨)

இந்திரதிருவில்விசும்பிடைநோக்கியேனையர்க்கறிவுறக்காட்ட
னிந்தையின்வாளாபேரிகல்விளைத்தல்கையிலைகருவித்துநீருற்றல்
செந்தழற்கடவுள்வான்பசுபார்ப்பார்தேவாகணராயிறுநாரவ
ரிந்துவின்முன்னரிச்சையாதிருத்தலின்னவுநிங்கெனப்படுமால் (௪௩)

கேழ்கிளரோமந்துணித்திடலுகிராறபல்லினைகிளைத்திடறனியே
பாழ்மனைத்துயிறல்கண்படையெழுபபன்முடிவட பால்ன்லைவத்துறங்க
லாழ்துரும்பொடித்தலோட்டினையடித்தறனிவழிச்செலலபிறரணிநத
காழகஞ்செருப்புமுதலியவணிதலினையவுங்கடிநிடப்படுமால். (௪௪)

அறக்கடைமிகுமூர்பெரும்பிணியுறுமூரமரிழிகுலத்தவர்பதித்
மறக்கொடுந்தொழிலோர்துவனறுமூர்வைகல்வரையிடை நெடுமபொழு
லிறப்பருமிசும்பினேறுதலிழிதலிளவெயிறகாய்தனிராடா [துறைத
துறப்பெருஞ்சிவலிங்கார்ச்சனைபுரியாதுண்டலுமவழுவெனப்படுமே.

பூத்தவள்பதிதனிழிஞலையழுதைப்புசுதனைத்திகிரிமேறபொறித்த
மூர்த்தியைததிண்டலகாண்டலும்விலகக்கேயிலங்குமுப்புண்டரமின்றி
மீத்திகழ்வடிவமுதலியபொறிதருவேதியர்முகத்தினைமறந்தும்
பார்த்துளோர்கம்பத்தலைவனைப்படர்ந்துகண்ணுறினன்றுவர்தூய்மை.

மறையுடனேனைநூல்களையெச்சநதனனுடன்மற்றைநல்வினையைக்
கறையறும்பார்ப்பாரோடுஞ்சூத்திரரைக்காஞ்சியிறெடும்பிறநகரைப்
பிறைமுடிககடவுளோடரியயனையொப்பெனப்பேசறகபேசிற்
குறைவருநிரயக்குழியினீழிருளிப்பதற்கையமொன்றிலையே. (௪௭)

இன்னனபிறவுமறைமுதனூல்களவிலக்கிடுமிவற்றினையொழிக
பன்னருமறையினபுறநூனூலனைத்துங்கெடுதியேபயக்குமாதலினு
லன்னவைவிடுத்துமறைநெறிவழுவாதொழுகினளலர்பொழிற்காஞ்சி
தன்னிலேகம்பநாயகனடியார்தமமொடுங்குலாவுதன்முறையே. (௪௮)

இருமுதுகுரவரிறந்திடுமதிநாளாண்டுதோறெய்துழியுகாதி
வருமனுவாதியுவாமுதறறினத்தின்வயங்குதென்புலத்தவர்க்குறித்துத்
திருமறையவர்க்குமுறையினூட்டிடுகவேனைமாத்தலங்களிற்செய்யும்
பெருநலமனைத்துங்காஞ்சியினூட்டும்பேற்றினைச்சிறிதுமொவ்வாவால்.

தென்புலத்தவர்தாமயன்றருமரீசிமுதலியோர்சிறுவரங்கவரு
ளின்புறுமரீசிவிராட்டுவைமுதலோரீன்றவர்சுராசுரர்முதலோர்க்
கன்புடைப்பிதிராகுவர்கவியோடங்கிராப்புலத்தியன்வசிட்ட
னென்பவர்க்குதித்தோர்மறையுவரரசர்வணிகர்வேளாளருக்கியைவர்.

முனிவரிற்பிறந்தார்தென்புலத்தவரம்முதல்வரிற்சுராசுரர்பிறந்தார்
புனிதவிண்ணவரிற்சராசரமனைத்தும்புகரறத்தோன்றினமுறையா
லினையசீர்ப்பிதிரர்தமைக்குறித்திசனினையடிக்கன்புடைமறையோர்
கனிபுளங்களிப்பவுருதியாறகாருசிகர்வயினூட்டுதலகடனே. (௫௧)

வேறு. இம்முறையில்லின்வைகியிடைப்படுங்காறகூறுயுள்
செம்மையிறகழிப்பியினனர்ச்செறிமயிர்நரைப்புக்காலு
மமமரினறிவுமிகைகார்மனைவியையமகனபால்வைத்து
வமமெனவுடன்கொண்டேறும்வனத்திடைச்சேறல்வேண்டும்.

விழைதருகாஞ்சிமூதூர்பபுறனிலவரைப்பினமேவித்
தழைபொதிசோலைவைகிவேவிலைமரமுலிருப்பண
மழையினிறபணியினிருளவதிந்துமாசவங்களாறறிக்
குழைவுறுமனத்தாறுஞ்சவிருப்பதிகொளவிறுகமாறா. (௫௩)

கண்டிகைநீறுதாங்கிக்கம்பனைக்காமநோக்கி
ஞெண்டொடிப்பிராட்டிதனனையுள்ளியஞ்செழுத்துமெண்ணி
யண்டர்கோன்பூசையாற்றியனனைம்வதிந்தபின்னா
மிணடறும்வனத்தின்வாழுகைமெய்தவமுதிர்ச்சியாலே. (௫௪)

அற்றமிலறிவிற்றூயராகியிவ்வுலகவாழ்வும்
பொற்றபூங்கமலவாழ்க்கைப்புண்ணியன்முதலோர்வாழ்வும்
பற்றறவெறுத்துவீட்டினவாவுறும்பான்மைபெற்றான்
முற்றுறத்துறவினெய்திமறைமுடிபுணர்தல்வேண்டும். (௫௫)

ஐந்தவித்துயாந்தவாசான்றனபுடையருணூல்கேட்டுச்
சிந்தனைசெய்துமாணத்தெளிந்துபினிட்டைமேவு
மிந்தவாறடைவினெய்துமியல்பினைத்தலைநின்றோறா
ரந்தணனிருதாளென்றுமகந்தழீஇயொழுகலாறே. (௫௬)

அடற்கொடும்பர்சமாற்றிப்பசுக்களையருள்வீட்டுய்ப்பப்
படைத்தளித்தழித்துநோக்கும்பரம்பொருள்சிவனேயென்ற
வுடற்றுநர்க்கரியவேதவுள்ளுறையாவதென்னத்
தொடக்கமீறெழுவாயுணவிலிங்கத்தாற்றுணிதல்கேள்வி (௫௭)

உவமையினேதுத்தன்றாற்கேட்டதையுள்ளங்கொள்ள
வவமறச்சிந்தைசெய்தல்சிந்தனையதனைப்பல்கால்
சிவீறுறப்பயிற்சிசெய்கைதெளிதலாம்விளங்கக்காண்ட
றவலறுநிட்டையென்றுசாற்றுவர்புலமைசான்றோர். (௫௮)

இத்திறம்பயின்றுவைகியிருவகைப்பற்றுநீத்த
வுத்தமத்துறவின்மேலோரூர்வயிற்பிச்சையேற்றுச்
சுத்தநீரலம்பிழுக்கட்சுடரினுக்கூட்டிப்பின்ன
ரத்தகுவிதியினோர்போதெண்பிடியருந்தல்வேண்டும், (௫௯)

அல்லவைமுழுதுநீக்கலான்றவர்கழித்ததூஉ
கல்லசும்பெற்றிக்கோடல்காழ்மாத்தடியின்மேவா
பல்லவுமொப்பக்காண்டலுமியலுய்ப்படர்தலேவெறுப்
புல்லியரிணக்கந்தீர்தல்பொறிவழிமனஞ்செல்லாமை. (௬௰)

அடித்துணைநிலத்திறைஞ்சியிறைஞ்சிடலறுவைதன்னில்
வடித்தநீர்பருகல்நெஞ்சிலுறுபெருமானங்கோடல்
படிற்றுரையின்றிக்கூறனன்மையேபயப்பப்பேச
லெடுத்துரைபிறவுமுத்தனிலக்கணமென்பமன்றோ. (௬௧)

உறையுளோடங்கிபேணல்கல்வியினுடலையோம்பல்
சிறையுடறபொருட்டுச்சீற்றஞ்செய்திடல்சாலப்பேசல்
புறனுரைபிகழ்ச்சிபிசைசைப்பொருட்டலஞாக்குட்சேறன்
மிறையுறுதந்நிம்மைசெய்வோர்தமைப்புமவெருளலாகா. (௬௨)

சிலவிடைகடவுள்பூசைகண்டிடாதிருவெண்ணீறு
களவினுமிகழாதோமபல்கதிரொளியுலோகமல்லாப்
புனிதபாசனத்திலீராற்றுய்மைகளபொருநக்கோடல்
வினையிகந்தவாக்காமெனப்பவளவியிநசமசம்போலும். (௬௩)

என்பினைநரம்பிறபினனிரத்தநீர்வழும்பிலுறைச்சிமெத்திப்
புன்புழுப்பொதிந்துசெந்நாப்புணனைசம்பொழுகிநாறிந்
துன்பநோயெவற்றிற்குமுறையுளாய்ப்புறந்தோனுடுத்திம்
வன்புலையுடம்பேயாயவருநிதிம்பிணிவேறின்மை. (௬௪)

பெரும்பிணியிதனைத்தீர்க்குமருந்துவன்பிறவியில்லாப்
பரம்பொருளானமுக்கட்பரமனேயெனநேர்ந்தி
முரண்பயில்விடையோன்றனபானமுகந்திணைச்சரணமெய்தி
விரும்பிவீடுறுதற்பாலர்பிறப்பினைவெருவபெறறார். (௬௫)

வேறு. மற்றைத்தெய்வங்களைவறறையும்விடுத்துமாசீழற்
கற்றைச்செஞ்சடைபிரான்சரண்சரணெனுங்கருத்தே
பற்றிச்சாவினும்வாழ்வினுங்களிப்பிகலபடாமை
யெறறைப்போதுமொருதொழுகலேறறதவர்க்கியல்பாம்.

பொறுமைகல்விமெய்தூய்மையமபெருதிதெறலடக்க
முதுநிராண்வெருளாமைகளாமையொண்புதி
மறுவில்சாதனஞ்சிவார்ச்சனையானம்வன்பறிறுன்
கறமுநல்லறம்புரிபவாகிலக்கணமாமால். (௬௭)

சொன்னநால்வகைநிலைகளிற்றுரிசறவொழுகிக்
கன்னிமாநிழற்கண்ணுதலகத்தொழும்பாற்றி
மன்னிநீடியகாஞ்சிமாநகர்வயின்வதிவோர்
துன்னுமும்மலத்துகளறுதவின்பவீடுறுவார் (௬௮)

ஒழுக்கப்படல முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௨௬௨௧.

# திருச் சிவபுண்ணியப்படலம்.

கச்சிநகரமர்ந்துறையுநியதியராயேகம்பக்கடவுள்பாதச்
செச்சைமலர்வழிபடுவோர்மேம்பாடெனனேயோதெரிக்கவல்லேன்
முச்சகமும்புகழ்ந்தேத்துமம்பன்னிரண்டுபெயர்படைந்தமூதூர்வைப்பிற்
பொச்சமறச்செய்த்தக்கசிவதருமத்திறனுமினிப்புகலக்கேண்மின். (௧)

எவ்வறமுந்திருக்காஞ்சிக்கடிநகரிற்புரிதற்பினேற்றமெய்யா
மவ்வறத்துட்சிவதன்மமதிகமவைசிவலிங்கப்பிரதிட்டையேனைச்
செவ்வியுடைத்திருமேனிதிருக்கோயிற்பணிபூசைச்சிறப்புமற்று
மௌவியர்தீர்மெய்யடியார்திருத்தொண்டுமுதற்பலவாமவற்றுண்மாதோ.

கயக்கமுறுமறக்கடையின்சிமிழ்ப்பறுத்துபயிரமாண்டக்கணத்தைநூறி
மயக்கமிகும்வினைப்பகையும்பெரும்பிறவிப்பழம்பகையுமறுகமாட்டி
வயக்கமுறுசிவபதத்தினுய்க்குமிலங்கயில்வாளாய்மாறுவாழ்வு
பயக்குறுதல்விழிக்கடவுணயகருமருட்சிவலிங்கப்பதிட்டையம்மா. (௩)

விரைமலரோன் மணிவண்ணன் முகிறார்தி முனிவர்சித்தர்விண்ணோ
ரியாரும், வரைகளினும் வனங்களினும் வார்நதிபுடைகளினுமணிநீர்வே
லைக், கரைகளினுமெங்கெங்குங் கண்ணுதலோன்சிவலிங்கப்பதிட்டையொ
ன்றே, யுரைவிளங்கச்செய்தமைந்தாரனாதிவேறெவன்செய்தாருணர்வான்
மிக்கீர். (௪)

மேதகையதவந்தீர்த்தங்கொடைவேள்விநூறுவுநிலைவிரதம்யாவு
மோதுசிவக்குறிநிறுவும்பயனகோடிபங்கூறதிலொன்றுக்கொவ்வா
வாதலினிசசிவலிங்கம்வேறிகையிலொருவிருசிலையானமைப்போர்யாரு
மேதமறுத்தவ்வுடம்பினவீடெய்தப்பெறுவரிதற்கையுறேனமின். (௫)

இம்முறையிற்றாபித்தசிவலிங்கமிறைஞ்சாநரும்விமானமேல்கொண்
டம்மலர்ப்பூங்குழற்பணைத்தோளரம்பையர்சாமரையிரட்டவமரர்போற்ற
வெம்மருங்குமிசைமுழங்கப்பெருந்தேவர்மூக்கறுப்பவினிதினேகிச்
செம்மலருட்சிவலோகத்தானந்தநுகர்ந்துறைவார்பிறவுங்கேண்மோ. (௬)

வேறு. அடலிற்கொதிக்குமுடையாழியண்ணன்முதலோரேத்தெடுப்பத்
தடவுச்சியப்பிடர்த்தலையிறகவிறுமணிபதூநதவிசும்பாக
கடவுட்பிராட்டியுடனிருப்பக்கதிர்வேற்காளைநள்ளிருப்ப
நடலைப்பிறவிமருந்தாகிவைகுநாதன்றிருவுருவும். (௭)

ஆடப்பார்க்கருளுமொருதாளுமம்பொற்கமலவிழிமூன்றும்
படப்பாம்பணிந்தபுயநான்குஞ்சூலப்படையுமெழிலவயங்க
விடப்பாலரிவையவலத்தயனைவெழுநாற்கோடியுருத்திரரை
நடப்பாற்றோற்றியையைந்துவடிவுமுடனாநலம்பிறக்கு. (௮)

புகன்றவிடப்பாற்பகுதியினைப்புர்ந்தித்தலத்திற்புந்தியினை
யகங்காரத்தினுறுதன்மாத்திரையிற்பொறியினவ்வவற்றைத்
தனுந்தான்குய்யமூர்த்திகளந்தலையிற்பார்சீரணல்வளிவான்
மிகுஞ்சீர்விழியினிடத்திரவிவெண்கேழ்மதியைப்படைத்தருளி. (௯)

அடியினடங்குங்கீழுலகமனைத்துமடியினுறத்தோற்றி
முடியினடங்குமேலுலகமுழுதுமுடிப்பாலளித்தருளிப்
படியில்கருணைப்பிழம்பாகிப்பரசுமடியார்கவிளக்காய்க்
கொடியமலநோயரட்டொதுக்குங்கோணைப்பெருமான்றிருவுருவும். (௧0)

ஓவாவின்பப்பெருங்கருணையொன்றும்வதனமோரிரண்டும்
பூவார்கமலப்பதமூன்றுமபோருகூர்ங்கோடொருநான்குங்
காவாவென்பார்மலநமன்றுமறுமாறளிக்குங்கரமேழுந்
தாவாவருளும்படைத்துடையவெச்சதரலவனறிருவுருவம். (௧௧)

இகலியெதிர்ந்தோர்குடர்குழம்பவிடியின்முழங்கியேற்றெதிர்ந்த
தொகுவெம்படைகண்முழுதுழக்குந்தோலாமனைகைச்சூர்த்தவிழிப்
புகரில்காட்சிவெள்ளிவரைநடுநாலயையபோர்விடைமேற
திகழுமலைமாதுடனுறையுந்தேவதேவனறிருவுருவம். (௧௨)

உடையாளொருபால்வீற்றிருக்குஞ்செவ்விநோக்கியுள்புக்கு
மிடையாநின்றபெருந்தேவர்விலகப்புடைக்கும்வேத்திரத்திண்
படையார்குடங்கைத்திருநந்திபரவன்றனக்குவரமுதலிப்
புடையார்கணங்கள்போற்றிசைப்படவைகும்புராணனறிருவுருவம். (௧௩)

சிலம்பினொலிகேட்டருகணையுஞ்செக்காலன்னப்பெடைமானப்
புலம்புமணிப்பூண்முலையுமையாண்மகிழ்ந்துநோக்கப்புடைநிற்ப
வலம்பிமறைகளோலமிடவுமபர்பணிச்சமுடிக்கங்கை
யலம்பவழகார்பெருந்திருக்கூத்தாடும்பெருமான்றிருவுருவம். (௧௪)

வடாதுமலையிற்புயநான்குமலர்க்கண்மூன்றுமுருத்திரமுந்
தடாயபடப்பாப்பணைநானுங்கபாலக்காமுந்தமலன்றிக்
கடாதுசிவந்தசுரிபங்கிகவின்றமுடியும்வெண்ணணிறமுங்
கெடாதவனப்பிற்பெருங்கோலங்கெழீஇயபெருமான்றிருவுருவம். (௧௫)

புரசைக்களிறட்டுரிபோர்த்தகோலப்பொலிவும்புகைவடிவு
மரசச்சீயவுரிகொண்டவுத்தரீயத்தனியழகும்
பிரசக்கமலமெனச்சிவந்தவிழிகண்மூன்றும்பிறங்குலகம்
பரசத்தகுவெண்டலைகண்டம்பரித்தகரமுங்கூரெயிறும். (௧௬)

மருவிற்பொலிந்தமலர்க்கிழவன்வகுத்தவண்டமனைத்தினையும்
பொரியிற்கொறித்துக்கொறிக்குமிரும்பூட்கைக்குரண்டப்பெயரானைச்
செருவிற்படுத்தவெள்ளிறகுதிங்கட்குழவிக்கதிர்க்கிளைத்திட்
டுருவுற்றெழுந்தாலெனமாடேயொளிரச்செருகுந்திருமுடியும். (௧௭)

திருமால்பணிலக்கோலைநிரைவயங்கும்புயமுந்தெரித்தருளிப்
பெருநீரளக்கர்வாய்மடுத்துமுங்காரபவேரொலிவிளைத்தும்
வெருவாவீரம்படைகைத்தம்பூதகணங்கண்மிடைந்தேத்த
வருளார்ந்தடங்குமிற்றுமண்டர்பெருமான்றிருவுருவும். (௧௮)

மன்றனாறுங்கடுக்கைமலர்மிலைத்தசடைப்பிரானுருமகிழ்ந்துமுன்னர் [பு
நின்றமலைக்குலக்கொடியைத்தமதொருபாலாட்சிகொண்டநிலைமையானே
பொன்றயங்குமணித்தேரினுடனேற்றிக்கொண்டு புரம்வலமாய்ச்செல்வா
ரன்றனையவளநகரினற்புதங்களனைத்துமவட்கருளலுற்றார். (௨௨௬)

மருவியகற்பங்கடொறுமணிமார்பன்விரிஞ்சன்முதல்வானோரெல்லா
மிருவியெமைப்பூசித்துநனிவரம்பெற்றோங்குமிடம்புவிமேற்காஞ்சி
யொருதலமேயாமிதனுட்பலதளிகளுளவவற்றுட்காரைக்காடார்
திருமலியிந்திரர்தொழுஞ்சத்தியவிரதத்தலமிதுநீங்குதலைச்சொல்லாய்.

வெண்ணிறவிண்கரியரியைவழிபட்டமலையஃதவ்விண்டுபோற்றும்
புண்ணியகோடீசமிதுவதுசேடன்மணிகளினாற்பூசையாற்றி
மண்ணிலந்தாங்கெறும்படைத்ததாகுநமதேவல்வழிமாயோன்சீறி
நண்ணியசீர்வேகவதிதடுத்ததிருநறுங்களபக்கொங்கைநல்லாய். (௨௨௮)

இலகுமணிப்பாப்பரசுநமைப்போற்றியிருநான்குபணிக்கும்வேந்தாய்க்
குலவுதலமிதுகாயாரோகணமற்றிதுபருத்திக்குன்றீதாகும்
வலிகெழுபோர்க்கயமுகனைச்செகுத்தவன்றன்மததகத்துமணியானம்மை
யுலவையொருபாற்படைத்தநின்புதல்வன்பூசித்ததுவாங்கண்டாய்.

கச்சபாலயமிதுகேத்திரபாலன்புழைக்கரத்துக்கடவுள்கன்னி
செச்சைநிறக்கதிர்யாமென்றைந்திறத்தேங்களுஞ் சிவனுஞ்சேக்கையீது
நச்சியிடுமோணகாந்தன்றளியீதெனமுழுதுநவின்றாங்குள்ள
வெச்சிறப்புமெடுத்தியம்பியேகம்பத்தளிக்கோயிலெய்திச்சொல்வார்.

இடைதெரியாதெந்தினத்துமெபபொழுதும் யாங்குடிகொண்டிருக்கு மேன்மை,யுடையதுதண்கடலாடைநிலவுலாப்பிற்றேரிலிதுவொன்றேயா ன,வடைவதனாற்கணங்குழையேகாம்பரமென்றொருபெயர்கொண்டகில மெல்லா, நெடுமொழிசென்றுறநின்றதிதன்சீர்மறறெவராலுநிகழ்த்தொ ணாதால். (௨௩௧)

கருணையொருகோழையாய்த்தவங்கவராய்ச்சந்தைகளுல்சாகையாகிப்
பரவுமறமுள்ளீடாய்ச்சிவமுயிராய்நாற்பயனும்பழமாஞ்சூத
மரமிதன்கீழெமைப்பூசைபுரிநமக்குக்கூட்டமிவண்மருவுகென்னாக்
கனையிறந்தகாதலொடும்பஞ்சதீர்த்தக்கரையிற்கொண்டுபுக்கார். (௨௩௨)

திருவளர்காமக்கோடிமணிப்பீடத்துயர்ச்சியெலாந்தெரித்துப்பின்னர்
மருவியவணருநதவஞ்செய்தறங்களெலாமாறுவளர்த்துக்காவென்
றருளிமறைநதருளுதலுமம்பிகையங்கிடமுலையுங்கண்ணுமாடப்
பெருவிருப்பினணித்தாகக்கூட்டுறவுண்டெனப்பிறங்குமகிழ்ச்சிபூத்தாள்.

அலையெறியுமணித்திருத்தமைந்தினுநீர்தோய்ந்துகரையணமிவேறு
கலைகொடுநீர்புலர்த்தியுடையுடுத்திமுறையுளிநீறுகமழச்சாத்திக்
குலவுமணியக்கவடமணிந்துபுரிதக்கவெலாங்குறையாதாற்றி
யுலகுபுகழஞ்செழுத்தும்விதிப்படியுச்சரித்துவடையாரடிகள்பேணி.

ஆயிடைநின்றுணர்தப்பரவெளியாம்பிலச்சூழலினையச்செல்வாள்
பாயமணிப்பெருவாய்தலேழினையுந்தாண்டுறந்துபையவுள்புக்
கேயுமருட்பீடத்தினியனேக்கிவிம்மிதமிக்கெய்தியந்த
மாயிரும்பீடத்தலையின்முக்கோணவடிவினைலாமுகிழவைகி. (௨௩௫)

நின்மலமாய்ப்பேரொளியாய் நிறைவாகியானந்த நிலையாயோர்க்குஞ், சின்மயத்தினிரண்டன்றியொன்றன்றிக்கலந்துசெயலற்றுத்தன்றன், றன்மையெலாமொழிந்துளம்போற் றமனியப்பொற்றிருவுருவஞ்சலியாவண்ண, நன்மையதாஞ்சிவயோகத்தினிதிருந்தாளுலகமெலாநடலைமாய.

பெருகுசிவயோகத்தினிடைதிளைத்தபின்பறங்கள்பிழையாதோம்பக்
கருதியறச்சாலைபலநிருமிதஞ்செய்தமைதருமணிககனகவெற்பி
னொருதலைவரளித்தருளுமுலவாதபாசனமொண்சராவந்தம்மாற்
பொருவரியவண்டமெலாங்களிதூங்கவறம்பலவும்போற்றுகின்றாள்.

வேறு.

தூங்கியதசைக்கழுத்துடையதூயவான்
வீங்குகண்டேதியைவிளித்துரிஞ்சுற
வோங்கியசிலையினுளொழுங்கச்செய்தறி
பாங்குறவிடங்தொறும்பயிலநாட்டினாள். (௨௩௮)

வளர்ந்துநீண்டருங்குயத்தரிந்துவந்திடு
மிளம்பசும்புல்லிணர்த்தருவினமூலத்திற்
றளர்ந்தஞர்பசியெலாந்தளரவானினை
முளர்ந்தழைத்துண்பெடல்வீக்கவுய்த்தனள். (௨௩௯)

இருவகைப்பற்றினையிகந்துவீடெனு
மொருபெரும்பற்றையேயுளத்திற்பற்றிமெய்த்
திருமலிபிச்சையிற்றிரிகின்றோர்க்குமுன்
னருமைசெய்தட்டவூணுற்றநல்கினாள். (௨௪0)

தந்தைதாய்முதலியகடும்புதாமினறி
வெந்துயரிடைப்படுமகவைமேதகு
புந்தியிற்களிவரப்புகன்றுதாயென
வெந்தநல்வரிசையுமியற்றியோம்பினாள். (௨௪௧)

மயரறும்பழமறைவகுப்புமாமலச்
செயிரறுமாகமத்திரளுமேவரு
மியலிசைநாடகத்தமிழும்யாவையு
மயர்வறப்பயிற்றினளிலைத்துமீந்தரோ. (௨௪௨)

ஈன்றவளிராதுயிரிறத்தலாலிருந்
தான்றபான்முலைசுரவாமையாற்பசி
சான்றழுகுழவிக்குத்தண்ணம்பானனி
கான்றெழுமுலையராற்களிக்களூட்டினாள். (௨௪௩)

அறுவகைச்சமயத்திலமைந்தவர்க்கெலாம
பெறலருந்தன்னுயர்பெருமைதேற்றுறீஇச்
செறிவுகொள்கருணையாற்றெய்வத்திஞ்சுவைக்
கறிமுதலுணவெலாங்கமழவீசினுள். (௨௪௪)

வருந்தியபீளுடைமாதர்தங்களை
யிருந்துயருழவன்பிணிக்கணத்தொளி
திருநதுமாண்மகன்வருமென்றுதேற்றிநன்
கருந்தலையளிபுரிநதருளிக்காத்தனள். (௨௪௫)

பண்ணியவேழமும்பரியுந்தேர்களுந்
திண்ணியமாடியநதானைச்செல்வரு
மண்ணினர்சூழ்தரவண்மும்வேந்தருக்
குண்ணுவமுதலியவூழினல்கினுள். (௨௪௬)

சூலைநோயாதியதொடக்கப்பட்டுளோர்க்
கேலுறுமருந்துகளியற்றியன்பிறுற
காலையுமாலையுங்கைத்துருவகை
சாலுமின்மொழிகளாற்சாற்றியூட்டினுள். (௨௪௭)

நறுஞ்சினைப்பொதுளியநாகுசோலைகள்
செறிந்திடவிடந்தொறுஞ்செழிப்பவைத்தவற்
றுறுஞ்சிறைமயில்கிளியாதியுண்ணிய
பெருஞ்சுவையுணத்திரள்பெரிதுமோக்கினுள். (௨௪௮)

தேத்துளிபிலிற்றிதழ்த்தெய்வத்தாமரை
பூத்துறுபொய்கையும்பொங்குவாவியுந்
தூத்தடமாதியுந்தொட்டுநல்லுண
வீத்தனள்கயன்முதலினங்களுண்ணவே. (௨௪௯)

வானரக்குலங்களுமானினீட்டமுங்
கானிவர்மதக்கவுட்களிற்றினீட்டமு
மேனையமான்கணமெவையுமின்புறத்
தேனுமிழ்கவளங்கடிரட்டிவீசினுள். (௨௫௦)

உள்ளகவிருள்கெடவொருவன்கூறிய
தெள்ளியதேமொழிப்புராணஞ்செஞ்செவி
யள்ளியுண்டனைவருமன்புமீக்கொளப்
பள்ளிகளெங்கணும்படிப்பித்தாளரோ. (௨௫௧)

ஞானமேமுதலியநான்கும்வேட்டவர்க்
கூனமில்குரவராலுயர்ந்ததீக்கைசெய்
தினவன்மலமறவஞ்செழுத்தையுந்
தேனெனவமிழ்தெனச்செவியிலேற்றினுள். (௨௫௨)

பனிமதியிலைச்சியபகவன்றாட்டுணை
கனிவுறுபத்தியிற்கலந்தநேயரு
முனிவரும்வைகியமுறையினெங்கணுந்
தனியுயர்மடம்பலசமைத்துப்பேணினாள். (உருங)
ஆனினெய்வாக்கியட்டெடுத்தவுண்டியுந்
தேனினிலடுஞ்சுவைக்கறியுந்தேனுவின்
பானனிபெய்தடும்பாளிதங்களு
மீனவர்க்குய்த்திடுஞ்சாலையீட்டினாள். (உருச)
வேண்டியபொருள்வியப்பெய்தவீன்றவர்க்
கீண்டுறவளித்தெழிற்கன்னிமார்களைக்
காண்டகுகலன்பலவணிநறுகாழிலா
மாண்டமைந்தருக்குநீர்வாக்கிநல்கினாள். (உருரு)
தாயினைக்கண்டெனச்சார்ந்துவாங்கிப்பின்
பேயினைக்கண்டெனவொழித்துப்பேறுநீஇ
யீயவொன்றில்லவர்கடனகளேற்றவர்
மாயிருங்களிகொளவழங்கிப்போக்கினாள். (உருசு)
சந்தனக்களபமுந்தயங்குபூண்களுங்
கந்தமென்றுடைகளுங்கலையுமறறவு
மிந்திரன்றிருவெனவியறறிவேசையர்த்
தந்தனள்காமுகர்தளர்வுதீரவே. (உருஎ)
ஐந்தணையமளியும்பொன்மாளிகைச்
சுந்தரவிடங்களுஞ்சுடர்நதீபமுங்
கொந்தொளிமணிக்கடக்குலவுநீரொடு
மெந்திடத்திருந்துயிற்றியற்றினாளரோ. (உருஅ)
புதுக்கலத்தொளிகடற்பூக்குமுன்னெடுத்
ததற்படுவாசங்களட்டுநீர்களு
மதுபபழத்தேறலும்வயங்கும்பல்விரை
விதத்தவுமேவுநீர்ப்பநதரீட்டினாள். (உருகூ)
பிணங்கியவுயிர்களைப்பிடித்திழுத்துத்த
னிணங்கருள்கொளுத்துவதேய்பபவின்சுவை
மணங்கமழுணவினைமறுத்திடுந்தொறுங்
கணங்கெழுசிறார்க்கிதங்கழறியூட்டினாள். (உசுo)
வேறு.
கரக்குமாந்தர்முனுளமெலாங்கலங்கியுமருளிப்
புரக்குமாந்தர்முன்முகமெல்லாம்பூவெனமலர்ந்தும்
பரக்கும்வெள்ளொளிபடச்செழும்பற்களைத்திறந்துந்
திரக்குமாந்தருக்கெடுத்தனள்சாலைகளனந்தம். (உசுக)

திருத்தயாத்திரைசெல்வர்தெய்வயாத்திரையி
னருத்தியோடுசெல்பவர்மற்றையேனவானடைவார்
கருத்துக்கேற்புறக்கமழ்சுவையுணவுகளூட்டும்
விருத்துமாமணிச்சாலைகளிடந்தொறும்விளைத்தாள். (௨௬௨)

பொரியுநோலையும்பிண்டியும்புழுக்கலும்வாசம்
விரியும்பண்ணியவகைகளுமேம்படுபிறவு
முரியதாயினுங்கருணைவைத்துறுசிறார்மகளிர்
பெரியமாந்தருநுகர்வுறப்பெட்டுயிர்களித்தாள். (௨௬௩)

பூவர்சோலையும்பொய்கையுமெழுதியதுகிலும்
பாவுநுண்ணிழைப்பட்டுடைவிதங்களும்பலவாங
கோவைவாய்மணிமேகலையாதியுங்குவவி
மேவினோர்க்கெலாமேவியாங்குதவினண்மிகவே. (௨௬௪)

சிறக்கவீட்டினர்கெடுதலாற்செழும்பொருள்கெடலாற்
பிறக்கும்வேறிடர்பகையினாற்பிறங்குதலின்றி
யிறக்குமாலயபிறரறமெண்ணிலாதனவுந்
துறக்கம்வாழ்நரும்வியப்புறத்தொடங்கினள்வளர்த்தாள்.

கடும்பிலாப்பிணம்பொருளறும்பிணங்கடும்பாக
னுடங்குருப்பிணமின்னவைரம்மையொளளொரீவா
யிடங்கொளிமத்தினிட்டியற்றருங்கடன்யாவு
மடங்கவாற்றுமாறருளினளலகிலாதவளை. (௨௬௬)

அழுங்கலாக்குவான்பறதியபறவையாதிகளை
யொழுங்குறூன்முறைதெரித்துமின்மொழிபலவுரைத்தும்
வழங்குமாழையாணிரப்பியுந்தன்னுழைவாங்கிப்
பழங்கணித்துயிர்காத்தனள்பயந்தமைந்தர்கள்போல. (௨௬௭)

நவைகொடுசினைக்காடலுநயந்தனளண்மி
யிவைகொடுக்கியரொலித்துவந்நீருமென்றேலா
வுவருமாப்பியுமுறுத்தெரியேறறிநன்கொலிக்குந்
தவறிலாதவேகாவியரிடம்பலசமைத்தாள். (௨௬௮)

நீளுகின்றமென்மயிரினைக்காண்டலுநெடிது
மூளுமன்பினுன்முன்னுறப்போநதின்னதிதியு
நாளுநல்லனவெனவழைத்துவப்பநல்வினைசெய்
கோளிலாப்பெருமஞ்சிகர்குலம்பலதுறுத்தாள். (௨௬௯)

இனையமுப்பதிற்றிரண்டறமோங்கலும்விசும்பி
னனைவருங்களிதூங்கினரலைகடல்வளைப்பிற்
றனையயாவருமுய்ந்தனர்சூழறக்கடைகள்
புனையுநாமமுமிறந்தனபுகழ்பெறூர்பெயர்போல். (௨௭0)

வேறு.

துப்புநிகர்செங்கனிவாய்த்தூமுறுவறபசும்பணைதடதோள்
வைப்பெருவேலிகந்தவிழிமங்கலைக்குமணிகடைந்த
செப்புமுலைச்சண்டிகைக்குஞ்செய்தவறந்திறம்பாமே
யெப்பொழுதுங்காமினெனவியம்பியருள்பணித்தருளி. (உ௮௦)

உடங்கணைந்தமலர்த்தவிசின்ஞெள்ளிழையாரிருவரையு
மடங்கவற்றும்பசுவில்வமலர்ப்பலாசிடந்தெய்திப்
படங்கிளர்பாப்பணியாரைப்படர்ந்துதவஞ்செய்மினெனத்
கடங்கணருள்கொழித்தொழுகச்சாற்றிவிடுத்தருளியபின். (உ௮௧)

வேறு.

விற்கான்மதிபோனுதன்மெல்லியலாள்
சொற்காமுறுமத்தருகுழலிடை
நற்காமர்நறுங்கொடிமாலதியைப்
பொறகாஞ்சியெனப்பொலியக்கருச. (உ௮௨)

வண்டார்தருமாலதிமென்கொடியும்
விண்டாழ்கயிலைக்கிரிவிட்டெவருங்
கொண்டாடிலர்தயலிற்றூறுகி
யுண்டாயதொளிர்ந்தெழுகாஞ்சியெண. (உ௮௩)

நளிபட்டகருங்கடனூறிவருந்
தெளிபட்டசெழுஞ்சுடருஞ்சிதையத்
தளிர்பட்டொளிாசாகைநொறுங்கவினி
யொளிபட்டெழுதண்கதிருழ்த்ததுவே. (உ௮௪)

சேண்டாழ்பிலம்வைகியதேத்துமணிந்
தூண்டாதசுடர்க்கதிரைாநதலையி
னேண்டாங்கரவின்மணியின்கதிரோ
டாண்டார்ந்துநிரம்பியதக்கதிரோ. (உ௮௫)

அரவின்மணிதூண்டலடாதசுடர்
குரவங்கமழ்காஞ்சிகொழிக்குமொளி
விரவுற்றிடுமெத்தலைவிலலொளிமூன்
றுரவுறறபிரான்முகமொத்ததுவே. (உ௮௬)

மாணுற்றுவயங்கியகாஞ்சியிழு
தூணுற்றிடலின்றியொளிர்நதசுடர்
காணுற்றிடவந்துகதிர்ப்பரிதி
பூணுற்றவணின்றதுபோன்றதரோ. (உ௮௭)

பொன்னின்மயமாய்ப்புரைதீர்ந்தகவ
மின்னும்மணிமென்றளிர்பாசடைபூ
துன்னுங்கனிகாய்துறுதொத்தினமா
மன்னிக்கவின்மல்கியதம்மரமே. (உ௮௮)

மணிபொன்னலர்கற்பமரத்தொகையாற்
றணிவின்றுயர்பொன்னகர்தன்னிறுமாய
பணிமல்கியகாஞ்சியினானுமருட்
டணிமல்கியகாஞ்சிசிதைத்ததுவே. (௨௮௯)

சினைதோறவிர்செம்மணியம்மரமங்
கினிதுற்றுறைபாம்பொடிருப்பதினைந்
தினவொண்மணியாயிரமெய்துபணத்
தனிவாளரவெய்தியதன்மைபொரும். (௨௯௦)

மலருற்றிழிதாரைமதுப்புனலா
லலரிற்பொலிகாஞ்சியளித்தருவளர்
தலைமைக்கொடிநீங்கியதன்றுயர்முன்
னிலவித்தெரிவிப்பதுபோன்றதுவே. (௨௯௧)

நற்பாலனநல்லவர்பாலணுகிற
பொறபூமணமும்பெறல்போலுமெனுஞ்
சொற்பாரினிறீஇயதுதாயவிதன
விறபாய்மணமே குபொனமலரோ. (௨௯௨)

முன்னர்க்கருமெய்யுருமுற்றொழிபு
மனனைக்குறிகாத்தடுகைகலின்முன
மன்னிப்பொலிபாசுருவங்கழுவிப
பொனனிறபொலிபூவுடைநனமரமே. (௨௯௩)

கயிலைக்கிரியேகருமப்புவியா
வியனறபதமுதலிடங்கலைகள
பயில்பொற்பமர்காஞ்சிநெடும்பதியா
வுயர்முத்தரையொத்ததுபூமரமே. (௨௯௪)

உலகேதுநிறுங்கலையோவியரு
ணிலையேநிலையாகநிலைத்தவாக
ளலையாராதுபோலொளியாங்குறிறுஞ்
சலியாதடிநினறெளிதண்ணிழலே. (௨௯௫)

சீரார்தவமாற்றுறுசெவ்வியினில
வாரார்முலைவல்லிதன்மீதுவெயி
லாராதுறுபொறகுடையானதரோ
பேராதுபிறங்கியவந்நிழலே. (௨௯௬)

கிளிபூவைகளகேழ்கிளர்மஞ்ஞைகுயி
லளிதேனினமாதிறெழுமிர்நதுவலவக
களிமாசனநோக்கியசண்கநநட
னமோடிநெருங்கியுலாவியவே.

மணிவிளக்குநிறைகுடமுமங்கலமுமெதிர்கொணர்வா
ரணிவிளக்கிடங்கடோறுமமர்ந்தருளியெழுகென்பார்
பிணிவிளிக்குமலர்ப்பாதம்பெயராதுதொழுதணைவார்
தணிவளிக்கினுயர்வளிக்குந்தையலருளென்னென்பார். (௩௦௭)

எத்தவமுன்னியற்றினமிங்கிவட்காண்டற்கெனவியப்பா
ரத்தகையதவமிலதேலரியயனுந்தெரியாத
வுத்தமிநற்றிருக்காட்சியுதவுமோவெனநயப்பார்
மைத்தபொழிற்காஞ்சிநகர்வாழ்ந்தபயனிதுவென்பார். (௩௦௮)

கொம்மைமுலையிவள்வளர்க்குங்கோதிறைபெரும்பேறு
மிம்மையொடுமறுமைநலமெவையுநுகர்ந்தனமென்பார்
செம்மையெனத்தறக்கவளருஞ்சோரநஞ்ஞாகர்பணைவரு
மம்மவிதறகிவர்வரொனிலதனலமெனனோவென்பார். (௩௦௯)

மாகதமென்றனிபொன்னவயங்குமுருவிவட்சென்பார்
பரவுமொளிக்கவுரிநிறம்படைத்ததுருவதென்னென்பார்
ராவணிவார்திருவருளாறறணர்ந்திடுமவ்வுருககண்டு
மொருபுடையிலவருநீலவுருக்ககனவியெனமொழிவார். (௩௧௦)

ஒருருவிலங்கணருடனபயிலுமுதயிதா
னிருருவாததணந்தாசவம்பியறறுகிறமெனனென்பார்
பாருலகிறருனடநதபடிநடநதுநாமெலலாந்
சீருருவக்கதியடையுநதிருநகருளையுநறமெனபார். (௩௧௧)

இருள்பரவியெவ்வுலகுமிடருழப்பத்ததனிக்கணவர்
மருமலர்க்கண்புதைத்தருளுமிணிச்சரிதீதோவென்பார்
தெருமருமவ்வுலகமெலாமகிழ்விக்குந்திறம்போலும்
பெருகுபாமானந்தப்பேரறமாற்றுவதென்பார். (௩௧௨)

சுந்தரவெங்கதிரவனுஞ்சோமனுமற்றேனையவு
தந்தமியல்பினினிருப்பச்சார்ந்ததெவனிருளெனபா
ரந்தவொளிதனக்குமுயிரெனப்படுவதிவள்புதைத்த
வந்தணனுர்முகத்தொளிருமலர்விழியிறெனிளியென்பார். (௩௧௩)

இவள்புதைப்பவேதுவாயிருந்தவெனமாலதியைக்
கவிழ்சினையதளிர்மாவைக்கைதொழுவார்கண்புதைத்த
பவளமலர்க்கரங்களையும்பணிகிற்பார்பதகளைத
தவறுபுரிமகதனையுஞ்சரண்பணிவார்பயனபெறுவார். (௩௧௪)

அறம்வளர்க்குமணிச்சாலையகப்படுத்திக்கொளநினைந்த
மறமுயிர்வேன்மகதனுக்கும்வரம்வழங்கினுளென்பார்
நிறையருளினுலகனைத்துநெடிதோமபியினிதளிக்கு
மிறைவிபொருளாயிடின்மற்றெவர்பொறுப்பாரிறைமையென்பார். (௩௧௫)

அலகிறந்தவிம்மிதத்தோடொன்றாகவம்பிகையா
னிலகுமணிக்காஞ்சியுமற்புதமாயிற்றிவணென்பார்
பலபலவற்புதமுமுனம்படைத்தவளேயிவளின்று
நிலவுமதிசயமென்னாகிசழ்ந்ததுமோவெனவியப்பார். (௩௧௬)

சடைமுடியும்வெண்ணீறாதாழ்வடமுமரவுரியு
முடையவளாய்த்தவம்புரிந்தமுருகிழற்றவிலையென்பார்
கடையபினறமடமுடையீர்சரிசுபடுமாயையினும்
வடிவதுவோவானந்தவடிவன்றோவிதுவென்பார். (௩௧௭)

இவ்வாறுபலர்போற்றவெழுந்தருளிவருநெறிக்கட்
செவ்வாய்மைப்பாங்குபுரிந்திறத்தொழுகுமங்கலையா
மைவார்மென்குழன்மடநதைமனமகிழ்விறலூழ்நதெழுந்து
துவ்வாதவமிழ்தனையாட்கெதிர்காட்டிச்சொலலுவாள். (௩௧௮)

அடியனேன்குளிாதடமொன்றகழந்தொருமண்டபமெடுத்தே
னிடுகிடைமெய்த்தவக்கொழுந்தேயிவையவையாமிததகைய
தடவரைப்புநீவதிய ... தெனச்சாற்றுதலு
மடநடையாட்கவ்வாறுவரமருளியவணெயதி. (௩௧௯)

மலர்ச்சொழிக்கும் புனற்றடமுமணிகொழிகுமண்டபமு
மலர்கருணைவிழிசாத்தியாங்கொழிந்துமென்மெலப்போய்ச்
சுலவுதிரைக்கம்பைநதித்துறைமருங்குசெனறெய்திப
பலர்புகழுமங்கலைக்குந்சண்டிகைக்கும்பணித்தருள்வாள். (௩௨0)

வேறு.

பிறைநிகர்வாணுதறபேதைமீரிவண்
மறைநிரணபுருகொளுமாவிதாகுமா
லிறையவனென்றுமிங்கினிதுவைகலா
னிறைவுடையிதன்றிறநிகழ்த்தொணுதரோ. (௩௨௧)

மாவடிவாகியபொழுதுமாமறை
மூவர்கண்முதல்வனைபபழிச்சமூன்றெனப
பூவலர்சினைதொறும்புக்கவண்டினம்
பாவலரிசைக்குரல்பயிறறலகேண்மினோ. (௩௨௨)

யான்றழுவியபொருண்மெய்யினீர்ங்குழன்
மான்றழுவியபரனென்றுமாஙதரைத
தான்றெளிவுறப்பதுதகையவவவிறை
போன்றுபாசடைதளிர்பொதுளல்காண்மினோ. (௩௨௩)

என்னையாளுடையவனெனதுமாணிழன்
மன்னியவைமுகவள்ளல்காணெனுப்
பொன்னவிருலகினைப்புகலப்போதல்போற்
பன்னெடுங்கிளைநிமிர்பரிசுகாண்மினோ. (௩௨௪)

பிரிந்தமைக்கிரங்கியென்பெரியபூண்முலை
விரைந்தரன்புணரவோர்முயறசிவேட்டென
வரந்தைதீர்த்தருளுமவ்வண்ணன்மெடயெலாம்
புரிந்துமென்மலர்க்கணைபொழிதல்காண்மிரோ. (௩௨௫)

இனியனவிவைவருகர்கென்றுதன்முதற்
புனிதனுக்களித்திடத்தாழ்ந்தபொறபெனக்
கனிநறுங்காய்ஞெமிர்கனத்தினற்கொழுஞ்
சினைநனிகுரங்கியசெயகைகாண்மிரோ. (௩௨௬)

வேறு.

இன்னவகைமறைமாவின்வளம்பலவுமெடுத்தியம்பிக்
கன்னிமாவடிமுனைத்தகண்ணுதலாரபெருமையுமப
றன்னவர்கட்கறிவுறுத்தியண்ணலாாசிவபூசை
யிந்நிலையில்யானபுரியவெப்பொருளுங்கொணர்கென்றான். (௩௨௭)

உய்ந்தனமுய்ந்தனம்யாமென்றெரிகமலபபதம்வணங்கிச்
சந்தநறுங்களபமுலைநகையலாரிருவர்களுங்
கந்தமலிகற்பகமுங்ககிாமணியுமிருநிதியும
வந்துவளமுழுதளிபபவகுத்தவினைத்தலைநின்றார். (௩௨௮)

பீடுமலிசிவபூசைபோனபிறசெயத்தொடங்கி
யாடுதற்குஞ்சிவன்முடிபினாடுந்தறதுமிருநீர்தராந
தேடருஞ்சீாககமபதின்றென்பாலும்வடபாலுங்
கோடுயர்வெறபுயிர்தெடுத்தகொம்பனையாளிருபிநதாள். (௩௨௯)

கீர்த்திமிகுமவ்விரண்டுங்கிளக்குமுமாபர்தினாற்
கீர்த்திமதியெனநாமங்கிளர்தரச்செயதுலகத்துங
கீர்த்திபெறுதீர்த்தமெலாங்கெழுமிததாள்காயபதற்குக்
கீர்த்திமதியெனுமணங்கைநிதிஇயினாள்கேடில்லாள். (௩௩௦)

தென்பாலிற்கூவனறுந்நீர்த்தவுமாபதத்தினையின்
மின்பாய்ந்துதுறைவதெனவிதிபபடிநீராதோய்ந்தருளிப்
பொன்பாவுதிருமேனிபொலிதகவெள்ளணியணிந்து
கொன்பாவுவெண்ணீற்றுக்குருக்கவயத்திடைப்புக்காள். (௩௩௧)

வெள்ளனத்துமிசைக்கிடந்தவெள்வரிகளொளமெய்யி
னுள்ளொளியவுத்தூளதொழுங்குறுபுண்டரநீட்டிக்
கள்ளவினைக்கட்டறுக்குங்கடவுண்மணித்தொடைபூண்டு
தெள்ளுமுறையாலங்கட்செய்வனவெல்லாஞ்செய்தாள். (௩௩௨)

கலவமயினடந்ததெனக்கமழ்புனலின்கரைநின்றுங்
குலவியுயர்தனிமாவைக்குறுகுவாள்சென்றெய்தி
யலகில்புகழரசன்னமைங்கரனைத்தென்மேல்பாற்
பலவிடர்க்கும்பலவிடைப்பண்ணுகவென்றிருவினாள். (௩௩௩)

ஆனாதபேரறிவாயகம்பறமுங்கறைநதெல்லாந்
தானாகிநின்றருளுநதனிமுதலையேகம்பத்
தேனேரும்வழிபடுமாறெளிவந்ததெள்ளமிழ்தை
யூனாதிகசிந்துருகவுயர்பூசைபுரிகுவாள். (௩௩௪)

சுருக்கமிலாகமவிதியாலைவகைச்சுத்தியுமமைந்து
மருக்கிளர்பூங்குழன்மடவார்மாமறுதுபணிகேட்ப
வொருக்குமனத்தினளாகியுயர்கிரதிமதிதீர்த்தந்
திருக்கிளரபாறயிரனைத்துஞ்சிவமனுவாலாட்டினள். (௩௩௫)

நுழையிழைநறுகலிங்கத்தாற்றிருமேனிநொய்தொற்றி
விழைதருகோலணமணிநாண்மேதகுபட்டுடையணிந்து
குழைவிரைச்சந்தனச்சேறுகொட்டிமணந்துகளட்டி
யிழைவருக்கநதிருமேனியெங்குமெடுத்தலங்கரித்தாள். (௩௩௬)

சுவையாறும்பழுநதொழுகுந்தூயநால்வகையுண்டி
நவைதீர்ந்தபொறகலத்தினயந்தமுதுசெயவித்தாங்
கவிர்தூபதீபமுதறபணிமாறியன்பாறறி
னிவர்தருசைவாகமநூலவிதியெலாமியற்றினள். (௩௩௭)

இவ்வாறுநாடோறுமென்மெலவநதெழுமன்பிற
செவ்வாய்மைத்திருவுள்ளங்களிசிறபபத்தேம்புமிடை
மைவாருங்குழறகவுரிமதின்மூனறுமொருகணையா
லெயவாரைப்பூசனைசெய்தினிதிருநதாளககாலை. (௩௩௮)

வேறு.

உலையுங்குளிர்கூதிரொழிநதநுவின
மலையங்கையிறைவாவமுதழியருள்
குலவம்பிகைபாலுறுதன்குளிர்போய்ச்
சுலவுந்திறமஞ்சியசூழ்ச்சியென. (௩௩௯)

தானாடியதணமலையீன்றவிள
மானாடியவணடவநோக்கியமண்
மேனாடியெழுநததுவீழநறும்
பானாடியமுன்பனிபாயநதவே. (௩௪௦)

வேறு.

கூதிராலுமுன்குழைந்தமாநதாக
ளோதுசெய்துமறறிதனுக்கென்றுளம்
போதநோதகபபொங்குதண்பனிச்
சீதவெண்முகில்செறிவுகொண்டதே. (௩௪௧)

பிரிந்துளாருளம்பீழைமல்கலாற்
பொருந்தினாருளம்பொலிவுமல்கலாற்
பரந்துநின்றுவீழ்பனியின்மென்றுளி
வரிந்தவெள்சிலைவாரிபோன்றதே. (௩௪௨)

ஐயபுல்லறுகாதியெங்கணும்
பெய்யுநுண்பனித்துளிபிறங்கின
வையமங்கைதன்மகிழ்நர்தோண்மரீஇ
மெய்யெலாம்வியர்பொடித்தல்வீழுமே. (௩௪௩)

அன்னமென்றுளியவனிமங்கைதான்
றன்னிடத்துமைதவமியற்றலுங்
கொன்னறம்புரிகோலமும்வியந்
துன்னியுற்றமெய்ப்புளகமும்பொருஉம். (௩௪௪)

மலியுநீற்றுடற்கவுரிமானநோய்
மெலியிமதநினான்விளர்த்தயானையு
முலகமுற்றுமையுருவமென்பதை
யிலகுகாட்சியிற்றெளிவித்தென்னவே. (௩௪௫)

அனையதண்பனியால்வெளுத்தொளிர்
கனகடற்புவிக்கன்னிதானுமெய்
வனிதைபோற்றவமருவமெய்யெலாம்
புனிதநீறுதோய்பொலிவும்போன்றதே. (௩௪௬)

கதிரினாற்றனைக்காதுவெய்யவன்
வதுவைசெய்மனையாவதோர்நதெனப்
பொதியும்வெப்பினிற்பொலிவழிந்துதன்
பதுமம்வாடுறப்பகைவிளைத்ததே. (௩௪௭)

கரிந்ததாமரைக்கதியவண்டினம்
பிரிந்துபோறவபெட்பினோயினாற
பரிந்தநுண்ணிடைப்பாவைமார்தமைத்
தெரிந்துகாமுகர்நீங்கிச்சேறல்போல். (௩௪௮)

நோயினாலுயிர்நொந்துமென்மெல
வீயுமாந்தர்போல்வெய்யதண்பனி
பாயநீரினாறபங்கயக்குலந்
தீயுடன்றெனமுழுதுந்தீந்தவே. (௩௪௯)

ஆடுமாந்தருக்கார்வமற்றெனத்
தோடுகொண்டதூவெள்ளையன்னமு
நீடுதண்டுறையூடனீங்கின
பேடையோடுதண்சோலைபேணின. (௩௫0)

அணங்குவெம்பனிக்கழகழிந்துகா
ரிணங்குமெய்யினொவருமாதலாற்
றணந்துளாரையுந்தலைப்பட்டன்பினான்
மணந்துளாரையும்வருக்கொணாதரோ. (௩௫௧)

மண்டுவெம்பனிமறலு நீர்மையான்
விண்டோருமான்மேயவன்பர்தே
னுண்டபற்குறியூறும்வேற்றுமை
கண்டிடப்படாகன்னிமாரிதழ். (௩௫௨)

களவினன்பரைக்கலந்தமாதரு
ளளவுபற்குறிக்கஞ்சுவாரிலை
யிளிவுறுதகிமத்திதழ்வெடித்ததோர்
பிளவிதாமெனப்பெயர்க்குமாற்றலால். (௩௫௩)

இரவிமேற்கடலெய்துமுன்னரோ
விரவுமாந்தர்கள்விளக்குமாளிகைப
புரவுபூண்டனர்புகுவரல்லது
பரவைவீதியிற்படர்கிலார்பிசி. (௩௫௪)

அரமியங்களுமலர்பொதும்பரும்
பரவுசீதளப்பனிமதிக்கலும்
விரவுமேனிலமேடையுங்கவி
னிரியல்போயினவெவருநீத்தலால். (௩௫௫)

சந்தனங்களுந்தரளமாலையுங்
கந்தநீர்களுங்கமழ்செய்மாலையு
மந்திலேந்துருவாவணங்களு
நொந்திமத்தினாற்றுறுநூக்கல்போல். (௩௫௬)

திங்கள்காலொளித்தெண்ணிலாவுடற்
றங்குதோறுயிர்தளர்வர்யாவரும்
பொங்குமில்லறம்புகவொன்றோம்பினார்
நங்கைமார்கரநீண்டதைந்தென. (௩௫௭)

அழறறுவெம்மையவங்காரகமுஞ்
செழித்தகாரகிறசெறித்ததூமமு
மிழித்திலாவெலிமயிரின்போர்வையுங்
கழித்திலாரரைக்கணமும்யாவரும். (௩௫௮)

ஒருவர்மெய்வெதுப்பொருவர்மெய்யினின்
மருவிவன்குளிர்மாயமார்பெலாம்
பொருமுகொங்கைகள்புதையப்புல்லுவார்
திருவனார்களுஞ்செல்வமைந்தரும். (௩௫௯)

புகையுமப்புறம்போதொணுவகைத்
தகையுமுள்ளறைத்தடவுச்சேக்கையி
னகிலினிறபுகையார்த்திவைகலாற்
பகவன்றுருமால்படிவமெய்தினர். (௩௬௦)

மாலும்வானவரிறையுமாரனுங்
காலவெம்பனிகாதநொந்துமு
னீலவொண்புகையாத்தநீர்மையாற்
போலுமெய்யெலாம்புகர்படைத்ததே. (௩௬௧)

நெடியவானமுநீண்டவேலையுங்
கடியசோலையுங்கரியகுன்றமு
மடமைமாதரார்வணர்மென்கூந்தலுங்
குடிகொள்காருமக்கொள்கைபோலுமால். (௩௬௨)

முடங்குவார்கழன்முன்கைமார்புவைத்
தடங்கியன்னையாகட்டிஞென்றுற
வொடுங்கிமைந்தர்களுறக்கமேயினா
வடங்கொணித்திளைமாயஞெதறுளார். (௩௬௩)

அறையும்போர்வையுமடுத்தணைத்தன
ருறைதலாற்றுயிலெவர்க்குமோங்கலானை
மறையிறப்புல்லப்போமகளிர்க்கவவிறாக்
குறையினுற்றதுகூதிர்போலவே. (௩௬௪)

கந்தைபின்புறங்காக்கவிட்டுமு
மந்திபோலமுள்காந்துவார்கழற
பந்தமுற்றுறப்பாணிகோத்தன
நொந்திருப்பர்முன்னேறிலாரெலாம். (௩௬௫)

முதுமைமாதர்கணமூரற்பந்திக
டதையமோதுவதாளமாகவாய்க்
கதிகொண்மெல்லிசைகறங்கியங்களா
வதரமாடுவவங்கையாடுவ. (௩௬௬)

தலைவர்நீங்கியதையன்மெல்லிய
ருலையும்வாடையாலுடைந்துமாமழை
புலவுவேல்விழிபொழியப்பீர்முலை
மலைகள்பூப்பமுன்மாரிகாட்டுவார். (௩௬௭)

வேறு.

நாரணர்விரிஞ்சர்தேருநம்பனூர்க்கலாகன்கொய்வான
பூரணிவிடியற்காலைபுகுந்திறமுணாந்தாலென்னக்
காரணிசோலைமுற்றுங்கழீஇப்பெருந்தாயமெய்யு
மோரணிசிறப்புவாய்ப்பவிறுத்தினபனிமாமேகம். (௩௬௮)

அருள்கொழித்தொழுகும்வாட்கணம்பிகைபுரிபூசைக்கு
மருமிகுத்தொழுகுந்தேறன்மலர்நனியுதவித்தங்க
ளிருள்பழுத்தொழுகுநீலநிறமிரித்திட்டாலென்னச்
சுருள்விரித்தொழுகுஞ்சோலைதூத்தகவெளுத்தமாதோ. (௩௬௯)

இறைமகளுஞ்சிவாழுமிரும்புசூழிமயக்குன்றங்
கறைகொடாதிருப்பச்சீறிக்கடாவலுமிறந்துமுற்றி
நிறையமேலிவர்ந்துவண்மைநிலைகெடவளைத்ததேய்க்குங்
குறையறுவளஞ்சூழெல்லாக்குன்றினும்பனிசூழ்தோற்றம். (௩௭௦)

வலம்புரிதடந்தோளன்பர்வரப்பெறுமாதரார்க்குக்
கலம்புரிவெண்ணீராட்டுங்கடும்பனிகணவரெய்தாப்
புலம்புறுமாதரார்க்கும்புணர்விழிவெண்ணீராட்டி
நலம்புரியறிஞர்போலவொப்புரவாற்றுநாளும். (௩௭௧)

கணவரைப்பெற்றாரன்னோர்கமழ்புயந்துணையாக்கொண்டு
மணியணைநீங்கிமுன்றில்வருதிடாகசிர்கநோற்றத்துந்
துணைவரையுருமன்னோரன்பமேதுணையாக்கொண்டு
பிணிமலர்ச்சேக்கைநின்றும்பெயர்கிடார்கலந்தாரொத்தார். (௩௭௨)

காலையுமிரவேயென்னக்கள்ளுயிர்த்தலர்ந்தபல்பூச்
சோலையுமாறுங்குன்றுஞ்சூழ்ந்துகொள்பனியினேற்றம்
வாலைமுதலாயுள்ளோர்குளிர்ப்பிணிமடங்கச்சாய்வான்
சாலவும்வளர்த்தசெந்தீதருபுகைபடலையொக்கும். (௩௭௩)

மாதரார்புலரிகாலைப்புறஞ்செலாவருத்தநோக்கி
மோதுதண்பனிதானன்னோர்முன்றிலுமறுகுமெங்குஞ்
சீதநல்வாடைதன்னாற்றிருவலஞ்செட்டுநாளு
மேதகுமாப்பிரீராமென்றுளிதுவற்றுமன்றே. (௩௭௪)

காலைவெங்கதிர்காயாருங்கனலிடைக்குளிர்காயாருஞ்
சாலவுமுறுகும்வெந்நீர்குளித்திடாதாருமஞ்ஞை
போல்பவர் * முலையின்மார்பும்புயங்களுநெருங்காதாரு
மாலுமப்பனியத்தில்லையலர்தலையுலகின்மாதோ. (௩௭௫)

சேணிடைத்தணந்தோர்தாமும்வெம்பனிச்சேநீங்கப்
பூணுடைக்கிழத்திமார்சம்புணர்முலைவெம்மைதங்க
ளூணுடைமார்பினூற்றியின்புறபாக்கவல்லே
மாணுடையிரதமூர்ந்துவந்தனர்மகிழ்ச்சிபூப்பார். (௩௭௬)

திங்களுங்கங்கையாறுந்தண்ணெனச்சென்னிதாங்கு
மெங்களையருமங்காளிதசருபனியிற்பட்ட
வெங்குளிர்க்குடைந்துசெம்பொன்வெற்பரசுயிர்த்தநங்கை
கொங்கையின்வெம்மைமார்பினுறறிடுங்குறிப்போதேரும். (௩௭௭)

பங்குனிப்பருவந்தன்னிறபண்டுபோலொருநாளன்பின
மங்கலக்கவுரமேனிமடமயின்மாண்டசாயற்
றெங்கலங்குழலாள்பூசைதொழிறலைநின்றகாலைச்
செங்கைமானமறியாரங்கோர்திருவிளையாடல்செயவார். (௩௭௮)

---

* முலையுமார்பு மென்றும்பாடம் உண்டு.

கங்கையந்தீர்த்தமுன் னாங்கடும்பவங்கழுவுந்தெண்ணீர்
பொங்குமேழ்நதியுமெய்தத்திருவுளம்புரிதலோடு
மங்கையையேழும்போந்துதொழுசருட்பூசையாற்று
மங்கைமற்றறியாவண்ணமறைநெஞ்சொருபுடைநின்றேதம். (௩௭௯)

சிறியரோம்யாங்களெம்மான்றிருவுளஞ்செய்யப்பெற்றே
மறிவுறுத்தருளாய்செய்யும்பணியெனவருளினோங்கி
யிறையிலிக்கம்பையாற்றினுடன்கலந்தென்றும்மமிப்
பிறைநுதல்பூசைமுற்றுப்பெற்றியின்வம்மினென்றார். (௩௮௦)

நன்றெனவணங்கியேழுநதிகளுமேல்பாலெய்தி
யொன்றலவேலையேழுமொருபுறக்கடலிற்கூடி
மன்றவிங்கெழுந்தாலென்னதகன்னிடைமருவியீண்டப்
பொன்றிரைகொழிக்குங்கம்பையெழுந்ததுபுயனமர்ந்த. (௩௮௧)

ஏழுயர்நதியுமேலையேழுமுலகும்போயபக்
கீழுலகனைத்துங்கம்பைதிருநதிகிழிப்பவொக்கு
வாழியபரந்துபொங்கிவரும்பெருவெள்ளநீத்த
மூழியீறறளக்கவொன்னவொலலொலித்தெழுந்தசம்மா. (௩௮௨)

வேறு.

வன்னப்பணிவரையனையபெறுதனிமகள்கண்டிகலியுண்மறந்திக்
கொன்னப்படைவிழியெரிநிதிவழியிரமுழையாகிரிபரிபிளவுற
முன்னர்ப்பலநெறிகண்டாலெனமிசையண்டச்சுவரொடுமுறைநீர்சூழ்
கன்னிப்புவிமசனுடல்யிண்டெழுவதுசமைபர்கலிசெழுநதிமாதோ. (௩௮௩)

கயிலைத்திருமலையுடையாரவரிருகண்ணுயுறைதருநந்தம்மை
யயரக்கரமலர்கொடுபொத்தியவுமையவளச்சுறவிவணுறவின்றும்
வெயில்விட்டெழுமிருசுடர்காணீவிர்கடுணையாமேவுதியொனவெளவி
யியலுற்றெனமிசையுழலுஞ்சுடாகளையெறிபபெயாவதுபுகழ்கம்பை. ()

கடையிற்பெருகியகடனீரிதுபுனல்கடைநாளிதுவினமெனவெண்ணி
யுடைவுற்றரியயன்முதலாமமரர்களுறைதரமதிடம்விட்டோடி
விடையிற்பொலிவுறுவிகிர்தச்கடவுளைவிண்ணிறசிவபுரநண்ணிச்சென்
றடைவுறறனிணையடிகேள்புரவெனவயரப்பெயர்வதுபுசம்கமபை. ௩௮௫

தாரளத்தொகுதிகளெனவுநகைதநரொனவுநதாரகையுடன்வானில்
விரவிபயில்சுரர்குழுவைப்புவிமிசையிடையதநிரைகொடுதள்ளிப்பி
னுரவுத்தாரகையெனவுநதேவர்களெனவும்பலமணியுடனமல்கு
நரைத்தாவில்விணிடுவிஞ்சையினொடுநடையுறறெழுவதுபுகழ்கம்பை. ()

விண்ணத்துயரியதருவும்பதுமம்வெள்வலையெனநுரைபெறுகிதாமு
மண்ணிற்குழுமியமராமுங்கமலமென்மலருங்கதிர்பணிலமுநேரோ
நண்ணிக்கிழமையினண்மிக்குழுமுறநாடிச்சந்திசெய்துதாகி
யெண்ணற்கரியபல்வளனங்களைதரவேந்திப்பெயர்வதுபுகழ்கம்பை. ()

அம்மென்றளிரியலுமைமபோலிறையவரடிவந்தனைசெயவுறுபொற்பின்
விம்முங்கதிரொளிமணியுந்தளிர்களும்விரைபொங்கியமலர்களுநாறுஞ்
செம்மென்பளிதமொளளகில்சந்தனநறைசெழுமைக்கனிநனிபலகொண்டு
கொம்மென்றெழுவதுநுரைமந்திரவொலிகுலவத்திரைபடுமுயர்கம்பை. ()

துங்கத்திரைபடுநதிகட்கிறையெனமருவுங்கனைகடலுயர்கூர
மங்குற்கடவுளாகடைமத்தெனவுறுமலைமேனிகழ்வயிரத்தாலச்
சிங்கத்திரள்பயில்சிலைதன்குலமெனவெதிர்நின்றுயரியசிலையெல்லாம்
பொங்கிச்சினமுடனகழவுறநிலைசெய்துபோதுநதிறவதுபுகழ்கம்பை. ()

ஆனைக்கொடிமிசையுடையார்திருவருள்கடவாதனைவுறவிசையுந்தன
மானப்பெருவிறல்வரவைப்பூசனைவழுவாநியதியினொடுபேணு
ஞானப்பனையைமுனறிவிததவளருணலமும்பெறுமுறைபுறமாபோன
மீனக்கடல்களுமவியப்பெருகொலிவிளைவிததொழுவதுபுகழ்கம்பை.

வேறு.

புனலுடையண்டந்தம்முளிஃதுமோர்புனல்சேரண்ட
மெனவெழுகம்பைநதெண்ணீரகமாய்க்கொதித்துச்செலலத்
தனைமறந்தறிமால்கொண்டுநிலைவனர்பூசையாற்றும்
வனமயிலனையாளுக்கிமனம்விதிர்நதச்சம்பூததாள. (௩௯௧)

அருநதவநெடுநாளாற்றியரிதுயிர்புனிறறுப்பிள்ளை
மருஙகொருபாநதன்வெளவவநதருளனறவ்வைமானக்
கருங்குழலுமையும்வேறுகாரணநினையாளாகி
யிருகரத்தணையால்வீழந்தநதமுவிலுளிறைவனுனை. (௩௯௨)

இருவளைக்கரங்கணீட்டியிளமுலைபொருப்புத்தண்டார்
மருமமுற்றழுநதப்புல்லுங்காட்சியுமலைபோறபொங்கி
வருபுனலுக்கிநோக்கிமறுக்கமும்பீடதுான்று
மொருமுழுநதாளுமண்ணிலுறநறைத்தாணிலையுமானுள். (௩௯௩)

நறுவிரைத்தெண்ணீராட்டிநலத்தகுகளபஞ்சேர்த்தித
தெறுகதிரிழைகள்சாத்திதிருக்கினர்கோலஞ்சாலப்
பெறுதனிக்கொழுநர்மேனிப்பேரொழிலுக்கிக்காதன
முறுகிடத்தழீஇயதேய்பபமுகிழ்முலைதழுவலோடும். (௩௯௪)

இருவரும்புணர்ச்சிவாய்ந்தசெயலுணர்நதெழுந்தவெள்ள
மருகுறநாணுக்கொண்டாங்காயிடையஞ்சிறிடுப்
கருணையங்கடலினுருங்கனிவுருக்குழைந்துமாநர்
திருமுலைச்சுவட்டினுடுசெறிவளைத்தழும்புபூண்டார். (௩௯௫)

வலியனவெவற்றினுள்ளும்வலியரொன்பதற்குச்சான்று
விலகொளிமேருவாங்கிக்குழைத்தமைவிளக்கமற்றை
மெலியனவெவற்றினுள்ளுமெலியரொன்பதற்குச்சான்று
குலவுமென்முலைக்குச்சாலகுழைந்தமைவிளக்கிற்றம்மா. (௩௯௬)

காமவேள்பகழியாயகமலமென்முகைகளென்றுந்
தாமமாலோடையானைத்தரளநீருலவையென்றும்
பாமலிபுலவர்கூறும்பதப்பொருள்விளைப்பவையர்
அமணிமார்பந்தைததறுடியிடைமடவாளகொம்மை. (௩௯௭)

தொடிபொலிதடக்கைநீட்டித்துளங்கவெண்கயிலைக்குன்ற
மடல்வலியரக்கர்கோமான்பெயர்த்தநாளதனிறசால
விடனுடைத்திருவேகம்பதரெந்தையார்கம்பைக்கஞ்சிப்
பெடைமயிறழுவுஞான்றுபெரிதுளமகிழ்ச்சிபூத்தார். (௩௯௮)

பயங்கிளருயிர்களெல்லாம்பரவசமகிழ்ச்சிகூர்த்த
வியங்களோரைந்தும்வானத்திடியெனமுழங்கியார்த்த
கயங்கிளர்சமயமுற்றுங்காலறமறைகளார்த்த
நயங்கிளரமரர்பெய்யுநறைமலர்விசும்புதூர்த்த. (௩௯௯)

உள்ளகமகிழ்ச்சிபூப்பக்கணங்களுமுறுவர்தாமுந
தெள்ளியநீநதண்பாடறறிவவியாழ்ப்புலவராதி
வள்ளயிற்படைவாள்விண்ணோரவகுப்புமாங்கெய்தவேதண்
கள்ளவிழ்துளபத்தாமக்கடவளோடடியிறருழ்நதார். (௪00)

பொறித்தபூஞ்சிறகர்த்தும்பிபுரிமுறுக்குடைத்ததெள்யாழ்
குறித்திசையிழற்றித்தாதுகொழுகிவாயமடுத்துண்டாடும்
வெறித்தபூவணையிறபுத்தேள்வேதநான்மொழியாற்கூற்றை
யிறுத்துயிருண்டநோன்ருளிணைமலர்வழுத்தினுல். (௪0௧)

வழுத்தலுங்கருணைகூர்ந்துவார்மதுப்பருகிவண்டு
கொழுத்தபூங்கடுக்கைமாலைக்குவவுத்தோளண்ணலார்தாஞ்
செழித்தநல்வரங்கள்வேட்டசெப்புதிதருதுமெனன
முழுத்தபேரன்பினன்ஞேன்முகமலர்ந்திதனைவிணடான். (௪0௨)

இத்திருநகரின்வாழ்வாரெவர்க்குமித்திருத்தநன்னீர்
பத்திமீக்கிளைப்பத்தன்னம்பருகிஞேர்தமக்குமாயைப்
பித்தனேன்பழிச்சுநின்சீர்ப்பெருந்துதிபேசிஞேர்க்கு
முத்தியீந்தருளாயென்னமுதல்வனுரசனைநல்கி. (௪0௩)

நாமகடிருத்தப்பாங்கர்நாவின்வீற்றிருக்குமாதும்
பூமகடிருத்தப்பாங்கர்ப்பூவின்வீற்றிருக்கும்பொன்னு
நாமகிழ்பூப்பவெம்மைப்பூசனைநயந்தாரன்ஞேர்
தாமகிழ்பூப்பநீயுந்தண்டுழாய்மருமத்தானும். (௪0௪)

இருமையினுலகமுற்றுமிசைபெறவனைமினென்னுப்
பொருவருவரங்களீந்துபுலவரோடவரைப்போக்கித்
திருவளரொருமாநீழற்சிலம்புயிர்மடந்தையோடுங்
கருணைபூத்துவகையுள்ளக்கலப்பினிருக்குமேல்லை. (௪0௫)

சிறுமதிபெருநிலாவைச்செய்தெனவொளிரச்சற்றே
முறுவலித்தருளவேய்த்தோண்முகிழ்முலைப்பிராட்டிநோக்கி
யுறுசெயலிதுமற்றண்ணல்விளைத்திடுமிடையூறென்று
மறுவறுகாட்சிசான்றமனமுறத்தெளிந்துகொண்டு. (௪0௬)

கீர்த்திமாமதியைநோக்கவவண்மதிக்கீற்றுப்போலும்
வார்த்திருநுதலிற்காளியெனுமடவரலையீன்றா
ளார்த்தெழுங்காளிமுன்சென்றடுக்கலினுயிர்த்தாள்செம்பொற்
சீர்த்தமெல்லடியிற்றாழ்ந்துசெல்லினமுழக்கிற்கூறும். (௪0௭)

அலைகடன்மடுக்கோவெண்ணிலண்டமுநெரிக்கோபற்பன்
மலைகளுந்தெறிக்கோபாழிமண்ணெலாங்கரக்கோபூத
நிலையெலாமுறழச்செயகோநிர்த்திலநான்றுநீவு
முலைமுகிழ்பூத்தவன்றாய்மொழிந்தருளென்றுநின்றாள். (௪0௮)

நின்றவள்குன்றமீன்றதிருமலியேவலோடு
மன்றுபேரச்சமெய்தவார்த்தெழுந்துலம்பிப்பொங்கி
யொன்றிமேலெதிர்ந்துவந்தவோரொழுநதியுங்கஞ்சம்
வென்றதன்கரகபாலத்தேற்றனள்வீறுகாட்டி. (௪0௯)

காட்டினுண்மதத்தவேழக்கணங்களுமிரியத்தாக்குங்
கோட்டிறலுழுவைவந்துகூட்டினுட்பட்டாலென்ன
வீட்டுபல்புவனமஞ்சவெழுந்தனவுநதியெல்லாஞ்
சேட்டிருங்கபாலத்துள்ளாற்பட்டுளந்திகைத்துக்கூறும். (௪௧0)

அடியரோஞ்செய்தகுற்றமனைத்தையும்பொறுப்பாயோலங்
கடியவிழிமயமீன்றகவுரியேயோலம்வேத
முடியினிருத்தஞ்செய்யுமுருகவிழ்குழலாயோல
மிடிதுரந்துயிரைக்காக்கும்வித்தகியோலமோலம். (௪௧௧)

எனப்பலமுறையுமோலிட்டிறைஞ்சலும்வருத்தக்கன்றின்
கனைப்பொலிகேட்டவாவிற்கவுரியுங்கருணைகூர்ந்து
மனப்படுந்துயரத்தாழ்ந்துமறுகன்மின்மறுகன்மின்னென்
றனைப்பெருநதிகளேழுக்காத்தவாய்மலர்ந்துகூறும். (௪௧௨)

அளப்பருஞ்சீர்த்திசான்றவழகியகச்சிமூதூ
ருளப்படுமெண்ணிறீர்த்தமுளவெலாநிறைத்துப்பின்னர்
வளப்பெருங்கம்பையோடுமகரநீர்ப்பௌவத்தின்பந்
திளைப்புறச்செல்கவென்றுதனித்தனிசெப்பிவிட்டாள். (௪௧௩)

கத்திகைப்பிணையலோதிக்கௌரியுட்கருணைபூத்துத்
தத்தமக்கருளிச்செய்ததடம்புனற்றீர்த்தமெல்லாம்
பத்தியினிறைத்தேயன்னாள்பதமலர்சிரமேற்சூடி
முத்தலைநதிகளேழுமுடுகியகடலின்மாதோ. (௪௧௪)

பொற்றமென்சுணங்குபூத்தபுணர்முலைநிதிகடம்மை
மற்றொருபுலத்திற்போக்காள்வளைமணிக்கடலிற்கூட்டும்
பெற்றிமைகணவர்கூட்டங்கருமெனப்பேணுமப்பே
றுற்றிடத்தனக்குச்செய்நவுதவிநேருதவிபோலும். (௪௧௫)

வேறு.

இன்னவகைத்திருவிளையாட்டாடியெங்கோனிணரூழ்த்துமதுத்திவலையிறைக்குங்கொக்கி, னன்னிழலினரியணைமேலிமயமீன்ற நங்கையொடும்வீற்றிருந்துநாளுநாளும், பொன்னகரிற்கடவுளருங் குலிசச்செங்கைப்புத்தேளுமலர்த்தேவுங்கருவிமேக, மன்னவனும்பழிச்சவருள் கொழித்துவாழ்ந்தாரங்கிலையினெடுங்காலங்கழிந்தபின்னர். (௪௧௬)

மேதகுதன்கிழத்தியாநதிகளெல்லாம்வெருவவொருகபாலத்தினேற்றுவாட்டுந், தீதுதனைநினைந்துபகைச்செறறங்கொண்டுசெம்பொன்மலைவல்லியுடன்செருவாற்றற்கு, மேதமறவவ்ள்படைத்த வுலகமெல்லாமிமைப்பிளவினழிப்பதற்குமெண்ணியாங்குப், போதமருமயனரியை யுள்ளிட்டோரும்பொன்றவருகடைவெள்ளம்பொங்கிற்றம்மா. (௪௧௭)

பொங்கியெழுங்கடற்பெருக்கநோக்கிவிண்ணிற்புத்தேளிர்முதலெவரும்பொருக்கென்றோடிச், சங்கரசங்கரபோற்றிபோற்றியெம்மைத்தாழாதுகடைவெள்ளக்கடலினீக்கி, யிங்கணருள்புரிகவென விறைஞ்சியேத்தவெம்பெருமானஞ்சாதிரென்றுகூறி, யங்கணெதிர்நின்றருளுங்காளிதன்மேலருட்கடைக்கணோக்களிப்பவளுந்தாழ்ந்து. (௪௧௮)

விடைகொண்டுவல்விரைந்துபோநலோடும் வேறொருவரில்லையெனக்களவுசெய்யுங், கடைகொண்டமனத்தினராங்கொருவர்தம்மைக்கண்டபொழுதெனவெருவிக்கலங்கியஞ்சி, மடல்கொண்ட பூங்குழலாண்மலர்த்தாள்போற்றிமழவிடையாரருளாறேவையம்பொன்றத, தடையின்றியெழுகின்றேனென்னையன்னைசாடுதற்குமுயல்கின்றுயசாற்றுகென்ன. (௪௧௯)

சொற்றமொழிவாயாகுந் தரளஞ்சிந்துஞ் சும்மைநெடுந்திரைக்கடலேசொல்லக்கேண்மோ, பெற்றமுயர்த்தவனருளாலன்றியானும்பெயர்ந்தீண்டுப்போநதிலன்காண்பெரியகோலப்,பொறறமணியெழுப்புயதுக்கடுக்கைப்புத்தேள்பொலங்கொடியன்னவளோடும்பொருநதிவாழு,மற்றமறுமுவளாகமாங்காஞ்சிமூதூரணுகலைமறறெவ்விடத்துமணுகலென்றாள். (௪௨௦)

அதுபுரிவேனதுபுரிவேனம்மவென்றங்கருடலைமேற்கொண்டுபதமிறைஞ்சிப்போற்றி, யுதிர்மலர்ப்பூம்பொழிற்காஞ்சிக்கப்பாலேந்தி யோசனையெல்லையினகன்றதுநதிவெள்ளம், விதுநுதற்காளியுமகன்றுதிருவேகம்ப மேவியடிபணிந்திறைஞ்சவிமலனுரு, மதிமுகமிக்கலர்ந்து பிரளயசித்தென்னவழங்குபெயரவட்கன்றாளருளிச்செய்தார் (௪௨௧)

அப்பொழுதுபுத்தேளிர்முனிவர்யாருங் கடைநாளினிடும்பைவினையறியா ராகி, யொப்பரியகாஞ்சிவயிற்றிருவேகம்ப முடையபிரானருட்கடலின்மு ழுகிவாழ்ந்தா, ரிப்பரிசினிறைவரருட்பெருமைநோக்கி யேழுநாளோவாத ங்களவைவேந்தன், செப்பரும்பொன்மழையுநவமணியுமேழுசெல்லினமும் புறங்கொடுப்பச்சிதறியுய்ந்தான். (௪௨௨)

அளவுபடாச்சிவபெருமானருளினாற்றாளவுபடாப்பெருங்கருணைப்பிராட் டியாற்று, மளவுபடாச்செயலனைத்துந்தெளிவொன்றில்லேனறிவளவினொ ருவாறிங்கறைந்தேனிப்பா, லளவுபடாக்கடவுளர்கண்முனிவர்போற்றுமள வுபடாச்சிவாலயங்களிடந்தோறுள்ள, வளவுபடாப்பெருவளஞ்சூழ்புரிசை க்காஞ்சியகநகரந்தருவேதிமேன்மைசொல்வேன். (௪௨௩)

கழுவாய்ப்படலமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௭0௭.

## மூன்றாவது - அந்தருவேதிப்படலம்.

மேகமுட்டிவிழுப்புனல்சிந்தும்விரைப்பொழி
னாகமுட்டியுடன்றமராற்றநகிறறுணை
யாகமுட்டரமாதர்களோக்கினராட்டயர்
மாகமுட்டிவளர்ந்துயர்நந்திவனாக்கணே. (௧)

மாதவத்தினுயர்ந்தவசிட்டன்மகத்தினுக்
கேதமில்சுவைத்தீம்பயமீந்திடுதேனுவங்
கோதநஞ்சமிடற்றவனூர்விடையேற்றினைக்
காதலாலொருநாள்விழிமுந்துறக்கண்டதால். (௨)

கண்டுமீமிசைமிக்குலவாதெழுகாமநோய்
கொண்டுநொந்துவிம்மாந்துமெலிந்துகுழைந்துபான்
மண்டியூறுசெருத்தலும்வற்றியுலர்ந்ததா
லண்டர்யாருமுறுப்பிலடங்கியதேனுவே. (௩)

அன்னதன்மைவசிட்டனறிந்துதருப்பையை
மன்னுமாமனுவாலொருகன்றின்வரசசெய்து
முன்னருய்த்தலுமோந்துடனக்கிமுகிழ்த்தெழு
நன்னரன்பினயந்ததுகாமநலிந்ததே. (௪)

மழையெலாங்குழுமிச்சொரிமாண்பெனவோகையாற்
கழியநீண்முலைத்தாரைகள்கான்றனகான்றபான்
முழுதுமோர்நதியாயவணின்றுமுந்நீர்ப்புகுந்
தழிவிலும்பருமாட்டயர்தீர்த்தமதாயதே. (௫)

பரவைநீருலகேத்தியவத்தருபாலியின்
கரையின்மல்கியகண்ணுதல்கச்சமில்லைப்பினு
ளிருளையீர்க்கும்வராகவிரும்புரமுண்டதி
லரவின்மேற்றுயின்மாலுமலர்த்தலையண்ணலும். (௬)

தருக்கியானிறையானிறையென்றனர்தம்முளே
யுரைத்துடன்றமராற்றுழிபங்கனுளச்செருக்
கிரித்தடக்கியவெம்பெருமானெரிவண்ணமாய்ப்
பொருக்கெனப்புவனங்களடங்கநிமிர்ந்தனன். (௭)

அண்ணல்வார்கழல்காணுவலென்றரியன்றியாய
மண்ணகழ்ந்துபுகுந்தனன்வான்முடிநோக்குவா
னெண்ணியோதிமமாகியெழுந்தனனான்முகன்
கண்ணுமுள்ளமுமாழ்கினர்காணலர்மீண்டனர் (௮)

அடுத்தவவ்வுருவோடொருதீர்த்தமகழ்ந்துமண்
ணெடுத்துநாட்டுமிருந்திறன்மால்வராகேசனைந்
தொடுத்தவன்புதுளும்புறுபூசைதொடங்கினான்
புடைத்தெழுஞ்சிறையோதிமமானபுத்தேளுமே. (௯)

அன்னத்தீர்த்தமகழ்ந்தழகார்பிரமீசனை
நன்னர்ப்பூசையியற்றிநயந்தனனாதனு
முன்னர்த்தோன்றிமுகுந்தனும்வேசனுமின்புற
வின்னற்றீவினையீர்ந்தருளீந்துமறைந்தனன். (௧௦)

அனையசூழலினன்னவர்பூசனையாற்றிய
கனையுநீள்கடனஞ்சுநுகர்ந்தகளத்தனை
நினையவல்லவரோதுநர்தாழ்பவர்நித்தலு
மினையும்வல்வினையின்றியிருங்கதியெய்துவார். (௧௧)

வேறு.

செழுங்கிரணவமுதுறைக்குந்திங்கள்பலவண்டமெலாம்
விழுங்கியபேரொளிப்பிழம்பாம்வித்தகனைவழிபட்டுக்
கொழுங்கடுக்கைச்சடைக்கணியாங்கோதறுசோமீச்சரமென்
றெழுங்கியவக்கரைத்தலையினொருதலம்வீற்றிருக்குமால். (௧௨)

சலந்தரனுருயிர்பருகுஞ்சக்கரம்வேட்டுயர்திருமா
னலந்தவழ்பூசனைக்கெடுத்தநாண்மலரொன்றெஞ்சுதலா
லலர்ந்தவிழியிடந்தருச்சித்தஞ்சலித்துநேர்நிற்கும்
பொலஞ்சடைவித்தகன்றிருமாற்பேறென்றுபொலிவெய்தும். (௧௩)

திருமலியுமரசர்குலஞ்செருக்கறுக்கும்பொருட்டறங்கூர்ந்
தொருபரசிராமனெயிலுருத்தவனைவழிபட்டுப்
பெருகுமொளித்தழற்பரசுபெறுஞ்சீர்மைத்தாயுளது
விருதுபுகல்பரசிராமேச்சரமென்றொருதானம். (௧௪)

இன்னுமரன்மகிழ்ந்தருளுமெண்ணரியசிவாலயங்க
டன்னுடையநெடுங்கதையிற்றழீஇக்காஞ்சித்திருநகர்க்கு
மன்னுமெழில்விளைத்தொழுகுமணிப்புனற்பூந்தடம்பாலி
நன்னதியின்மேன்மையெலாநவிற்றுவாரொவரம்மா. (௧௫)

பொருதாரகாசுரனைப்பொன்றமலர்ப்பொகுட்டணையி
ளொருதேவும்பாப்பணையினுத்தமனும்வானவருங்
கருதார்முப்புரங்கடந்தகண்ணுதல்சீரருள்வாய்ந்து
பெருகார்வத்தொடுங்குழும்பபேணுசிவாகமமுறையின். (௧௬)

காசறுசீர்வளக்காஞ்சிக்கடிநகருக்காயிரமாம்
யோசனையிற்சுமேருவெனுமோங்கலிடையுமையீன்ற
மாசின்மணிவேற்கரத்துவள்ளலைச்சேனாபதியா
வாசறுநீராட்டினரத்தீர்த்தஞ்சேயாறாய். (௧௭)

வேறு.

பூதலமருங்குபோந்துபொலஞ்சடைமுக்கண்மூர்த்தி
சீதவானிழலின்வைகித்தேவரைமுனிவர்தம்மை
யோதுவித்தருளுமோத்தூருறைச்சென்றுகடம்பர்கோயிற்
காதரத்தோம்புக்குவடமுகமாகிப்பின்னர். (௧௮)

பிரளயமுடிவின்மீளப்பிரமனெவ்வுலகுந்தோற்றத்
துரிசறுவேதங்காணான்றுருவிப்போயுரகம்பூண்ட
பரசிவன்பூசையாற்றிப்பழமறையருளப்பெற்று
பரமலிகின்றவேதநூபுரவைப்பினெய்தி. (௧௯)

இளந்தவப்பதியினின்றுங்கிழக்கினைநோக்கிச்சென்று
வளம்பயில்புனிதவேகவதிமணிக்கம்பைகூடி
விளங்கியகூட்டத்தெய்திவிராவியதனுமுக்கூடல்
களங்கறுத்தாடினோர்க்குக்கண்ணியவரங்கணல்கும். (௨0)

மருமலர்க்குவையல்கொட்கும்வளர்திரைப்பாலியென்று
வுருகெழுமணிகளுந்தியொழுகுபூஞ்சேயாறென்று
மிருவகைநதியுங்காஞ்சியெழினகர்வடபாற்றெனபான்
மருவிடுமெல்லையாகித்தீர்த்தமாய்வயங்குமன்றே. (௨௧)

அச்செழுநதிகளைப்பணைந்தருவேதியாகி
யெச்சமில்யமுனைகங்கையிடைப்படுமந்தர்வேதிக்
குச்சமாய்முதுவதாயெவ்வூழியுமழிவின்றோங்குங்
கச்சிமாநகரமங்கணிகழ்சிலகதைசொல்வாம். (௨௨)

எரிமணிமோலித்தேவரியக்கர்களுரகரோனைக்
கருடர்காந்தருவர்தங்கள்கன்னியராநோரெல்லாந
திருவளர்தத்தம்வைப்பிற்றீர்த்தநீர்மூழ்கிநாளு
மருமலர்ப்பொழில்சூழ்கச்சிமாநகர்வரைப்பினெய்தி. (௨௩)

பெருகொளிப்பரமானந்தப்பிலத்தினிதிருக்குந்தெய்வ
வரையணங்குமையாள்பாதம்வலம்புரிந்திறைஞ்சிவாழ்த்தித்
திருவருள்கிடைத்துச்செல்வார்செல்லுநாளொருநாட்சாலப்
பரிவொடுவணங்கிப்போற்றிப்பன்முறைபழிச்சிநின்றார். (௨௪)

அளியினமுரன்றுமூசுமம்மலரலங்கற்கூந்தற்
களிமயிலனையகாமக்கண்ணிமற்றவரைநோக்கி
யொளிநகைமடவீரொன்னேறுங்கருத்துரையிமினென்னத்
தளிர்புரைசெங்கைகூப்பித்தாழ்ந்துவிண்ணப்பஞ்செய்வார். (௨௫)

அதிரிடைக்குவவுக்கொங்கையன்னையிவ்வுலகத்துள்ள
நதிநதமுதலாந்தீர்த்தமுழுவதுநாளுநாளும்
விதியுளிப்படிந்துபோறறும்விழைவினேம்விழைவுமுற்ற
முதிருட்கடைக்கணல்கென்றிரத்தலுமுழுதுமீன்றாள். (௨௬)

கருணைகூர்ந்தருளியோர்பாற்கைகுவித்திறைஞ்சிநின்ற
வருணன்மேற்கடைக்கண்சாத்தமற்றவனுங்காங்செய்தித்
திருநுதலிறைவியாணைசெப்பலுங்கங்கையாதிப்
பொருபுனற்றீர்த்தமெல்லாம்பொருக்கெனத்திரண்டுவந்து. (௨௭)

வருவினைப்பிறவிமாற்றும்பிலமதன்வடமேல்பாங்க
ரொருதடங்கடவுட்பொய்கையுருவமாய்த்திகழ்தலோடுங்
கருமுகிற்கூந்தன்மென்றோட்கன்னியாதொழுதுபோற்றி
யருளினாலந்நீர்மூழ்கியளப்பருங்களிப்புமிக்கார். (௨௮)

அங்கதிற்படிந்தேகம்பத்தடிகளைத்தொழுவோர்யார்க்கும்
வெங்கொலைத்தீமையாதிவீட்டிநாற்பயனுமெய்துந்
துங்கநல்வரமுமீந்தாள்சுரிகுழற்பிராட்டியந்தப்
பொங்குநீர்சருவதிர்த்தப்பெயரினாற்பொலிவுற்றோங்கும். (௨௯)

முன்னொருநாளிற்செவ்வேன்முருகனும்விண்ணுடாளு
மன்னனுமூண்டபோரில்வலாரிதன்மீதிலோச்சு
மின்னவிர்குலிசத்தண்டின்வீறழித்துமையாளீன்ற
பின்னவன்புடைத்தான்றன்கைப்பிடித்தவெங்குலிசத்தண்டால். (௩0)

வானவர்க்கரசனோடுமறுகிமாழாந்துமூர்ச்சித்
தீனமுற்றிரங்கும்வெள்ளையிபமொருசிறுவன்கையால்
யானுமென்னிறையும்பட்டேமின்னவனூர்தியாகி
யூனமொன்றுறுதென்றெண்ணியொப்பருங்காஞ்சியெய்தி. (௩௧)

வம்பலர்ந்துலவும்வேகவதிப்புனற்றிருத்தமாடி
யம்பிகைபாகற்போற்றியருள்பெறுநீலமேனி
யும்பனைமலையிற்போற்றியவ்வரமுற்றதற்கு
ஊம்புமக்கிரியையத்திகிரியெனநவிலுவாரால். (௩௨)

தானவர்கோடியோரைத்தடிகுடர்சரியக்கொன்று
மானவெங்குருதிச்சூலவார்நுதியேற்றும்பாவ
வினைமுற்றிரிக்குமாறுசண்டிகையெண்ணிவல்லே
கானமர்கோடிதீர்த்தங்கண்டனள்காண்டலோடும். (௩௩)

தொட்டருள்குளிர்பூந்தீர்த்தச்சுடர்மணிக்கரையின்பாங்க
ரொட்டுருவுடையமூர்த்தியிலிங்கமாய்ச்சுயம்புவாக
வுட்டவழ்கருணையோடுமுளைத்தனனதனால்யாரும்
பெட்டல்செய்தான்றோன்றீசமெனப்பெரும்பெயர்பெற்றோங்கும். (௩௪)

இருவினைசவட்டியாளுமெம்பிரான்பயந்தசெம்மல்
பொருதிறற்சூரனாண்மைபொன்றியமுருகப்புத்தே
ளருள்விழிப்பார்வைதன்னாலணிகொண்மேற்றளியிற்செந்தேன்
முருகவிழ்துளபத்தண்டார்முகுந்தனோரிலிங்கமானான். (௩௫)

வருங்கடைநாளின்மாலுமறைமலர்ப்பொகுட்டுளானு
மொருங்குவீட்டின்பந்துய்ப்பானுன்னினர்சங்கதீர்த்தஞ்
சுருங்குறுதமூந்துபட்டகுண்டிகைதீர்த்தநதொட்டுப
பருங்கனிதூங்கும்வில்வம்பலாசிவற்றடியினெய்தி. (௩௬)

வடம்புரள்குவவுக்கொங்கைமால்வரையீன்றநங்கை
நடம்பணிகாலையோடுமிறைவனைக்கருதநிறபேணிப்
படம்படுமாரம்பூண்டபண்ணவவெம்மையின்னே
புடம்படுவினைதுகாயத்துறுத்துகென்றிறைஞ்சிநோற்றார். (௩௭)

அடிகளுமவருக்கவ்வாறருளினனதனாலந்தக்
கடிபடுநகர்காயாரோகணமெனப்பெயர்பூண்டன்று
மிடிகெடவங்கணேற்போர்கயிலையைமெய்யோடெய்திக்
குடிகொளுமாற்றினாலுமப்பெயர்கொண்டதாமால். (௩௮)

குலவுசீர்மயானவைப்பிற்கொழுஞ்சுடர்க்கனலிநாவி
லலகில்பல்லுலகுமெஞ்சாதாகுதியாக்கிப்போக்கி
யிலகுமாவிரதமென்னுஞ்சாத்திரமினிதுதோற்றி
நிலவியயோகபீடத்திருந்தனனிமலமூர்த்தி. (௩௯)

திரையெறிகம்பையாற்றின்றென்புலத்தும்பர்மேவும்
விரைகமழ்கடப்பஞ்சூழல்வேலவன்வைப்பினந்தக்
குரைகழற்குமரவேட்குக்கோதிலாஞானந்தன்னை
வரைகுழைத்தருளுமெங்கள்வள்ளன்மிக்கருளிச்செய்தான். (௪0)

மையவிர்ந்தனையதன்கேழ்மாசுடல்கழிப்பான்முக்க
ணையனைவரங்கணல்குமமலனைக்கமலப்போதாற்
கையினாற்காலிற்றூவிக்கசிந்துளமுருகியேத்திச்
செய்யவண்பவளவண்ணம்பெற்றனன்றிருமாலென்பான். (௪௧)

கடல்கடைந்தெழுந்தநஞ்சாற்காலெனப்பெயர்ந்துமீண்டெம்
மடிகளோசரணமென்றுவடைக்கலம்புக்கவொண்கேழ்
நெடுமுடியமரர்க்கெல்லாநின்மலன்விடவேகத்தின்
கொடுமையைமுழுதாங்காற்றிக்குளிர்வித்தமாலுமாலே. (௪௨)

சுந்தரமுடியிற்றிங்கட்டுணிபடுமமிழ்தந்தன்னால்
வெந்ததோரிருந்தைபோலுமெய்யெலாங்குளிர்வித்தங்கு
முந்துறத்தொழுதுநிற்பப்பணித்தனனந்தமொய்ம்பாற
சந்திரகண்டமாயதப்பெருந்தானமாதோ. (௪௩)

கச்சணிமுலையாள்பங்கன்கழலிணைப்பூசையாற்றிக்
கச்சபவடிவுநீங்கிக்கார்முகில்வண்ணன்மேனாட்
கச்சமிலின்பந்துய்த்துக்களித்தன்றதனாலே
கச்சபாலயமென்றோர்பேர்பெற்றதக்கடவுட்டானம். (௪௪)

அத்திருவரைப்பிற்றீர்த்தமருடருங்கச்சபேச
வுத்தமன்பூசையாற்றுமோகிமர்கடவுளாடிச்
சித்திகள்பெறலாலிட்டசித்தியென்றுயதின்று
முத்தியோடிட்டசித்திமுகிழ்த்திடுமாடுவோர்க்கே. (௪௫)

தாழ்ந்தவரொழுமுன்றாழ்ந்தோர்தங்களாலீட்டும்பாவம்
வீழ்ந்துபோயணங்கச்செய்யும்விரதகனகச்சபேசத்
தாழ்ந்தனன்குறைதீர்ப்பாளருட்குறிவேறுண்டாக்கி
வாழ்ந்தமாந்தாதாவென்பான்வழிபட்டான்வருந்தாச்சொல்வாம். (௪௬)

இரவிதன்வழியின்வந்தானிகல்கடிந்திலங்கும்வேலான்
பரவியபுகழான்வையம்பரித்தபுயத்தின்வைத்தான்
கரவினைக்கரக்குநீரான்காமர்மாந்தாதாவென்று
மன்னனோர்தினத்திராவினமளியிற் * கனவுற்றானே. (௪௭)

விடிந்தபினறநீராடிவிதியுளிக்கருமமுற்றி
மடந்தபுரூரவனைவசிட்டனைக்கூவியையவர்க்
கடந்தமாதவனேயான்மன்கனவியகனவைக்கேளென்
றடர்ந்தெழுமார்வம்பொங்கவன்னவைக்கூறலுற்றான். (௪௮)

வேறு.

வையகமும்மையும்வந்துதாழ்தொறு
மையமோலியின்மணியழுத்திக்தேய்த்தலா
லொய்யெனத்தழும்பியதழும்பினோடுபூஞ்
செய்யதாமரையெனச்சிவந்ததாளினான். (௪௯)

அரியினையெதிரினுமதிர்ப்பத்தாக்குறுஞ்
சொரிமதக்களிறுதேர்துரகந்தானையோ
டிரியல்கண்டனையனையிரங்கத்தாண்மிசை
வரிகயிறகழலொடுவயங்குஞ்செவ்வியான் (௫௦)

---

* கனவல் - கனாக்காண்டல்.

மெல்லிழைப்பட்டுடைவிரித்துடுத்துமேல்
வல்லுறவீக்கியமணிக்கச்சுடுசோத்
தெல்லுமிழசரிகையானேந்தகட்டினிற்
கல்லணியுதரபந்தனங்கொள்காட்சியான். (௫௧)

சந்தனங்கலவைகடைந்துதண்பனிக்
கந்தநீரொழுக்கிமேற்கமழுநதாதநீஇச்
சுந்தரமணிவடந்துலங்கிவெற்பென
மைந்தமைந்தகன்றபோர்மலைந்தமார்பினான். (௫௨)

பொன்னையுந்துகிலையும்பொருவில்பண்டமோ
டென்னவுமிரப்பவர்க்கீந்துசேப்புறீஇத்
தன்னுடைத்தாளினிறமுழ்வதல்லதோர்
மன்னடிதாழ்கலாமலர்ந்தகையினான். (௫௩)

அளவறுவீரர்களெறிந்தவாய்தழு
மிளமயிலனையவரொண்ணிலாவொலா
முளமகிழ்வுடனெறியொண்கணாய்தழுந்
துளைபடவுருவியதொங்கறோளினான். (௫௪)

அடைந்தவர்க்கமிழ்துமாருயிருமாயடி
யிடைந்தவர்க்காலமுமெரியுமாகிய
சுடர்ந்தசெந்தாமரைத்துணையுங்கண்ணினான்
மடந்தையருயிருணும்வதனத்திங்களான். (௫௫)

ஒளிர்கதிர்பிலிற்றுமொன்பதிற்றுக்கோள்களுந்
தனையுறுத்தியதெனத்தயங்குபன்மணி
யளவறுவிலையினவமைத்திழைத்ததோர்
வளமலியொருமுடிவயங்குசென்னியான். (௫௬)

அற்புதவுருவினானலகில்சீர்த்தியான்
றற்பணியுலகெலாந * தவிர்ந்ததேசினான்
பற்பலதீமையும்பரிந்தபண்பினான்
பொற்பமர்திருவெலாம்பொலிந்தசீரினான். (௫௭)

இன்னவன்வரவிறும்பூதுபூத்துளே
னன்னவன்யாவனீயறைதியென்றலுங்
கன்னலையமிழ்தொடுகலந்திட்டாலென
மன்னவன்மகிழ்வுறவசிட்டன்கூறுவான். (௫௮)

வேறு.

உரவுமணிக்கடலாடையொருமகளைப்புணர்ந்தோய்கேள்
பரவுபுகழ்நினைத்தரும்பூபதியுவனாசுவனென்பான்
விரவுமொருகுடைநிழற்கீழ்மேதினியெலாங்குளிர
விரவகற்றிக்குடியோம்பியினிதிருக்குமந்நாளின். (௫௯)

---

* தவிர்தல் - தங்குதல்.

வேறு.

குலத்திலன்றிநின்னைக்கொடுத்துயிர்விளிதலானு
நலத்திறுயர்ந்தநுந்தைநகைவலம்புரியையொத்தா
னிலத்திடையரசர்சென்னிமித்தலுமிதித்தநீயும்
வலத்தினினுயர்தலானும்வலம்புரிமணியையொத்தாய். (௬௯)

அற்றைநாளண்டம்விள்ளவழுதனையதுகேட்டங்க
ணுற்றயன்பதினுருட்டைப்பருவநிறகுதவிப்போகக்
கொற்றமார்குலிசத்தோன்றல்குறுகிநிற்காப்பார்யாரோ
தெற்றெனமொழிமோவென்றுசெப்பலுநதாதாவென்றாய. (௭0)

ஆதலின்மாந்தாதாவென்றறைதரப்பட்டுஞாலந
தீதறுசெங்கோலோச்சிச்செல்வனுயவாழுநினனைத
தாதையுந்தாயுந்தானேயாகிநிறறநதவேநதன
காதலிற்காணப்போந்தான்காண்டியென்றியம்பிப்பினனும். (௭௧)

ஐயனேநுந்தைமார்பமசமூகநதுநீபிறந்தநீரா
னையதியவெய்யபாவமிரிததிடுங்கழுவாய்வாய்ப்பப்
பொய்யறுமேனமைசான்றபுண்ணியவரைப்பிறபோநது
செய்யபொறசடையானபூசைசெய்திடவேண்டுமென்றான். (௭௨)

என்றுடைகுரவநன்றேயியம்பினையெறிநீர்க்கங்கைப்
பொனனவிாசடையான்பூசைபோறறுதற்குரியாயாவ
ரனனவனபூசையெநதவாறறினுறறபுரிவதெனறு
மன்னவன்கடாவவாசான்மயரறவிறுக்குமன்றே. (௭௩)

பரவுமானமார்த்தமோடுபரார்த்தமென்றிரண்டாம்பூசை
மருவியெல்லாருஞ்செய்தறகுரியதான்மார்த்தபூசை
யிருமையுமுரியவாகுமெழிறசிவதீக்கைசேர்விப
பிராதமக்காகமங்கள்பேணுறும்வழியாலென்றான். (௭௪)

இன்னணம்விதந்துகூறுங்குரவனையிறைஞ்சியேததி
யன்னணம்பூசையாறறுமாாவஞ்செனறீாபபவேகி
மின்னணங்கெழிலரிசாமாடவியனறிருககாஞ்சிமூதூர்ப்
பொன்னணங்கிவருந்தோளான்புகுந்தனனமகிழ்ச்சிபூப்ப. (௭௫)

அந்தணர்பயின்றுவாழுவம்பொன்மாளிகைகளாக்கிக்
கந்தமார்தடங்கடொட்டுக்கடிமலாப்பொதும்பர்வைத்துப்
பந்தநோயறுக்குமுக்கட்பரன்பணிபலவுமாற்றுஞ்
சிந்தையினுவகைபொங்கத்திருத்தகமுடித்தபின்னர். (௭௬)

இட்டசித்தியினீராடியெம்பிரான்கச்சபேசத்
தெட்டுருவுடையபெம்மானிலிங்கமொன்றிருவியங்க
ணுட்டவழார்வம்பொங்கவுறமுறைவழாதுபூசை
பெட்டனனியற்றிக்கண்ணீர்பெருக்கினன்பழிச்சினின்றான். (௭௭)

ஆயிடைவானிலண்ணலருளினோர்வாக்குறந்தை
தூயவான்றுறக்கம்புக்கான்றுகளறுபயனீபெற்றாய்
காயும்வேலரசவென்றுகாதுறவெழுதலோடு
நாயகன்கருணைபோற்றிநயததகுவாழ்க்கைபெற்றான். (௭௮)

இவ்வகையின்னுமாங்கணெண்ணிலவரங்கள்பெற்றோ
ரவ்வெலாமுற்றக்கூறலெம்மனோராலைத்தேயோ
வெவ்வநோய்ப்பிறவிநூறுமித்தகுமநதர்வேந்தித்
தெய்வதவரைப்பின்வைகப்பெறுநரோசிவத்தைச்சேர்வார். (௭௯)

ஒளிவளரநதர்வேறிச்சிறப்பெடுத்துரைத்தல்செய்தாங்
களியுறுதண்டவேந்தாறகானமாங்காருஷிதனனை
தெளிமதியணிநதவேணிச்சிவனருளாயர்தீர்ந்து
வளர்கலிகாலனமுன்போல்வளநகராக்கலசொலவாம். (௮௰)

அநதருவேதிபபடல முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௭௮௰.

---

## ௪௰ நகரோற்றுப்படலம்.

ஆறுசூடியவேணிநாதராமநதகச்சிநகர்தநலை
வீறுதோறறவதிந புகாவல்விளைததவேநதர்களெண்ணிலார்
கூறுமன்னவர்தம்முளோர்குலமனனவனருவகாரதமை
யீறுசெயதிடுதண்டனென்பவனேகவானைசெலுததுநாள. (௧)

ஒருதினந்தனில்வேட்டையாடியவுன்னியில்வயினமுற றுறுங்
கருமநன்குமுடித்தபினபுகடழ்நதவுண்டிநுகர்நதபூ
மருநிலாவியகுஞ்சியம்பொன்மணிக்கயிற்றினிறுக்கியாத்
துரையின்வாசுடர்க்கச்சுவீக்கியடிகளிருங்கழல்சேர்த்தனன. (௨)

வில்லுமம்புமிலங்குவேலுமிளிர்ந்தவாள்களுமாழியு
மொல்லையோடியொறுக்குநாயுமவலைக்குலங்களுமார்தியம்
பல்லியங்களுமெல்லையில்லனபௌவமென்னவளாநதுற
வல்லியம்புரைமன்னராதியர்வநதுவாய்தனெரிந்தனர். (௩)

வேதவேதியரங்கையாம்விரைசூழ்ந்தகஞ்சம்விரிந்திடச்
சோதிநீண்முடியேந்துவேநதர்துணைக்கைமாமலர்கூம்பிட
மாதரானனவம்புயங்கண்மலர்ந்துநாணிவணங்கிடப
போதுவெங்கணையாளிநெஞ்சுபுழுங்குபொற்பினனேகுவான. (௪)

ஒருதிசைக்கடலொருதிசைக்கடலோடுசேர்குவதொப்புறக
கரிசறுத்திடுகாஞ்சிமாநகர்கடிதுநீங்கியொர்கானினை
யரசர்சூழ்தருதண்டனேகியதன்புறத்தினிலெங்கணும்
புரசைமால்கரிதேர்கண்மறறுமிரீஇப்புகுந்தனனுள்ளரோ. (௫)

செற்றிமான்குலம்வைகுமெல்லைதெரிந்துவம்பினெனச்சொலி
யொற்றர்தம்மைவிடுப்பவன்னவரோடியெங்கணுநோக்கிவந்
தற்றமின்றியுறந்தசூழலுரைப்பவவ்வழியேகினான்
வெற்றிவாசிலைநாரியேறினன்வெய்யவாளிதெரிந்தனன். (௬)

கலைகளாதிகிரணடுசெற்றியகானமுற்றியடுத்தனர்
வலைவளாவினரோடியெறிந்தனர்வாரொழுக்கினரோய்யெனக்
குலைகுலாவுசுணங்கனேவினர்குழையியங்களியம்பினார்
சிலைவலாருருமென்னவார்த்தனர்சென்றுமாக்களெழுப்பினார். (௭)

மானெழுந்தனவல்லியங்கண்மறங்கொதிப்பவெழுந்தன
யானைபாய்ந்தனவெண்குமாய்ந்தனயாளிபாய்ந்தனவாப்பொடு
கானமேதிபெயர்ந்தபலகவயங்கன்றுபெயர்ந்தன
வேழமாக்களுமெங்குமெங்குமெழுந்தெழுந்துகுதித்தன. (௮)

வில்வளைத்தனர்வாளிதொட்டனர்வேலெறிந்தனர்கூற்றெனப்
பல்வகுப்புழைசூலமோகினார்பாசம்வீசினர்பற்பல
மல்வளைகருலம்வாங்கிவிட்டனர்வச்சிரத்தடியோச்சினார்
சொல்விளைத்திடுவாள்கள்கொண்டுதுணிக்கலுற்றனர்மீளிகள். (௯)

கால்குறைப்பனசென்னியீர்வனகாதிறுப்பனநீண்டுதாழ்
வால்குறைப்பனகண்கள்கூல்வனமாபுகீழ்வனவளைமைசா
ரேல்கிழிப்பனதுண்டம்வீழப்பனசோரிவீழ்ப்பனதுண்ணென
மேலெழுந்துகுதிக்குமாககளின்மீளியோர்விடுமாய்தமே. (௧0)

இரிந்துவீழ்வனசீறிமுன்னொதிர்ந்துவீழ்வனவோவெனப்
பரிந்துவீழ்வனவாடிவீழ்வனபாய்ந்துவீழ்வனகண்ணிலீர்
சொரிந்துவீழ்வனவேங்கிவீழ்வனசுற்றிவீழ்வனநீள்குடர்
சரிந்துவீழ்வனமீளியாய்தமடர்ந்துசாடியமானினம். (௧௧)

வாலடித்துமயங்கிமாய்வனவாய்பிளந்துயிர்மாய்வன
காலுதைந்துகறங்கிமாய்வனகண்சுழன்றுயிர்மாய்வன
சாலநாக்கள்கடித்துமாய்வனதலைதிரிந்துயிர்மாய்வன
கோலமெய்கள்பதைத்துமாய்வனகுன்றிமண்விழுமாக்களே. (௧௨)

வேறு.

பல்லியமெங்குமொலித்திடப்பற்பலநாய்கள்வளைத்திட
வில்லிடைமீளிகளெய்தகோனமெய்யுருவுஞ்சிலமாக்குல
மொல்லையெதிர்ப்படுதம்மினதொன்றனையொன்றிதுவேகொலா
மல்லல்விளைத்ததெனச்சினவடலொடுபற்றியடர்ப்பன. (௧௩)

மருண்டெழுஞ்சினறவயப்புலிவந்தெதிர்மான்கலைவளைவில
வெருண்டெழுசிங்கமதக்கயம்வீத்திலவேணவுமின்னவே
தெருண்டொருமும்மைமலங்களுஞ்சீறியமாதவரொத்தன
விருண்டுவளம்படுகானிடையிரிதருமத்தகுமாக்குலம். (௧௪)

அம்புதைவெம்புலிதம்மெதிரார்ந்தசிலுத்தநெடுந்தருத்
தம்பழமீமானிடநேர்வதுதன்னைமுன்னோக்கியலைத்திடும்
வெம்பகைமானிடர்போன்மெனவெருண்டுபுடைத்துநிலத்தினிற்
பம்பவுகுத்துயிரோய்யெனப்பாறுவவெங்கணுமெங்கணும். (௧௫)

கைம்மலிவேடுவளர்த்திடுங்காளையர்வாளிதுளைத்தலு
மொய்ம்மகண்மாக்குலமையெனமூர்ச்சனையாயினசேணிடை
மெய்ம்மலிசோரியலைததெழவீழ்வனகண்டுவளைத்துவாழ்
மைம்மலிகண்ணியரோவெனமாழ்கியிரங்குகினார்சிலர். (௧௬)

உளியமுமேதியும்யானையுமுருமொலிசெயகருமான்களு
நெளியநெடுங்கணைகீழ்ந்தபுண்ணெருப்புறழ்சோரிநிலத்துக
வளியினிரிந்துசுழாங்கொடுமண்டியதிர்ப்பனகோன்றிரு
விளியதுகாட்டுநெய்த்தோர்மழைவீசுமுகிறகுலமொத்தன. (௧௭)

வலையறநூறிவிரைந்துசெல்வன்றிகண்மன்னவனேவிய
கொலைசெழுவாளிதுளைத்தவீழ்கொள்கைசமாதகுலத்தவர்க்
குலைவுறுபேரிடருற்றுழித்தம்முயிருய்த்திறநாடுவோ
ரலைகடல்வைப்பினிலொய்யெனவழிவுறுபெற்றிதெளிக்குமால். (௧௮)

அரசெனவோர்பெயர்பெற்றதனரியசெயற்கையையுந்தொழிற்
புரவுசெயாதவிலங்கெலாம்பொன்றவிளித்துநுகர்ந்திடும்
பரிசுநினைந்துவெகுண்டெனப்பாழியிரும்புயமன்னவன்
விரவுமடங்கலனைத்தையும்வெங்கணைதூண்டியிறுத்தனன். (௧௯)

கவளமளித்துயிர்போற்றமைக்காத்தருள்பாகனையுங்கொலுந்
தவறினவென்றுமுனிந்தெனத்தந்தியனைத்துமடித்தன
னிவறிமறைந்துவதிந்துபாய்ந்தெவ்வெவையுங்கொலைசெய்துணு
மவமுறுவீரம்வெறுத்தெனவடல்கெழுவேங்கைசெகுத்தனன். (௨௰)

இன்பமளிப்பனபோலுடலெங்கணுநக்கியிறும்படி
துன்பமளிப்பனவாமெனச்சூழ்கவயங்கடுமைத்தனன்
வன்பினிறுங்கொலையேபுரிமறலியினூர்தியினங்களென்
றன்பறவன்கருமேதிகளாவியழுங்கவிளித்தனன். (௨௧)

மேலுமருந்திறல்வேட்டையின்மேயினனுடைவிலங்குகள்
சாலவுயிர்க்கும்வித்தாகெனத்தப்பவிடுப்பதுபோற்கமஞ்
சூலுடைப்பன்மிருகங்களுஞ்சூழிளம்பருவத்தவு
மாலுறுநோயுடைமாக்களும்வனகொலைசெய்திலன்விட்டனன். (௨௨)

வேறு.

இன்னவாறுவளர்ந்தெழுவேட்டைமுடித்தபின்
மன்னர்மன்னன்வளம்பதிக்கெய்தியவெண்ணிரு
ணன்னவேட்டையினாடியிளைத்தவயர்ப்பினாற்
றுன்னிநீர்வேட்கைமிக்குவருத்தந்துவன்றினான். (௨௩)

வேட்டைமீதிலெழுந்தமறக்கனல்வெய்தெனக்
கூட்டுண்டாலெனநாவினினூறுகுளிர்ச்சியும்
வாட்டமுற்றதுவாயும்வறன்றதுவாலொளி
யீட்டுமூரல்கரிந்தகுழிந்தன்வேர்விழி. (௨௪)

திருந்துநீர்நசைகண்டவர்சிற்சிலர்திக்கெலா
மிரிந்துதேடினரீர்ம்புனல்காணலர்மீண்டனர்
வருந்துவேந்தனுமென்மெலவேகுழிமாதவம்
பொருந்துபார்க்கவனன்முநிவைகிடம்புக்கனன். (௨௫)

ஆயகாலையருங்குசையாதிகொணர்ந்துறப்
போயமாதவன்மீண்டிலனாகப்பொலங்கொடித்
தூயபன்னிவிருந்துமனொந்துதொருத்தனை
மேயமன்னனுயங்குவருந்தநமவிளிந்ததே. (௨௬)

தேமொழிக்குயிலன்னவள்செய்தவிருந்தினு
ளூமநீர்நசைநீங்கியபின்புவிநாயகன
ரூமநீலகுழல்கட்டெழில்கண்மலர்சாத்தினான்
காமநீர்நசையுள்ளங்கவற்றவெதும்புவாள். (௨௭)

வேறு.

பற்பலவைகறோறும்பருகிடப்பட்டுவிம்மித்
தற்பெருவயிறுவாட்டதரிக்கிலதாகிச்சீதப்
பொற்பமர்வதனதிங்கள்பொருக்கெனவெளிக்கான்றிட்ட
விற்பொலியிருளேயென்னவிளங்கியகுழலின்சீரும். (௨௮)

வெருள்படந்தன்னைநாளும்விளித்திடும்பகைமைநோக்கி
யிருளினந்தொடர்ந்துதாக்கவிளம்பிறைக்குழவியோடிப்
பொருள்படுதனக்குத்தாயாம்புணரியிற்சேறலேயப்பச்
சுருள்படுகுழலகணுப்பட்சுடர்ந்தவாணுதலின்சீரும். (௨௯)

போக்குறுபுரிசைமூன்றும்பொடிபடுத்தருளும்பெம்மான்
தீக்கொடும்பகழிகோப்பவாசுகித்திருநாண்வீக்கு
மேக்குயரிமயவில்லுநாணுறவிழிகளென்று
மேக்குலநாணின்றெய்யும்புருவவில்லிலங்குசீரும். (௩௦)

பொருந்துபோர்க்களத்திறபோந்தும்பொருவலார்விலக்கித்தப்பும்
பெருந்தவருடையவாளிபீடறவாவந்தூங்க
விருந்துழியிருந்தவாறேயிளைஞர்தம்முயிரைத்தப்பா
தருந்திமீட்டுமிழாவாகுமயில்விழிக்கணையின்சீரும். (௩௧)

தொழினனிதிருந்தும்வண்ணஞ்சுடர்ந்துவில்லுமிழ்பொன்மாலை
கழிநிறக்குமிழம்பூமுன்னர்ப்படைத்துக்கைபழகிப்பின்னர்
வழிமதுப்பிலிற்றிச்சேர்க்கும்வட்டவாய்க்கமலப்புத்தே
ளிழிவறவருந்திச்செய்தவெழில்குலாமூக்கின்சீரும். (௩௨)

சேயிதழ்த்துவருமூற்றெள்ளொளிமணியுஞ்செவ்வாய்ப்
பாயிதழாம்பற்போதும்படர்விழிக்குவளைபூவு
மாயிருங்குழைசேர்காதுவள்ளையுங்கவினபூத்த
தோயுநீர்நிலையேயெனனச்சுடர்கவுட்டுணையின்சீரும். (௩௩)

எண்ணிலாருயிருமுண்ணப்பட்டுறைவிடமாமாறாற்
கண்ணெனவொருபேர்வாய்ந்தகடுங்கொலைவிழிவேலோடி
விண்ணுமழியாவண்ணம்வெய்யகூர்முகத்திலிட்ட
திண்ணியதடையாய்வைதநதேசிகச்செவியின்சீரும். (௩௪)

வளங்கெழுகூநதலெனனும்வார்மணிக்கலாபமின்ன
வுளங்கவர்பன்னியென்னவொளிர்ந்தபூம்பசியமஞ்ஞை
துளங்குறுகுலிகப்பட்டின்றுணிநிகாகோபம்வவ்வி
விளங்கியாங்கழகுபூததுகிலவிடுமதரச்சீரும். (௩௫)

ஒள்ளியவதனத்திங்களுடனமர்கலவியாறுறுங்
களிவர்குமுதமென்னக்கதிர்ததவாயமுதுந்திங்கட்
டெள்ளியவமிழ்தநதுள்ளிதெறிதநயீழ்நிவலையாம்ப
னளமிடைவிறநதாலன்னநகைமணியொளிருஞ்சீரும். (௩௬)

பெற்றவர்குணங்கடத்தம்பிள்ளைபால்விரவுமென்று
மற்றமிலுரைவாயாகவமிழ்தொடுநஞ்சுகாலு
மெறறுநீர்த்தாங்கவேலையினறெழுவதனைத்திங்கள்
சொற்றனியமிழ்தோடுணைகட்சுடுவிடங்கொழிக்குஞ்சீரும். (௩௭)

இளிவருயோனியாக்கையிறையிடத்திருப்பநாணித
தெளிதிதிகழ்கஞ்சமீண்டுசதிருமுகமெனனமாறி
யொளிதரவளையுமவ்வாறுணர்ந்ததனருகுபோநது
களிவருசிறப்பின்வைகியனையவொண்கழுத்தின்சீரும். (௩௮)

முக்கணனெரித்தஞான்றுமுனைததவேளகொடியிலேறறு
மிக்கசீர்மகரமீனும்வெஞ்சிலைக்கரும்புநதப்பித
தொக்கசீரிவள்பாறசேமததுணையொடுஞ்சரணமாகப்
புக்கினிதமர்நதாலெனனக்கூர்ப்பரம்புயத்தினசீரும். (௩௯)

ஆதனமாகிநாளுமயன்றனைப்பரிந்தாந்திங்கட்
கேதமுறறஃகாவண்ணமீநதிலனென்றுநீததுப்
பேதைதனகரமாய்க்கஞ்சம்பெருந்தவப்பணிகளாற்றி
மாதர்வெண்மதிக்குக்கூம்பாவளமைபெறறிலகுஞ்சீரும். (௪0)

கயத்திலுளெழுந்துபூத்தகடிமலர்க்கமலந்தாமே
வியத்தகுகரங்களனைறுவிழைதகவிளக்கவந்தப
பயத்துறுகளிறறுமீன்கள்பததியிறசெறிநதுநின்று
நயத்தகவிளங்கியாங்குநலங்கெழுவிரலின்சீரும். (௪௧)

அதிர்த்துவண்டுளருங்கூந்தலரக்கெறியரிக்கட்பன்னி
யெதிர்த்துவந்திசைவாதாடுமிருங்கிளிவாயைப்பற்றி
விதிர்த்திடவொடித்தவென்றவெற்றியைத்தெரிப்பான்கையிற்
கதிர்த்தநீள்விரல்வைத்தென்னக்கவினியவுகிரின்சீரும். (௪௨)

வண்சிறைச்சகோரப்புட்போனமதியமிழ்துண்ணவேட்டுத்
தண்செறிவதனநோக்கிச்சந்திரனெனக்கீழெய்தி
யொண்சிறைநேமிப்புள்ளுந்துணையொடுமுறைவதேய்ப்பக்
கண்செறிதலைமேனோக்கிக்கதிர்த்தபூண்முலையின்சீரும். (௪௩)

மாலினைச்சுமக்கலாற்றாதுடைந்தெனவடமுநீம்பால்
வேலைவார்திரையுமின்னுண்மடிவளைவயிறுய்மேவி
யாலியவனப்புமன்னேனஃதறிந்தணைந்தவற்றின்
மேலவிழ்வளர்ந்தகாட்சிவீழுமயிரொழுங்கின்சீரும். (௪௪)

கவினதிநீத்தம்வீசங்கதிர்த்திரைமடிகளாகக்
குவிமுலைமொக்குளாகக்கொட்புறுசுழியிற்றோன்றிப்
புவிநிறையுயிரையெல்லாம்புகுத்தினுநூர்த்தல்செல்லா
திவறிவிண்ணுயிரும்வாங்கவிடங்கொளுமுந்திச்சீரும். (௪௫)

முடிமுலைமுரசமல்குன்முழுக்குடைமுகம்வில்வார்த்தை
வடிகணைமேனிகைநான்மதர்விழிநகைமால்யானை
நெடியபூங்கூந்தலாக்கிநெடுந்தகைப்பெருமாறகஞ்சிக்
கொடியவேளுருவுமாறுங்கொள்கைநேர்மருங்குற்சீரும். (௪௬)

அடர்சிறைப்பசியமஞ்ஞைபச்சமுற்றணுகல்செல்லா
விடமிதென்றியலுநாசியெனப்படுங்காமரூபி
வடிவமுநோக்கியங்கண்வாளராக்கவர்ச்சியினறிப்
படம்விரித்தமர்ந்தகாட்சிபடைத்தகலல்குற்சீரும். (௪௭)

கொழுமடனமலர்களார்ந்தகொடியகம்புரையுமல்குல்
வழிமதக்களிநல்யானைமதகத்தியாறும்வேதன
செழுவுமத்தகத்துக்கேயந்திரண்மணிக்கரமுமாங்குப்
பழுதறவகுத்தாலன்னபடரொளிக்குறங்கின்சீரும். (௪௮)

கலம்படுபர்வையல்குற்கதிர்மணிப்பணியையஞ்சி
நலம்படுதன்பாற்றஞ்சநண்ணியகலைக்காலென்னுங்
குலம்படுவரான்மேற்பாந்தள்குறுகிடிற்றணிப்பவுன்னி
வலம்படுமலவன்முன்னுய்வதிற்றெனமுழந்தாட்சீரும். (௪௯)

வேட்டவர்முடியிலேறுமென்மையாணிகர்க்குமேனும்
பாட்டளிமூசியூறுபடுத்திடவாடலானு
நாட்டங்கள்புதைக்குங்கங்குனைகைமுகங்கூம்பலானுந்
தோட்டலர்க்கமலந்தாழ்க்குந்தணையடிக்கமலச்சீரும். (௫௦)

விழைந்தவிப்பிழையானீயிர்விழைந்துறைகாஞ்சிவைப்பு
மளந்தறிவருஞ்சீர்த்தீர்த்தஞ்சிவாலயமன்றியெல்லாம்
வளர்ந்தபநெடுநாட்காடாய்மன்னுமற்றதனைக்காப்பா
னிளந்தனித்திங்கள்சூடுமெம்பிரானருளினாலே. (௬0)

விறற்கலிகாலன்சோணாட்டவதரித்தீண்டுமேவுந்
திறற்படையவனைக்காணிற்றீருமிச்சாபமென்றவ்
வறப்பெருமுனிவனில்லாளொரியுடனங்கணீங்கி
யுறற்கரும்பனிசூழ்பொற்கோட்டோங்கலையடைந்தானன்றே. (௬௧)

வலியினாற்பிறர்தாரத்தைவவ்வினரும்மையிம்மை
யலியுருவாவவொன்றும்பழமொழியவலங்கூரப்
பொலிவுறுமற்றைநாளேயலியுருப்பூண்டான்மன்ன
னலிவுசெய்வேடயாக்கைநண்ணினானமைச்சன்மன்றோ. (௬௨)

வேள்வியுந்தவமுநூயவிருந்துமீகையுமேதக்க
கேள்வியுந்திருவும்வாய்மைக்கிளர்ச்சியுநன்மைசான்ற
தாள்வினைத்திறமுமென்றுநதனைப்புறுக்காருமிரானு
நீள்வினைப்பொதும்பர்மல்குநெடுவனமாயிற்றம்மா. (௬௩)

வேறு.

கடியிணங்கியகாவுங்கமலவாவிகண்முற்றும்
படருமொண்புனல்யாறும்பரவைவெண்மணற்குன்றுங்
கொடியிணங்கியமாடக்குமரிமேனிலைவைப்பு
மடமடந்தையராடும்வளமொடுங்கினமாதோ. (௬௪)

பந்தமீர்கலைதேரும்பட்டிமண்டபமோடு
முந்தவானவர்வைகுமூரிமண்டபமன்ன
ரந்திநண்பகல்காலையமருமண்டபமெங்கு
மைந்தராண்மிநெருங்கும்வனப்பிறந்தனமன்றே. (௬௫)

பாடலோம்பினமாதர்பண்பினாடவர்தம்மோ
டேடலோம்பினவவருமுருகியநதடிதாழ்ந்து
கூடலோம்பினகூடுங்கோதிலின்பப்பெருக்கி
னீடலோம்பினவெங்குநிரந்தபள்ளியிடங்கள். (௬௬)

அட்டில்வாய்ப்புகைவீந்தவரிவைமார்குழலேற்று
மட்டுலாம்புகைவீந்தமாடமாளிகையூட்டி
முட்டிவார்புகைவீந்தமுறையினாகுதிச்செந்தீப்
பட்டபூம்புகைவீந்தபைம்பொன்மாமனையெங்கும். (௬௭)

வரவெதிர்ப்பவர்மாண்பும்வரைவுசெய்பவர்மாண்பும்
புரவுபூணுநர்மாண்பும்புகழ்விளைக்குநர்மாண்பு
மிரவுதிர்ப்பவர்மாண்புமியலுமாதவர்மாண்பும்
பரவுபத்திமைமாண்பும்பலவுமாறினமன்றே. (௬௮)

விழாவிழுந்தன தக்கைவெம்புதணெலுவுமைபம்பை
முழாவிழுந்தனதேவர்முனிவர்மாநுடர்கூடுங்
குழாமிழுந்தனசின்னங்கோடுதீங்குழல்வீணை
யெழாலிழுந்தனவென்பமறுகுவீதிகளெல்லாம். (௬௯)

வேதமோதுநயப்பும்வேள்விநல்வினையாற்றி
யேதமீருநயப்புமிறைவனின்னருள்கூருங்
காதைகேட்குநயப்புங்கண்ணுதற்பெருமான்பொற்
பாதமேத்துநயப்பும்பரிந்தவேதியர்வீதி. (௭௦

வெற்றியானைகள்போரின்வெருவாழூட்டுமவனப்பும
பொற்றநீண்மணித்தேர்கள்பொருதவுந்துவனப்புங்
கற்றவைங்கதிமாகங்கள்கலாம்விளைக்குமவனப்பு
மற்றுமற்றனவீரமன்னர்வாழ்மணிவீதி. (௭௧)

மதலையிற்பொருள்வாய்ச்சவாங்குமோனதவிப்பபு
மெதிரிரும்பொருள்வகைமேற்றியயக்கும்வியப்பும்
பதியினுள்ளவர்கொள்ளப்பாத்துவிற்கும்வியப்பு
கதுவமற்றைவியப்புங்சமூண்டாயாசாவெருக்குள. (௭௨)

பகடுபோற்றுமிசைப்பும்பண்ணையிறவொலிபைங்கூ
ழகடுவாய்ந்தமகத்திறுகசமன்பும்விராகி
னிகலில்காட்சியர்சமைபீவிதுபேறுளுற்றப்பு
மகலநீங்கினபினோர்மர்நதுவாழ்திருவீதி. (௭௩)

வேறு.

வெண்ணிலாவிளம்பசம்பிறைச்சுழவிபின்விரிசடாய்ச்சடைக்கமறை
யண்ணலாருமையுடனமாகச்சிமாநகாவயினமாகினறே
ருண்ணிலாஞ்சிவமுறுவதோரநதாயிடைத்தானுமோர்தவமாற்ற
நண்ணிறுலெனவெழுநதநுவிலைருலாய்நறைபொழிமூதுகானம். (௭௪)

கடுத்துழாவியகருமிடற்றிறைவர்கங்கழற்றெழுபெருங்காத
ருடுத்தகொள்கையினிததலுங்சாஞ்சியர்தொல்லைமாநகாவாழக்கை
விடுத்திடாதமால்செயலறிந்தவன்றனிதசெயவதமெனமேரி
யடுத்ததாளுமங்கணைந்ததேபோலுமிககடாநநெழுபெருங்கானம். (௭௫)

எழுந்ததம்வலிகாளியாலமுங்குவித்திடுதலினிகல்கொண்டு
கொழுந்துவெண்மதிமிலைசினர்திருநகர்தலைப்பமீட்டிடனரோங்கி
யழுந்துபட்டபல்கடல்களும்வளைந்தருமாறும்பன்னிறப்போதும்
விழுந்துவண்டினமுழக்கவாய்விள்ளமேனிமிர்நதெழுகருங்கானம். (௭௬)

கரிதிளைத்துவாழிடநதொறுங்கரிகளேகருதலர்சிரங்கோட்டும்
பரிதிளைத்துவாழிடநதொறும்பரிகளேபயிலியகலைக்கோட்டுப்
பெரியமேதிவாழிடந்தொறுமேதியேபிறங்கிவாழ்ந்தனவம்மா
வுரியதத்தமதினம்பயிலிடமெனவுறவுகொண்டிடுமாயோல். (௭௭)

அரசுவீற்றிருந்தாண்டமாளிகைதொறுமரசுவீற்றிருந்தாளுங்
கரிசில்காட்சியிற்கணிகள்வாழிடந்தொறுங்கணிகளெண்ணிலவாழுந்
துரைபராவுசீர்த்தளிதொறுஞ்சம்புவைச்சம்புவேதொழுதேத்தும்
விரிதழாயணியரிபயிலிடந்தொறுமரியினம்விராய்ப்போற்றும். (௭௮)

கொடிநிரைபொழூர்சாடுகோபுரந்தொறுங்கொடிநிலாயசைந்தாடுந்
தொடருமன்பர்மெய்ப்பணிவளரிடந்தொறுஞ்சுடர்மணிப்பணிவாழும்
விடுகதிர்ப்பொலங்காஞ்சிவைப்பிடந்தொறும்விளைத்தகாஞ்சிகணீடும்
படருமம்புலிதவழுமேடைகடொறும்பாயுமம்புலிமல்கும். (௭௯)

இருண்டகார்விடமயின்றவர்க்கலரொடுர்த்தவயாவருமின்மை
தெருண்டுசாங்களையுசவவானனைதெனச்சிவபிரான்றளிச்சுற்றி
னுருண்டகாய்ப்பசுங்கூவிளமுல்லையொண்குமிழ்மகிழ்வழைகூந்தன்
மருண்டதீங்கனிக்கொன்றையாதிகளெலாமன்னிநின்றலருழ்க்கும். (௮0)

தங்கண்மெய்ப்படுமுறுப்பினைமேதகத்தழீஇயதுநனைநோக்கிப்
பொங்குநட்புமேல்கொண்டணைநராலெனப்பொருவிலாவணந்தோறுங்
கொங்குவிம்முபூங்குங்குமஞ்சந்தனங்கோழலாயகில்வாச
மெங்குமொய்த்தெழுங்கப்பூரமிலவங்கமேலமாதிகளூழும். (௮௧)

காடெலாமரசாட்சிசெய்தாமரைக்கண்ணனைப்புரக்கானு
நீடுதோரணம்வைத்தெனநிரைபடநிலீஇயபன்மாநதோறு
மூடுபோந்திணர்ப்பசுங்கொடிபடருமவ்வும்பனுங்காசெய்தம்
பீடுபோன்மலர்ப்பூவைகணிலவிடும்பெட்புறவிடந்தோறும். (௮௨)

எழில்செய்தம்முடையுறுப்புநேருறுப்புடையேழையர்தமைக்கரண
விழையுங்காதலிற்புணர்கிளைதகாலெனவியனமனைத்தலைதோறும்
வழியுமும்மதக்களிறொருப்பிடிகளும்வயந்திகழரிமாவு
முழையும்வைகலுமுறைவனபயில்வனவுழிதருவனமன்றே. (௮௩)

துளிவிராவியசேனைமாரியிற்பொலஞ்சுடர்விடுதிருமேனி
யளியினூட்டுபுதராங்குசாகையினிலையுறவையாமேலொற்றி
நளிமலர்த்திரளேய்நறும்பழவுணாகலநீண்மரச்சானுந்
தளிதொறுஞ்சிவலிங்கபூசனைதனைத்தகைபெறப்புரிகிற்கும். (௮௪)

படியின்மேதகுமாயிடைமுன்குலாம்பல்லியத்தொகைபோல
நெடியயானைகளுலம்பியசும்மையுநிரைபடுமரியேற்றி
னிடியினார்த்தெழுமுழக்கமும்வேங்கைகளிரங்குமோதையுமல்கி
விடியனண்பகன்மாலையெக்காலமும்விராயெழுமிடந்தோறும். (௮௫)

கொம்பினூழ்த்தலர்மலர்களினிழிந்துவார்குலநதியெனவோடும் *
வம்பறுதபூந்தேறலைப்புனலெனமடுத்துளார்மகண்மாக்க
ளம்பொனூலயத்துணிஞண்பாவையையாடவொடைச்சால
நம்பிநோக்கியநோக்குமாறுவதனலந்தெரித்திடுமாபோல். (௮௬)

*அகூ. சீவது. 1902

நீண்டவேய்நரன்றுக்கபன்முத்தமுநெடும்பணையரிதாக்க
மாண்டயானையின்மத்தகங்கிழிந்துகுமணிகளுநகெருதநோலுங்
காண்டகக்கிடந்திமைப்பனகலவியிற்கன்னியர்முலைகோட்டுப்
பூண்டகித்திலம்பரிந்துவீழ்ந்தவிரொளிபொங்குமத்திறஞ்சாட்டும். (அஎ)

எம்பிரான்றிருநகரொழிநீபவடர்ந்திடுவதென்னெனநம்ப
னம்பொன்வார்கரத்தழலும்வெங்கனல்படர்ந்தழிநதிடவெழுந்தென்னப்
பம்புநீள்பசுங்கழைகருலமுரிஞ்சவுறபவிதழவொள்ளழலோடி
யும்பரோங்குகானழிதலுறபபுகுநதசஃதொழுக்குநேறலிறசாம்பும். (அஅ)

இன்னவாறெலாந்தூறெழுவனம்படவிருநாகர்த்தனித்தெய்வக்
கன்னிநோக்கினளருநதயருழநதனள்கம்பைவைபயினிலவேணிச்
சென்னியாருமையுடனறனித்துறைதவிறசெய்விபெறறிலளாகி
நன்னர்வெள்ளியங்கயிலைமால்வரைததலைநண்ணினளிடாதீாவாள். (அகூ)

அங்கணவள்ளலாரடியிணைதொழுதெழுந்தனுஞ்கினறுவாசெய்யுந்
திங்கள்வேய்ந்தபொறபுரிசடைக்கடவுளோதிருமலிநகர்க்காஞ்சி
பொங்குமாதவதவதொருமுனிசபிதலாறபொருககெனவளங்குன்றி
யெங்குநீடியநெடிபடுசான்பொதிநத்நிம்பையுறறனுமன்மே. (கூ0)

வெள்ளையோதிமக்குழாங்களுமின்னெனமிளிர்நகுமெபமடவாரு
முள்ளமீக்கொளுநகளிபபிடிலாட்டயருருகெழுதடநேறாறுங்
கள்ளுலாஞ்சினைககானவராகோழியுங்கலுழிமும்மதவெள்ளங்
கொள்ளைவண்டினங்கூட்டுறுங்குஞ்சரக்குழாங்களுந்துன்னதாடும். (கூக)

தேறல்வார்ந்தெனமதுரமிக்கசும்பியதிவ்வியாழிசைப்பாட்டு
நாறுபூங்குழன்மகளிர்களிசையுடனடவியகுரறபாட்டும்
வேறுவேறுசூழிடநதொறஞ்சுவாகதயவிரிசிறைமணிபபூவை
யூறதீஞ்சுவைக்குயிலினமிழறறியவோங்குபாட்டிசைமலரும். (கூஉ)

கோதைவார்குழற்கூட்டியநறும்புகைதுலாவியவிடந்தோறுஞ்
சீதநித்திலமுகும்பணையுரிஞ்சியசெழுங்கனல்வளைந்தேறிப்
போதளாமகில்சந்தனமெரிதகெழுபூம்புகைக்கொழுநதூரு
மாதரார்நடங்குயின்றமேலரங்கொளாமயிலினநடமாடும். (கூங)

மருந்துபோல்வரும்விருந்தினையெதிர்கொளும்வயின்றொறுமதவேழம்
பொருந்துவாலுளைமடங்கல்வெந்தடாவடிபுலிமரையுழையாதி
திருந்துவேதிருங்கானகநின்றொரீஇச்செற்றிவநதவைதம்மைப்
பரிந்துதத்தமதினமெனவெதிர்கொளும்பகட்டினமுதலாய. (கூச)

பரத்தைமாரொடுங்கிழத்தியர்தம்மொடும்பாழியம்புயமைந்தர்
கருத்துமேதகவாட்டயர்நதின்புறுகடிமலர்ப்பொழிறோறும்
பெருத்துநீள்கரப்பிடியுடன்வேழமும்பெட்டைகளுடன்மானை
வருந்தும்வாலுளைமடங்கலுமளவளாய்மதன்கலைமுறைதேற்றும். (கூரு)

இளமசார்விளையாடியதெருத்தொறுமிடிமதக்களிறீன்ற
களபநின்றலாயாட்டயர்தருமுளக்களிவொடுநற்றுயர்
வளநிலாவியவுணச்செழுஞ்சிறார்களைவாய்புகுத்தகந்தோறு
மளவின்மாக்குலந்தத்தமமழவினையயிற்றுவருளகாதி. (௯௬)

பந்தர்போகிமென்னிழல்செயும்வீதியும்பண்ணவர்பலர்வாழ்க்கை
நந்துமன்றமுமபொதியிலுஞ்சதுக்கமுநனிமரனிழல்செய்வ
வாதிலோங்கிவிண்ணூடியகொடிநிரையமனறமாளிகையாருஞ்
சிந்துவேயினங்கிளைதருவானளாநதுநினறுடுவதிரண்மல்கி. (௯௭)

பொன்னும்வெள்ளியுநவமணிதிரள்களும்புயலெனக்கொடுப்போர்க
ணன்னரங்கைநீரொழுக்கியபெருவெள்ளநிறைந்தநல்விடமுற்று
மின்னும்வாளெயிற்றடல்வலியரிபினம்வேட்டஞ்செய்துயிர்சாய்க்குங்
கொன்னும்வாரணதொருதிசெய்ததோருராயக்குளமெனநிறைநிற்கும்.()

காட்டினூடகந்துயிற்றமப்பொழுதுநின்கழறொழுதுடன்கூடி
யாட்டமேவுவெம்பேய்க்கணநீபமரணிநகரொனவாங்குக்
கூட்டம்வாய்ந்துநின்கோயில்காப்புறுவபோற்குழிவிழிச்சுருட்குஞ்சி
மோட்டிரும்பெருமூக்குடையலகைகண்முழங்கியாட்டயர்கிற்கும். (௯௯)

குருகுசாக்கலாபமைபமைத்துயிர்தபுங்கோளரிச்செழுந்தோலும்
பெருகவீரியமடங்கருக்கறவுயிர்பிரிநடைமலைத்தோலும்
பொருதுவார்மசக்களிறுரிநாகாக்கிடப்பொன்றுபுன்புலித்தோலு
மொருவவெங்கணுநின்னுடைப்போர்வைகளுணங்கிறுலெனமல்கும்.(௧௦௦)

மாந்தவொன்பவொருவருமின்றிமையாந்தவந்நகர்நோக்கி
யேந்துமார்பகத்தணியெனவணிந்தபையெழிலராயினமெல்லாம்
போந்துநின்னுடைவரைப்பெனுமுரிமையாறபொற்பவெங்கணுமல்கிக்
காந்துபன்பணிப்பஃறலைவிரித்தொளிக்கதிர்விளக்கிடுநாளும். (௧௦௧)

மிளிருமங்கியுந்தாப்பையுஞ்சமிதையும்வேதியர்தெருக்காட்டுங்
களிறுங்கானலந்தேர்களும்புரவியுங்காவலர்தெருக்காட்டும்
வளருநந்தேன்களும்புழுகுங்கத்தூரியும்வணிகர்தந்தெருக்காட்டும்
பிளிறுங்கான்கருமேதியும்பெற்றமும்பின்னவர்தெருக்காட்டும். (௧௦௨)

உடுத்திடாதபல்கலைகளுஞ்சூழ்தருங்கற்றவருயர்நாவிற்
படுத்திடாதபல்கவிக்குலம்பயிறருறும்பண்புடைப்பெரியோராற்
றொடுத்திடாதபல்கடாவிடைகொடுத்திடுநதோகையன்னவர்நெஞ்சி
னடுத்திடாதவண்கறபுமிக்கணைத்திடுமனையநீள்வளமன்றே. (௧௦௩)

பாயும்வேங்கைகள்பாய்ந்திடாவேங்கையிற்பயிலும்வார்மதநீரிற்
றோயுமவேழங்கடோய்ந்திடாவேழமுன்றுவன்றுமாருயிர்மாழ்கக்
காயுநாகங்கள்காய்ந்திடாநாகத்திற்களுமெங்கணுஞ்சென்று
மேயுஞ்சேவினமேய்ந்திடாச்சேவுழைமேவுமாலவணைந்தாய். (௧௦௪)

திருந்துகோட்டவன்கலைமுழுக்கல்லது செழுங்கலைமுழக்கில்லை
பெருகுபூப்புனமான்குலமல்லது பெருமையான்குலமில்லை
யிருவும்வல்லியாற்சிறைபடுமெகினலாலெழுஞ்சிறையெகினில்லை
குருகுமாப்பயில்வில்லமல்லாலவட்குடிகள்வாழில்லமில்லை. (௧௦௫)

மணங்குலாவியகிளுத்தமாலுடைமலான்மற்றைமாலுடையில்லை
யணங்குபூங்குரவுயிர்த்தபெண்மகவலாலருமகவினமில்லை
பிணங்களார்பெருவாய்க்கணமல்லது பெரியவர்கணமில்லை
யிணங்குவண்டின்வாய்ச்செவ்வழியல்லதங்கெய்துசெவ்வழியில்லை. (௧௦௬)

கழுழிவார்மதக்கமழ்புனல்களிற்றினமாட்டிடக்கருப்பூர
நிலவுசாந்துகுங்குமமுதல்விரையெலாநெடுமரமெங்கேந்தந்த
விலகுசாமரைமானமாவீசவேயினமணியுதிர்வுறாநலக
வொலிகுலாவியநெடுவனமாயிடையரசுசெய்துறைகிற்கும். (௧௦௭)

தீயதீர்க்கும்வெண்பூதியுத்தூளனஞ்செய்துவற்கலைசூழ்ந்து
பாயவொள்ளெழுத்துப்பண்ணிறதிருந்துபலவளமெலாந்துறந்தங்கண்
மேயபன்மரமுகுத்தமென்சருகுகளிரவுகாறறிலையுண்டு
தூயகாஞ்சியுமருநதவமுயல்வதாஞ்சூழ்ந்தகானிடைமாதோ. (௧௦௮)

இன்னவாயபல்பெருந்துயருறுநீணெறிவழியறிபாய்போன
மன்னுகிற்றியான்களைகணில்லவொன்மாழ்குவதழகேயோ
கன்னிபாகவென்றிரங்குநின்றியம்பிபகாருநீமாநகர்பெயவந்
தன்னைநோக்கினன்குறுநகைமுகிழ்த்தனனெம்பிரானிறைசாரும். (௧௦௯)

கொண்டவெந்துயரொழியினிவளம்படுதலநகர்த்திருக்காஞ்சி
பண்டுபோல்வளம்படுதகம்மானையிறபனிமலாதுதொடைமாலி
யண்டர்கோனவண்வருவனீசெல்கெனவருள்விடைகொடுத்தேகித்
திண்டிறற்படைவலாரியைத்திருவுளஞ்செய்தனன்செயலோடும். (௧௧௦)

வேறு.

மங்கையர்சாமரைவீசமணிச்சேழ்
பொங்கியமெல்லணைமேற்பொலிபுத்தே
டிங்கணிலாவியசெஞ்சடையோன்மு
னங்கைதலைக்கண்முகிழ்த்தடைவுற்றான். (௧௧௧)

ஐந்திறமெட்டினுமாரவணங்கிச்
சிந்தையினன்புதிளைப்பவெழுந்து
முந்துறநிற்றலுமுக்கணனோக்கி
மைந்தபுவிக்கண்வயங்குமதுப்பால். (௧௧௨)

உதித்துவளர்ந்துயர்காஞ்சியைமுன்போற்
புதுக்கிவழாவகைபோற்றெனலோடு
மதிக்கணயர்ந்துபின்மாநகர்மேலாக
கதிப்பதுதேர்ந்துகவற்சியினீங்கி. (௧௧௩)

உண்ணிறைகாதலுளத்தினையீர்ப்ப
வண்ணலையேத்தியருள்விடைபெற்று
மண்ணரசாளுமனுமங்கைவயிற்றில்
விண்ணரசாள்பவனமேவினனன்றே. (௧௧௪)

வேறு.

பொருந்துசீர்க்கரும்பசீடிப்பொலிதலும்புனவேய்வென்ற
வருந்திறற்றோளுமாலினழகியவயிறுநாமமுட்
பெருந்தகுணிப்பருப்புஞ்சாயகந்தபெற்றியுமாறிகொண்டாங்
கிருந்தனமெலிந்ததீங்கியிளமயிற்சாயலாட்கே. (௧௧௫)

செழுங்கலிகாலனென்னுஞ்செங்கதிர்மண்மேற்றீய
வழுங்கவந்துயிர்க்குங்காலமடுத்தலாலிணையகருசக்
கொழுங்கதிர்முலைகயும்விளருமெனக்கழீஇசுரும்பர்மொய்த்தாங்
கெழுந்தடக்கொங்கையுச்சிகறுத்தகெழிலடைந்தமாதோ. (௧௧௬)

கறங்குவெண்டிரைசூழ்வேலைக்கடல்வளைமண்ணையெல்லா
மறங்கொணூனமுறையிராற்றங்கவருமப்பெறற்கருவிற்றோனே
பிறங்குதோள்பழுதுமாறுபெயவபோற்புகையேறுண்ட
நிறங்கொார்மண்ணையுணனும்வயாநிறைந்திட்டதன்றே. (௧௧௭)

வேறு.

சீர்த்தகுல்பெண்மகளேகொறீதற்
போகதவாண்மகனகொலெனநீங்கிமோாவநதாற்
பார்த்திடவுளாற்றப்படாகின்றுலெனக்
கூர்த்தவேறகுலவிழிகுழிந்தவெனபவே. (௧௧௮)

தடங்கொளும்வயிற்றினிற்றவிரந்தகானமூலை
யிடங்கொளவளர்தருமியல்புபோனமணி
வடங்கிளாமுலைகளினவாசதுதிமபய
மடங்கருங்கருவிருந்தருமடிமிக்கதே. (௧௧௯)

அணியினுமணியருமகவொன்றேயெனத்
திணிநிலந்தெளிவுறத்தெரிப்பதேயபபவுட்
டணிவறவளர்மகத்தளர்வினுலணி
பிணிமலர்களுமொருஉம்பெற்றிவாய்ந்ததே. (௧௨0)

இன்னணங்கருக்குறியிலங்கத்திதிர்
நன்னர்நாடலைவரநவையில்கோள்களுந்
துன்னியவோரையுநலங்குயோகமு
மென்னவுநலம்பெறவினையந்தநோக்குற. (௧௨௧)

மறப்பெருந்தீயனமாழ்கிச்சாம்புற
வறப்பெருந்துயனைவலங்கிமேலிட்த
திறப்பெரும்பகையெலாந்தெருமந்தாழ்தர
வுறப்பருங்கிளையெலாமுவகைபொங்கிட. (௧௨௨)

சிறைபடுமாசர்தந்திகைப்புநீங்குறக்
கறைகொடாதுலகஞ்சில்வருடங்காமுற
மறையவர்கவின்முதன்மாந்தர்வான்பொரு
ணிறையநொண்டனர்கொடுநிரப்புநீவுற. (௧௨௩)

பிறந்தனனிறைமகன்பிழைத்தவேந்தர்மேன்
மறந்திகழ்வேலுடைமன்னர்மன்னெனச்
சிறந்தநற்றுறைதையுஞ்செய்வசெய்தன
னறந்திகழ்விழாதெருத்தோறுமார்ந்தவே. (௧௨௪)

வேறு.

திருத்துமவயவந்திருத்திச்சிலதியர்வாய்புகுத்துவண
வருத்தியொடும்வாய்புகுத்தியரிசனத்தண்விழுதாதி
யுருத்தவையத்திமிர்ந்தாட்டியொளிர்நீறுறக்காப்பணியக்
குருத்தவையுமிளமதியின்கொழுந்துபோல்வளர்கின்றான். (௧௨௫)

கொழுங்கனகவிசும்பாளக்கொற்றவம்மெனுமமரர்க்
கழுங்குமணிப்புனற்காஞ்சியணிதிருத்தியல்லாலங்
கெழுங்கருத்தின்றெனவவனையெதிர்நோக்கிமறுப்பதுபோற்
செழுங்கமலமுகநிமிர்த்துச்செங்கீரையாடினான். (௧௨௬)

எம்முடையவலைப்பட்டோரிவ்வாறேயலைவரென
மம்மருலகினைதெளிக்குமாண்புபோன்மழைக்கூந்தற்
கொம்மைமுலைமடவார்கள்சொழுங்கனகவடமுக்கிச்
செம்மைமணித்தொட்டிலினிற்றாலாட்டக்களிசிறந்தான். (௧௨௭)

உயங்குநிரப்பினர்தமக்குமுயர்ந்தவர்க்குங்கவிகளுக்கும்
வயங்கிளருங்கொடைகொடுப்பமெலியாமைவலியடைக்கும்
பயங்கதுவப்புடைத்தாற்றல்பயிறுவபோலொளிதுளும்பித்
தயங்குமிருகரமலராற்சப்பாணிகொட்டினான். (௧௨௮)

எல்லுமிழுந்தனதுமுகமெனுஞ்சோமனாயகனு
மெல்லியலார்வாய்க்குமுதவிளங்கிழைப்பூட்கிழுத்தியரும்
புல்லியிறுமாப்பனபோற்பொற்றமுலைக்கிடைந்தொசியும்
வல்லியிடைமடமாதர்வாய்முத்தங்கொளவளித்தான். (௧௨௯)

பெருநிலத்திலெவரெதனைப்பெட்பினுமற்றஃதுதவுந்
தருநிகர்த்ததனதியல்பைத்தண்டாதுதெரிப்பதுபோல்
வருகவருகெனவிளிக்குமங்கையரானனமலர்த்தித்
திருவளர்கிண்கிணியொலிப்பத்திரிந்துவிளையாடினான். (௧௩௦)

பைங்கிரணமுகுத்துலகிற்பயிர்வளர்ப்போய்வருகவிவன்
பொங்கொளியானினக்குயாந்தானுனக்குமொளிபுணர்த்தருளுஞ்
செங்கதிரோன்மரபுடையான்றெவ்வடுகோக்காண்டியென
மங்கையரொக்கலையிருவிமதிவிளிப்பமகிழ்கூர்ந்தான். (௧௩௧)

அற்றமில்யானரசாள்போதனைவரும்பொன்னவிர்மணிசூழ்
பொற்றமனைவயினன்றிப்புணரும்விளையாட்டானு
மற்றைமனைவயினிருந்தல்வழுவென்றுசிதைப்பதுபோற்
சிற்றிலெலாஞ்சிறுமடவாரசினர்ந்தலறச்சிதைத்திட்டான். (௧௩௨)

அலகில்புகழ்தன்புயத்தையணைசெவ்வியார்த்திருநீர்
நிலவரைபின்வந்தொருசாரிறகுமொருகலைமகளை
மலர்மகளைச்சயமகளைவருகவெனவறைவதுபோற்
றிலகமெனவுயர்சிறுவன்சிறுபறைகண்முழக்கினான். (௧௩௩)

பருந்தமணிபொலஞ்சகட்டுப்பாழியந்தேர்பற்பலவுஞ்
சருத்திசையுந்திசையுருவக்கடவியமருழந்துபகை
வருந்துவதறகிதுவுமொருவல்லெனமறுகுதொறுந்
திருத்தகுபொறகூவிரநதசிறுமணித்தேருருட்டினான். (௧௩௪)

இவ்வண்ணம்விளையாடுமிளம்பருவத்தியல்பொழிந்த
வவ்வெல்லையுலகமெலாமதிசயிப்பவிழாவெடுத்துச்
செவ்வண்ணக்குருமுன்னாச்செழுங்கலைகளபயில்விப்பார்
பௌவங்கொண்முரசதிரப்பள்ளியினில்வைத்தார்கள். (௧௩௫)

அடல்வலிதகிண்மழுப்படையானயன்றலையொன்றுகிரினிற்கொய்
திடறியநாண்முதறறனக்கோரிடமிறந்ததெனும்பரிவு
கடலனையபடைத்தானைக்கலிகாலனுவகத்தைத்
தடமனையாகக்கொண்டொழிந்தாடவளமலர்ச்சேக்கையினாள். (௧௩௬)

நிழலுயிர்க்குமணிக்கச்சுநிரம்பவிடைத்தலம்வீக்கிக்
கழலுயிர்க்குரோனருளானகதிர்ப்பலகைநாந்தகம்வெவ்
வழலுயிர்க்கும்வேலாதிப்படைத்தொழிலுமடையாநெஞ்
சுழலுயிர்க்குய்களிறுதிரூர்தொழிலுந்தொடங்கினான். (௧௩௭)

கயிற்கழலாளைவர்யாதுகண்ணினுந்தாழாதனிகருஞ்
செயற்புதமைதனைநோக்கிச்செயிர்தருடலுமமாக்களதி
லுயிர்ப்பலிவேட்டொருமலையுமொவ்வாதபுயமலையிற
சயப்பெருஞ்சூர்மடக்கொடியுந்தழுகனுமெவிறறிருந்தாள். (௧௩௮)

உரியதிருப்பருவத்தினுபநயனச்சடங்கியற்றி
யரிலறுக்குமறைபயில்க்குசனுப்பனுச்சிரமத்
தெரிதவழுமிலங்கிலைவேலிருந்தாதையுய்ப்பவவண்
விரிகழற்காற்கலிகாலன்மறையோதிவளர்நாளில. (௧௩௯)

விண்ணுலகந்தடந்தோளின்மேதகவைத்தருள்வேந்தன்
மண்ணுலகினுயிர்த்தமையான்மறுவேந்தாயவ்வுலகி
னண்ணியரசாளுதற்கேநடப்பான்போலுலகமெலாங்
கண்ணிறைநீர்சொரியவுடல்கழித்துமறுவிண்புகுந்தான். (௧௪௦)

நம்முடையமகற்றழுவுநகைமணிப்பூணயிராணி
விம்முமுலைபுணர்வதுநம்மேதகைக்கொண்டதென்னக்
கொம்மெனப்போமிறைவனைப்பின்குறுகிவிலக்குறுவாள்போ
லம்மலர்ப்பூங்குழன்மாதுமழன்மூழ்கியுடன்போந்தாள். (கசக)

தந்தைதாயிருவர்களுநதாரணியின்வாழ்வொழிந்து
சுந்தரஞ்சேர்விண்புகுதத்துவன்றியெழுநதரியலர்கள்
சிந்துமணிப்புனற்பொன்னிசசோணடுதெவ்வுதலு
மந்திரிகளரசின்றிமனந்தளருமவ்வேலை. (கசஉ)

கவலாதிர்மருப்பயந்தகான்முளைதானுான்சண்ட
ரவமாறுங்களிறரசைத்தளையவிழத்துவிடுமினஃ
துவராழிப்புவியப்பக்கொணருமெனவுயர்விசும்பிற்
சிவவாய்மைமொழியொன்றுதிகழ்ந்தெழுந்ததுகோ. (கசங)

விம்மாந்துபகைபுலம்பவேரோடுமிரித்துலந்ற
றம்மாவித்துணைவேந்தன்சக்கரஞ்சென்றிடுநாளி,
செம்மாந்துகளிதூங்கிச்சிவபெருமானருள்வழுந்தி
யம்மார்ந்தகடக்களிற்றையலங்கரித்துவிடுத்தார்கள். (கசச)

மணியிருபாற்கலகலப்பமதசலங்கள்சலசலப்ப
வணிபலவுங்கதிர்கதிர்ப்பவடையலர்கள்விதிர்விதிர்ப்பநு
திணியுலகம்விதுவிதுப்பத்தேவர்களுங்குதுகுதுப்பப் பரி- 2௰, [illegible]
பணிலமுதலியவியம்பப்படர்ந்ததுவெங்கதுங்களிறு. (கசரு)

வீடணுகும்பெருங்காதன்மீக்கொண்டவிளையொப்புக்
கூடினவர்குருத்தேடிக்கொட்புறல்போறறிசைதிசைபோய்
நாடுமவர்குருப்போலநடிப்பவராவிலக்குதல்போ
லீடிலெதிர்ப்படுமரசர்யாவரையும்விடுதேகும். (கசசு)

விளைவிலிலைப்புளைகிளைத்துவிறல்வேழங்குசநாயன்
புளையறுசிராச்சிரமம்புகுநதாங்குவீறறிருந்த
வளையர்குலத்திருமகனையண்முதலுமுடன்பயிலுங்
கலையுமறைமுனிவர்சிரூர்கையகன்றஞ்சினரிரிநதார். (கசஎ)

வெண்ணிறக்குஞ்சரங்கடவும்வீறமையங்குசந்தனது
தண்மலர்க்கைத்தலையொன்றித்தயங்குதல்பொழுதிடைச்சொளிரு
மொண்ணிறவங்குசவரியாலோச்சியிவர்வான்முயலுந்
திண்ணியமன்னனைவணங்கித்தெறுகரிமேற்பரித்ததே. (கசஅ)

அன்னன்மதக்களியானையார்ங்கண்ணிமுடிவேந்தைப்
புண்ணியஞ்செய்தன்னெருத்தமிசைத்தாங்கும்பொறையாற்றி
யெண்வகைமாதிரந்தாங்குமினக்கரிகள்பொறைநீவி
யுண்ணிலவுங்களிதூங்கவுதவிவழங்கியதன்றே. (கசகூ)

கருமேகமிசைவிடியற்காலையெழுஞ்செங்கதிர்போ
லொருவேழமிசைத்தோன்றுமொன்னலர்சூளாமணித
னிருபாதந்தொழுதிபத்தினபின்னணைந்தவெல்லோருங்
குருநாட்பங்கயமலர்க்கைகூப்பிமுடிகோட்டினார். (௧௫0)

தந்தைபணிகேட்டேஞ்சனுன்பணியுங்கேட்பவிவண
வந்தனமென்றேத்துதல்போல்வயிர்வளைவேய்ங்குழல்வீணை
துந்துபிதண்ணுமைமுழவந்தொருமுருடுதகுணிச்ச
மெந்தவகையியங்களுமுன்னியம்பியவேழ்கடலமுங்க. (௧௫௧)

மைவண்ணக்கரடமதமலைவணங்கிப்பிடரேறருஞ்
செவ்வண்ணமலர்முகத்தோனசெம்மாந்துகளிபபுறலும்
பௌவங்கொள்புவியகத்தோர்பயினமகிழ்ச்சிததலைநின்று
றொவ்வண்ணமிறையானுனவ்வண்ணமுலகாமால். (௧௫௨)

கண்டவர்கண்முகவனசக்கடிமலருமகமலரும்
விண்டலர்ந்துகிளிதூங்கிவிளங்கியதுமொருபுகழோ
தண்டரளப்பூண்மார்பிற்றார்வேந்தனிருள்சீதநு
மண்டலமெலாம்விளக்குமிரவிமருமானெனனில். (௧௫௩)

தொழுந்தகைமைப்பேரமைச்சர்தொல்லுலகம்புரிதவத்தின
கொழுந்தனையசெம்பியர்தங்குலவிளக்கைப்பகைவெருவ
வெழுந்தசினக்களிற்றெருத்தமிசைநின்றுமிழிச்சிறா
செழுந்தரளமணித்தொங்கன்முடிகவிக்குநதிறம்புரிவார். (௧௫௪)

பாயினவிண்ணவர்தத்தம்பதியிருந்தாங்கிருநதரசன்
மாயிருமண்மகட்புணரும்வளநோக்கவமைப்பார்போற்
சேயிரவிமுதலானதேவர்பதிமேனிமுறற
வாயிடையேவிதியுளிப்பொன்னலங்கொளிமண்டபஞ்செய்தார். (௧௫௫)

மின்னசும்புமிழைமடவார்வெருண்டுறுப்பாற்றமைத்தெறுதன்
மன்னவன்முன்முறையிடுவான்வந்தனபோற்கனிவாழை
துன்னுபசுங்கரும்பிளநீர்தொகுங்கமுகுமுதலாய
பொன்னவிர்தூண்டொறுநிறைத்துப்பொற்பநனியலங்கரித்தார். (௧௫௬)

புண்டவழ்வேற்படைத்தங்களிறைவன்பொற்பினைநோக்க
வண்டார்குலமண்மையினிலண்மிநெருங்கியதேய்ப்பக்
கண்டவழச்சித்திரித்தகாமருபட்டாதிகளான்
மண்டபமெங்கணுமலிங்கிவளங்கொழிப்பவிதானித்தார். (௧௫௭)

நறும்பூவுமலர்த்தாதுகைக்யொளிர்பொற்சுண்ணமொடு
புறம்போதச்சிந்தியகிற்புகைபுகைத்துவிண்ணவரு
மிறும்பூதுகொளவுள்ளாலெழிலியகம்பலம்விரித்திட்
டிரும்போகவிலமுமதற்கோவ்வாமைக்கவின்செயதார். (௧௫அ)

ஊற்றிருந்துகவின்றருளும்புமுருகெழுமண்டபமென்று
மேற்றமலிமகன்மார்பிலிலங்குமணிப்பணியென்ன
நாற்றிசையுமதிசயிப்பநாப்பணவமணிதிரளால்
வீற்றிருக்குஞ்செழுந்தவிசுவிற்பயிலக்குயிற்றினார். (௧௫௯)

கடக்களிற்றைக்கண்கட்டிக்காவலனைகொணர்பாக்கு
விடுத்தனர்களமைச்சரொனுமிருமொழியேவிறல்வேநதற்
கடுத்தமணிமுடிசூட்டவிடுமுடங்கலாக்கொண்டு
தொடுத்தவிழாவணிகாணயாவருந்தொக்காரனறே. (௧௬0)

காட்டகத்துமிறைமகற்குக்கறைவாங்குந்திறமேய்ப்பப்
பாட்டளிசூழ்மலர்ச்சூதப்பசுந்தழையுந்தருப்பைகளு
மீட்டமுறுசமிதைகளுமேனையவுங்கைக்கொண்டு
நாட்டுமறையந்தணர்கணலங்கிளரத்திரண்டணைந்தார். (௧௬௧)

ஐயனிருதோண்மணந்தவரமகளிர்பிரிவாறமுர்
தொய்யின்முலைவேறாருவாய்ச்சுதொக்கருகிலிறுத்தனபோன்
மொய்யிழைசூழ்பொற்கரகமூரிமணிக்கும்பங்கள்
பையவிதியுளிநிறுவும்பாங்கொலாநிறுவினார். (௧௬௨)

தன்னுடையவிறையாகித்தமளியவானுலகாண்ட
மன்னனெனுமுரிமையினன்மழைமேகம்வான்கங்கை
துன்னியதீர்த்தங்கொணர்ந்தாற்றுணையமதக்கரியெருத்தின்
மின்னுமணிக்குடத்துவருவிளைப்புனல்பெய்தருச்சித்தார். (௧௬௩)

மடங்கலெறும்ப்பிடர்பிதிரமன்னுமணித்திரள்குயின்று
விடங்கொளுமாதனம்பூசையியற்றியதற்கெழில்செய்தாங்
கடங்கருந்துப்பயிலிலைவேலண்ணலைமேலிவர்வித்துத்
தடங்கெழுதெய்வக்கலசத்தண்விளைநீராட்டினார். (௧௬௪)

மெல்லியநுண்ணிழைத்துகிலான்மெய்யீரம்புலர்த்தியபி
னல்லுமிழுங்கறைக்கண்டத்தடிகடிருநீறன்றி
யெல்லுமிழுமணிசிறவாதென்பார்போன்முன்னுதலின்
வில்லுமிழ்நீறணிந்தணிகண்மெய்முழுதுமலங்கரித்தார், (௧௬௫)

கோள்பலவுமிறைமகற்குக்கோளுறுமாறொருகாலைத்
தாள்பிறழத்தங்கிடினுந்தங்குமெனநினைந்தவற்றை
வாள்பயிலமுறைப்பிணித்துவைத்தனபோன்மணிகுயின்ற
நீள்பசும்பொற்கதிர்மோலிநிலம்வியப்பமுடிக்கவித்தார். (௧௬௬)

அனையசெழுங்கோள்பிணிப்பினகன்றவிசும்படையாமற்
புனைகழற்கால்வளவர்பிரான்புகழ்வனைநதுகாப்பதென
நினைவரியபெருங்காட்சிநீடுமொளிமணிக்காம்பின்
கனைகதிர்முத்தவிர்கவிகைகவின்றரும்பமேற்கவித்தார். (௧௬௭)

திருமுகமுந்தடங்கரமுஞ்செழுங்கழலுமெனுங்கமல
மருமலருளுயர்ந்ததனில்வாழ்க்கையுறவுயர்ச்சிதெரிந்
திருபுறமுந்துணையன்னமிடைதெரியாதலைவதுபோற்
குருநிலவியொளியுருக்குங்கோமளச்சாமரையசைத்தார், (கசுஅ)

கண்டவர்களதிசயிப்பக்கதிர்த்தெழுந்தவிறைபுயத்து
விண்டலருமலர்த்தொடையல்விரைகமழுமதாணையான்
மண்டிவருந்தேனினமும்வரிச்சுரும்புமகற்றுவபோற்
றண்டரளவடஞ்சூழ்ந்தசாந்தாற்றிமருங்கலைத்தார். (கசுகூ)

பழுதில்கரகங்கடொறும்பாவித்ததெய்வதத்தின்
செழுவளமைதனிடத்திறைசெறிந்ததிறனறிப்பதுபோ
லொழுகிமையாடாதுயிர்மேலோங்குமருளுக்குதவி
யெழுதரியதிருவடிவினிறைமகளும்வீற்றிருந்தான். (கஎ0)

மறுவேந்தருயிர்நீங்கிவானணையுமன்றமுதன்
முனிவாயதுயர்கூர்ந்தமுண்டகப்பூந்தனிச்சேக்கைக்
கனிவாய்ச்செந்திருமாதுங்கலிகாலப்பெருவளவன்
றனிமார்பம்புணர்ந்தின்பசாகரத்தினழுந்தினாள். (கஎக)

பணிவேந்தன்பொறையொழிந்துபஃறலையுமயர்வுயிர்த்தான்
றணியாதபசியொழிந்தாமெனவமரர்தளர்வகன்றார்
மணிமோலிப்பகையரசர்மனத்தருக்குமுழுதவிந்த
பிணியாவுமொழிந்துலகம்பேருவகையெய்தியதால். (கஎஉ)

வேறு.

புரசைமால்களிற்றுடனெளிதரப்பொதிகொணரா
வரசர்முன்சொரிகையுறையினைந்துமந்தணரும்
பரசுநால்வகைக்கவிகளும்பாணருங்கவர்ந்தார்
முரசமார்த்ததன்னவர்கலிமுடிபறைநிகர. (கஎங)

பூண்டொறுந்தமதலர்விழிபூத்தமைதெரியா
நீண்டமெய்யெலாம்விழிகளாயிருந்தவென்றெண்ணிக்
காண்டொறும்பிரான்வலாரியென்றியாவருங்கனிந்தா
ராண்டமன்னனுமுறிந்தனரோவெனவயிர்த்தான். (கஎச)

உலகிலீண்டியகலியினைத்துரந்துசென்றோப்பி
விலகுகாவலாய்த்திசையினும்விண்ணினும்பார்த்து
நிலவுற்றதுநெறிமுறையரசுபூண்டிறைவன்
குலவுமற்றைநாளவனுழைக்கொழிந்ததெழும்புகழே. (கஎரு)

இன்னவாறுமண்மகளினைமணந்தபின்னிறைஞ்சி
மன்னர்முன்னநின்மரபுளோரரசுவீற்றிருந்த
பொன்னராவியவிருக்கையிற்புகுதுகவென்று
நன்னர்மந்திரக்கிழவர்கணவின்றனர்கேளா. (கஎசு)

புரவிதேர்கரிபண்ணுகபுரவலராயாரு
முரவுவாய்ந்ததம்மூர்தியிற்சூழ்கதூடனாருக
விரவலாளர்களிருநிதிபெறுகவென்றேவிக்
குரவன்சேவடிபணிந்தருள்கூர்விடைகொண்டான. (௧௪௭)

சங்கமாதிகண்முழங்கவார்கொடிநிரைதழையப்
பொங்குதானைகள்புவிநெளிதரப்புடைசூழத்
திங்கள்வாணுதன்மங்கையர்திருநடம்புரிய
வெங்களிற்றணியெருத்தமேல்கொண்டுசென்றணைந்தான. (௧௪௮)

அரும்புவிண்டலர்கயங்களுமலர்சொரிபொழிலுங்
கரும்புஞ்செந்நெலுங்கதலியுங்கமுகியபணையு
மருங்குபம்பியவளம்புனற்பொன்னிநாடெய்தி
நெருங்குமாளிகைத்தன்னுடைநெடுநகர்புகுந்தான். (௧௪௯)

பந்தர்தோரணம்பூரணகுடம்பலசொடிக
ளெந்தவெண்ணிலவுளங்களுநிரம்பியேர்வயங்கு
மந்தண்மாநகர்வீதிகளாயிலகடந்து
முந்தையோர்பயில்கோயிலினடைந்தனன்முறைபால். (௧௫௦)

அரசுவீற்றிருந்தாலயத்தெம்பிரான்றான
வரிசையானவையூர்தொறும்வழாவகைநடத்திப்
புரிசைசூழ்ந்தபொன்னகர்ச்செலுத்தரசிறும்பொலியக்
கரிசெலாமறுத்தாண்டனன்களைகணுலகம். (௧௫௧)

வணங்குமன்னவாதமக்கெலாநதனதுவெண்குடைக்கீ
ழிணங்குமண்டலம்பாத்தளித்தருளினனிறைஞ்சா
தணங்குபோர்க்களத்தேற்றவர்தமக்குமுன்றுண்ட
கணங்கொள்கற்பகநாட்டினைக்கைக்கொளவிடுத்தான். (௧௫௨)

காழிலாவறுபத்துநான்கெனுங்கலையானும்
வாழிவென்றுவென்றலைகடல்வரைப்பெலாநாட்டுங் 417 நா. 15
கேழில்வாகையமதலையுங்கிளர்மறைமுறையான்
வேழ்வியாற்றியயூபமும்விறந்தனவநேகம். (௧௫௩)

வாழுநாளொருகாலத்துக்காவிரிமலிநீ
நாழியாமெனநாடெலாம்பரத்தலுமலகில்
சூழியானைவேன்மன்னவர்யாரையுந்தொகுத்துப்
பாழிநீள்கரைபடுத்துநீரொழுங்குறப்பணித்தான். (௧௫௪)

கயிலைநாயகனருளியவாணையைக்கருதிப்
பயிலுங்காஞ்சியைக்காடுகொன்றிருநகர்ப்படுப்ப
வியலும்வாஞ்சையிற்போதுவானுழையரையேவிச்
சயநிலாவியதானையைத்தருகெனக்கிளந்தான். (௧௫௫)

ஒருகைமார்பகம்பிணித்துமற்றொருகைவாய்புதையா
வருளும்வாய்மொழியஞ்செவிநிறைந்தவல்வியவர்
விளைவினைவினர்விறற்கழல்வேந்தனுமெழுந்து
திருவளர்பயிறமணியக்கோயிலிற்சென்றான். (௧௦௬)

விசும்பினின்றிழிவேந்தனைத்தாதியர்விழைவாற்
பசும்பொறபீடிகையிருவினர்பனிகுலாம்விரைநீர்
தசும்பினேந்தினராட்டினர்தணைத்தனரீர
மசும்புசந்தனக்கலவைமெய்யழகுறவணிந்தார். (௧௦௭)

சூடுமேவிருசவையுமார்நால்வகையுண்டி
யோடுவாளரித்தடங்கணினுயிரனாரொண்கேழ்
பாடுதங்குபொறகலத்தினிறபண்பொடுமூட்ட
வாடுநீள்கொடிக்கொற்றவனுகர்ந்தணியணிவான். (௧௦௮)

வேறு.

எருமுகிற்குலமெனக்கருதிவர்துமின்
மருவிநின்றிமைப்பனமானப்பொங்குநெய்
முருகவிழ்சிகையினைமுடித்துவில்லிடும்
பொருவறுகாஞ்சனப்புரியின்யாத்தனன். (௧௦௯)

பந்தியிற்செறித்தபன்மணியின்கோவையைக்
அந்தரம்வாங்கியகாமர்வில்லென
மந்தரமனையதோண்மன்னர்மன்னனச்
சுந்தரச்சிகழிகைசூழ்ந்திட்டானரோ. (௧௧௦)

திருமகடனதெனச்சினந்தவெற்றிகொ
ளொருமகடனதெனுமுலங்கொடோளினன்
பெருமழைதுவற்றியபெற்றிபோலவட்
குருமலரலங்கறேன்கொழிப்பவேய்ந்தனன். (௧௧௧)

மாதராருயிரினைவாங்கும்வல்லயி
லீதுதானெனமனத்தெண்ணினன்பொரப்
போதளாஞ்சிகழிகைமறையப்பொன்குலாஞ்
சீதவான்மணிமுடிசென்னியேற்றினான். (௧௧௨)

ஈட்டியசெழும்பிரதாபவெல்லினால்
வாட்டமுற்றடைந்தவிண்மணியைத்தன்குலச்
சேட்டொளிச்சதிரெனத்தாங்குஞ்செய்கைபோ
லோட்டொளிப்பட்டமொண்குளத்தில்வீக்கினான். (௧௧௩)

அழகெனுந்தேன்வழிந்தொழுகுமாநனச்
செழுமணித்தாமரைச்செய்யபூவின்மேல்
விழுமியதிருமகள்வீற்றிருந்தென
வொழுகொளித்திலகமாய்க்குறுத்தினான். (௧௧௪)

தாள்வரிந்தபொற்கழலினானறனொளிக்கஞ்சி
வாளுலாங்கணார்வாழுமனையுட்புகுநதொளிக்குங
கேளலாபிரதாபநகைக்கெழீஇக்கொணர்ந்திருக்குமாங்
காளும்வேந்தனைமுன்னாகக்குரோசூழ்ந்திமண்கவிழ்ப்பார். (௨௧௩)

பரந்தமன்னவனபுகழினைப்பயந்திலந்தோறுங்
கரந்தவேறறவர்புகழையுங்கவர்ந்தனாகொணர்ந்தாங்
குரந்தவாககளிற்றடியினிழைப்படுத்தொழிப்பார்போ
லிரந்துமண்ணெலாமறைத்தவெண்பொடிநிறையயார். (௨௧௪)

வண்டுசூழ்பசுந்துழாயநதொடையின்றமாயகத்தித்
கொண்டகீர்த்திசெழுஞ்சாநதணியாதலாறதுணிபோ
தண்டவார்சிலைபானலனிலன்றடக்கையிலவேல
கண்டலாலுமைகாணமுலைபோலுமெனறறைவார். (௨௧௫)

கோழியான்குறுகாருயிர்குழைதராச்செலுத்து
மாழியானெனவிருநெருநதார்கதலாயினை
வாழிவேளெனமதிதனுமோகாருசியிறறவத்தா
காழினீக்குமாலென்றுமோவெனறனர்களைவார். (௨௧௬)

வேட்டயானையுமிரக்குமுனைவீசிநிதிரந்தாற
கோட்டந்தீர்மனபபெருந்துறைநவைதிளாநகழைந
வாட்டமுறறலாலவாஙகொடாவானயாழமமா
லீட்டரும்புகழுபடைத்தவேறறமரனெனபார. (௨௧௭)

முருகவேள்களிறூரவம்முருகனைத்தணவாத
திருவில்வீசியகலாவமாமழையினைசேறல
பொருவவேலவனகுஞ்சரத்திம்பரோரபொலங்சொம்
புருவனுள்குழலலையமால்கொண்டேனபடர்வாள். (௨௧௮)

கொழுநதேனிமிர்தொடையலஙகோனவனழகு
முழுதுங்காணியதம்மெதிர்முன்னவெங்களிற்றுக்
கெழுதுதொய்யிலைக்கரும்பிதோவெனறுகாட்டுவார்போற்
பழுதிலாமணிககச்சுகதிறபர்களபல்லார். (௨௧௯)

இரும்புபாய்ந்துபுண்ணிணங்கியமத்தகநதமது
பெரும்பொனமேகலையல்குன்மத்தகத்தெழில்பெறுமை
சுரும்புமூசியகடக்கரிக்குணர்ததுவாாதனைய
விரும்புநீவியுமிழந்தனர்வெறியராய்நிற்பார். (௨௨௦)

களிறுதேர்பரிமுதலியவேண்டினர்கவரக்
குளிறுவார்முரசிறைக்குநங்குருமணிக்கச்சோ
டொளிறுவாள்வளைகலைகவர்ந்துதவிடாதேகும்
வெளிறுமாத்திரையிருந்ததெம்விதிப்பயனென்பார். (௨௨௧)

கதிகொள்சேனையின்முழக்கினைக்காரெனக்கருதி
வதிவின்பாங்கமரிலஞ்சியோதிமங்கள்வான்புகுவ
அதிகொளிந்திரன்புவியினிலரசுசெய்தோற்ற
நிதிகொள்வானவர்க்குரைத்திடப்போவதுநிகர்ப்ப. (௨௩௧).

பொன்னிமாமணையாடனைப்புணர்ந்திடாதிகந்த
தென்னையோமனக்குறிப்பினையறிகுமென்றெண்ணிக்
கொள்ளும்வார்கடல்குறுகினுளெனப்படைக்குழாத்தோ
டன்னமாடுபூங்காவிரிகுறுகியங்ககன்றன. (௨௩௨)

நாடும்பற்பலகானமுநகரமுங்கடவா
வோடையானையினொருகுடைமன்னவனடைந்தா
னீடுமன்பர்களுளத்தினுஞ்சிரத்தினுநிருத்த
மாடுமண்ணலார்காஞ்சிமாநகரணித்தாக. (௨௩௩)

வேறு.

பொன்னுடைக்கோன்வருவானெனப்பெருமான்புகன்றமொழி
முன்னேபெற்றாங்காஞ்சிமொய்சூழ்தெய்வதமின்னு
மென்னேவந்திலனென்றுதனைவானதிடைதருவத்
தன்னார்கைத்தலநிமிர்த்தாற்போன்றதளிர்வனங்கண்டான். (௨௩௪)

பாவுபெருமானருளாற்காஞ்சிவளம்பயிற்றுவரும்
வாமுனார்ந்தவயின்முன்னேதனைக்காணவந்திருக்கு
மரமகளிர்காண்டலுறினருட்டயர்வதெனவளிபாய்
குரவமலர்க்கொடிபலவுஞ்சுழைந்துநுடங்குவகண்டான். (௨௩௫)

தமதுருவமொருகாலைச்சதழீஇக்கொண்டநெடுவிசும்பி
னமரர்களுமயகன்வர்தானெனத்தனைக்கண்டார்வமொடு
குமரிமயிற்குலமுமிருள்கூர்நிறததகுயிற்குலமு
மிமிழிசையுநாடகமுமெங்கணுமீட்டுவகண்டான். (௨௩௬)

இந்திரன்வந்தடவியெலாமிறுக்குமெனவிறைமாற்றந்
தந்ததுணர்ந்தெனககாடுசினஞ்செய்ததானுருஞ்
சுந்தரவாகனமாகிச்சுலவுகருமுகிலினத்தை
யந்தரத்தினியங்குதொறுமடர்ந்துநெருக்குவகண்டான். (௨௩௭)

விடமுகுக்கும்பணப்பாந்தள்விமலர்திருமார்பகத்துப்
படவரவதொடுமுறவுபாராட்டிப்பிலவழியே
யிடமுடைத்தம்பாதலத்துக்கேகுவபோற்றனைநோக்கித்
தடநெடும்புற்றளைகடொறுஞ்சார்ந்துகரப்பனகண்டான். (௨௩௮)

ஆனாவருந்தனைநோக்கியழிவுகமக்குற்றதென
வூனாயிடுகினறனபோலொளியுமிழ்மண்டிலம்பறப
நீளுமிருட்கானகத்துநிரந்தமலர்த்தருமுழுதுங்
காளகமென்சுருப்போதைகாட்டியசைவனகண்டான். (௨௩௯)

இலகுமரக்கொளிபடைத்தபின்னருமீர்ந்தளவணிந்த
தலைவனவன்றமைநிகாப்பத்தாங்களுமங்குயர்தவத்தா
னிலவுமரக்குருவாய்த்தமிழ்பனபோற்பூவையெலாங்
குலவியகோங்குமிழ்தாதிறகுளிதொளிருங்கவின்கண்டான். (உசo)

ஓங்குபுளினத்தரிகளுருக்தழித்நகரிக்கோடு
தாங்குபொலம்பூங்கடுக்கைபிறைதவழுஞ்சடைத்தேவை
வீங்கியவன்பாறெருபூதமேவரியதவமுஞற்றி
யாங்கணுயர்சாரூபமடைந்தவாபோல்வனகண்டான். (உசக)

வனமழிப்பவடைந்திடுந்தனவரவறிந்தமுன்னாகச்
சினமொடுதம்முடனேமேனைதத்திறபபதெனவிலங்கி
னினமுழுதுமொன்றேடொனறிகலியிருஞ்சமர்விளையா
வனலுறழுநெய்த்தோரகான்றுவிவிளிவனகண்டான். (உசஉ)

வேறு.

இவ்வகைவளங்கணேக்கிவனம்புகுமெல்லேயேழு
பௌவமென்றயிர்க்குநதானைப்படைரொலிகேட்டலோடு
மௌவியவேடராகியணங்கியசிநதுமேதன்
றெவ்வடுதிறன்மாமேதனிருவருஞ்சீறறங்கொண்டார் (உசங)

நம்முடைவனத்தஞ்சாதாநண்ணியபடைகளெல்லா
மிம்மெனமுன்னர்க்கோறுமெனத்தெழித்தெழுந்தவல்லே
தம்மினத்தவரைக்கூவத்தலைத்தலைநின்றவாண்மைத்
தெம்முனையடுவோர்வேடர்திரண்டனரொல்லைமாதோ. (உசச)

காட்டினிற்சரிக்கும்வேழக்கணங்கள்கண்டனையர்தோற்றத்
தீட்டுவன்புலியேறன்னபாய்த்தளரொதிரொன்றினறி
மாட்டுதறறிறததிற்சிங்கவலியினரெவர்க்குமுட்கு
மூட்டுறும்வெகுளித்தீயான்மூரியஞ்சரபமனனார். (உசரு)

விளைத்திடும்வேட்டைதண்டாவிளையினுன்மடங்கலுனுங்
களிற்றுடற்புலாலும்வெங்கைக்காழ்படுநிணமுநீருங்
குளித்தொளிர்வேலும்வாளுங்கோல்களும்வளையுந்தண்டுந்
திளைத்தகையினராய்முன்னர்ச்சென்றனாசெருவின்மூண்டார். (உசசு)

சிலையினைநோக்கினர்கடெரிகணைநோக்கினர்கண்
மலையெனத்திரண்டதிண்டோள்புடைத்துவாய்மடித்துத்தின்று
ரலர்முகவுரோமங்கையிற்றிருகினாமுறக்கண்சேந்தார்
கொலைமுகக்கூற்றமென்னக்கொம்மெனத்துள்ளிப்பாய்ந்தார். (உசஎ)

துடியினமார்ப்பக்காலிற்றெடுகழலார்ப்பவானி
னிடியெனவுலம்பியார்த்தாரெழுமொலிகேட்டலோடுங்
கடலெனமுழக்கம்யாதுகாண்கெனமன்னன்கூற
வடுவறுமொற்றரோடிவந்தனர்புளிஞரென்றார். (உசஅ)

வனப்பினிறசிறந்தபெண்மைவடிவுளதொருவனுள்ளா
னெனப்பிறபலவுஞ்சொல்லுமேல்லையிலலியாந்தண்ட
னைப்பொலிநடையோசிங்கத்தணிநடையோவென்றுள்ளத்
தனைப்படைமன்னன்முன்னர்க்கடிதுவந்தடைந்தான்மன்றே. (உ௫௮)

மன்னனைக்கண்டலோடும்வன்னியிறபஞ்சிட்டென்னக்
கொன்னும்வாய்முனிவன்சாபந்தீர்ந்துமுன்னுருவங்கொண்டான்
றன்னிகர்சிந்துமேதன்றானுந்தொல்லுருவம்பெற்றான்
பொன்னவிரொளிஞனும்புந்தியின்மகிழ்ச்சிபூத்தான். (உ௫௯)

அவரொடுமளவளாவியணிநகர்க்காஞ்சிபுக்குக்
கவலைதீர்கருப்பத்தானவதியெனுங்காளிதன்னைத்
தவலருவிதிபிறபூசைதவடருநதனிவாள்கைக்கொண்
டிவறிநின்றுயிராப்பினாகரும்பூதமுன்னெதிர்சலோடும். (உ௬0)

அஞ்சியப்பூதம்யான்வாழ்வரைபயினிலடைநதிடவென்னை
நஞ்செனவழனறுகோறனனறுகொணினக்கென்றோத
வெஞ்சலில்வையமெல்லாம்யானரசளிக்குங்காலை
வஞ்சநின்னனையோர்க்கெங்கண்வாழவிடமெனவப்பூதம். (உ௬௧)

மாயிருந்திறலோயன்னதாகமானுடமாண்டொனறற
காயிரம்பலிதாவெனனப்பத்தநூறவைாயீவ
னீயவைகோடிமறநீடுயிரலைகதியாயிற
காயெரிவாளினீர்வல்காணடியென்றுறுத்துநீக்கி. (உ௬௨)

மூரிதிரைசுருட்டுந்தெண்ணீர்முருகவிழ்தழ்பழுக்கி
யெரிபவிர்த்தனையசெங்கேழிணர்விரிமாவினமலந
தரியயன்பாசிக்கணுவண்ணலைப்பூசையாறறி
புரியபேரின்பவெள்ளமூறமெழதொழுதுபோந்து. (உ௬௩)

செவ்விசேர்காமக்கோட்டத்திருத்தலம்புகுந்துகண்டோ
ரௌவியமிரிக்கும்பஞ்சதீர்த்தநீராடியாங்குச்
சொவ்வைவாயுமையைப்போற்றிக்கோமளையருளால்யாரு
மிவ்வெனவறியாமேன்மையெழில்சறச்சாலைகண்டான. (உ௬௪)

மங்கலநகர்முன்போலவளம்பெறக்காணபான்முன்னர்ச்
சங்கரிவளர்த்தநாலெண்டருமசாலைகளும்பொன்றற
பொங்கொளிமணியாறசெய்துபுதுக்குபின்னர்மாசித்
திங்கள்சேர்மகத்திற்கம்பநதிருநகர்நாப்பணட்டான. (உ௬௫)

நூல்வழிவீதிபோக்கிநொச்சிவிண்ணுரிஞ்சக்கண்டு
மேல்வளருலகநாணமேதகுநகரமாக்கி
நால்வகைவருணந்தோறுநான்குமூவாயிரத்த
சால்புறுகுடிகளேற்றித்தாபித்தாளபிறவுமன்றே. (உ௬௬)

திருவநீணகரினாட்டுந்தேசிகக்கொடிகளோங்கித்
அருவனூர்பிணித்துச்சுற்றுஞ்சூத்திரந்தட்பக்கொட்கு
முருவவான்கோளுநாளுமசைவறவும்பர்நிற்பப்
பெருநகர்பபுதுமைநோக்கும்பெட்பொடுநின்றன்மான. (௨௬௭)

பாங்கரினுலவுந்தோறும்பதாகையினுதியைமேல்கொண
டோங்கியகிரணம்பறறக்கீழுறுகிரணமூலந்
தாங்கவிணைசுடர்களுபபட்டயங்குவகமழையிறகோத்துத்
தூங்கியகயிற்றினேறும்பொருநர்களிணையுமாதோ. (௨௬௮)

கொடியலைநதெறியுங்காற்றுற்கொட்புறுவளியாதாரக்
கடிபடுநாகநாடுகம்பியாநிற்குநதோறறம்
வடிவினிற்சிறநதகாஞ்சிசிமுறவநியநாமெப
படிமிசைவதிவதெனறும்பயநதின்மெயவித்திர்ப்பதேய்க்கும். (௨௬௯)

கங்கைநீரந்திவலைதூவக்கறபகமவாசம்வீசத
திங்களுக்கதிருவழைசசென்றறவுயாநதுசெம்பொன்
பொங்குமேனிலையினமைநதாபூவையநோடும்புல்லி
யங்கண்வானமரனொன்னவருமபெறறபோகநதுயப்பார். (௨௭0)

கரிசறுகம்பையாடிசகற்பசக்காவுளாடி
வருபெருநதேவர்மாநதரவேறறுமையறியமாட்டார்
சுராகடம்பிருக்கையென்றுமாநதராருபூமாடஞ்சேர்வார்
நரர்கடம்பிடமென்றுமபர்நயநதுறைமாடஞ்சேர்வார். (௨௭௧)

நகருடைவளப்புநோக்கநாடியோரயநதுவெட்ட
தகவுறவளிக்குமாவினறவிமுதல்றையவபாத
மகனுறுமனபிறபோறறமுனனிவோவறியோநாளும
புகழ்பெறுமுருர்தனுகிபபுலயராநகளையுநதோறறம. (௨௭௨)

கணங்கொளுங்கறபநாட்டுக்கனனியர்குழலிற்காலுசி
யணங்கரூகூநதலூட்டுமகிரபுகைநிவநதுசூழ்ந்து
மணங்கமழ்கினறநீர்மைமதிததிடாரியற்றைவாச
மிணங்கியதெனறனளோாயேத்துவரறியவல்லார். (௨௭௩)

வேள்வியினுணணப்புக்கவேநதுசனமீட்சிநோக்கி
வாழுவதோகொடுப்போர்கையினவண்மையைக்கவரநன்கு
சூழ்வதோவறிதறேறரேஞ்சுடர்மணிசசிகரம்விண்ணம
போழ்வளம்படைததமாடடபொருப்பினிறறவழுமேகம். (௨௭௪)

மூலையெலாங்கிள்ளுக்கொள்ளமொய்குழனமடவாரில்லை
தலையெலாம்புலவிமாதர்தாள்படாக்கொழுநரில்லை
கலையெலாங்கறறுவல்லாககவிபடிபுலவரில்லை
சிலையெலாநதுவளவெய்யாத்திறலபடுவீரரில்லை. (௨௭௫)

மின்னுருகனகமேருமீமிசைக்கொடியைநாட்டி
மன்னனுலகமெல்லாமலரடிப்படுத்துநீடும்
பொன்னுலகிறைவன்றனேபுதுக்கினானென்னிலந்தக்
கொன்னுடைநகரின்காமர்கூறலாம்படியதேயோ. (௨௭௬)

இமையவர்துயின்றானுமெழின்மணிமுரசந்துஞ்சா
வமைவுடைக்காஞ்சிவைப்பினரும்பெறற்காமநோக்கி
னுமையொடுங்கம்பவாணர்க்கொலிவிழாநடாத்திப்பாரின்
சுமைபொறுத்தினிதுவாழ்ந்தான்றொடிகழற்கலிகாலசோழன். (௨௭௭)

அன்றியுராவிவல்லேயழிதகமுறுவல்கோட்டி
வென்றிகொண்டுலகங்காக்கும்விறற்கலிகாலனந்நாண்
மன்றலங்காஞ்சிமூதூர்மத்தியினாட்டுந்தூணை
யின்றுமெவ்வுலகுங்கச்சிக்கல்லெனவிசைக்குமாலோ. (௨௭௮)

இருவினைப்பிறவிமுற்றுமிரிதரருள்கொழித்துமுத்தப்
பெருநலமினிதுநல்கும்பிரமாண்டபுராணந்தன்னின்
மருமலர்ப்பொகுட்டுவாழ்க்கைவானவன்சனற்குமாரற்
கருளியகாதைமற்றிங்கறைந்தனம்பிறவுஞ்சொல்வாம். (௨௭௯)

நகரேற்றுப்படலமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௧௦௭௯.

---

## தீர்த்தவிசேடப்படலம்.

உரையில்காஞ்சிநகர்வயிற்றரங்கமொண்மணிநித்திலக்குவையும்
வரிவளைத்திரளும்பவளநீள்கொடியுமாழையுந்திரைத்துயலொதுக்கும்
விரைகமழ்தீர்த்தமெண்ணிலவவற்றுண்மேம்படச்சிறந்தமுன்றளவாற்
புரைசபுமவற்றின்வளஞ்செழுமேன்மைமுறையுளிப்புகன்றிடப்படுமால்.

வண்டடைகிடந்துசெவ்வழிபாடுமதுமலர்ப்பொகுட்டுவீற்றிருக்குங்
குண்டிகைக்கரத்தோனமகவினைமுடித்துக்குளிர்புனலாடுவானவிளிப்ப
வண்டரும்வியப்பவளப்பருந்தீர்த்தமனைத்துநம்வந்திறுத்தகாரணத்தாற்
றெண்டிரைவரைப்பின்மேம்படுசிறப்பிறழ்ந்ததுசாறுவதீர்த்தம். (௨)

அத்தகுதிருத்தத்தீம்புனன்மகஞ்செயந்தத்தினுமுறுந்தவத்தோர்
சத்தியவுலகிற்சார்ந்துதண்மலரோன்கற்பம்வாழ்ந்திருப்பர்களயின்றோர்
பத்திசெய்குரவன்மனைபிறர்மனையைப்பற்றினோர்தந்தையைக்குருவை
மெய்த்தநட்போரைப்பிழைத்தவரிவருமாடுறின்வினைகடிந்துய்வார். (௩)

இறந்தவர்க்கான்றுச்செழும்புனல்விறைப்பிற்பிதிர்க்குலமின்பமீக்கொள்ளு
மறந்திகழ்வியமங்கழ்த்தினோன்றனந்தமாகுமிப்பெருந்தகுதடத்தின்
மறந்தபுமுனிவர்கடவுளர்மனிதர்யாவருமாசிமாமதியில்
சிறந்துசென்றெறிநீர்குடைந்தறத்தருமதுமேதகுமிருக்கையிற்சேர்வார். (௪)

கும்பமாமதியின் வைகறையணைந்திக்குளிர்புனல்விதியுளித்தோய்ந்து, பம்புநான்மறையோர்க்கேன்றனபசும்பொன்பத்தியினளித்தொருமாவிற், கம்பனைத்தொழுவோர்புனல்படிந்ததனாற்கரிசெலாமிரியமாதவராய்ச், செம்பொனன்கொடையார்செல்வராய்க்கம்பர்தெரிசனத்தூற்கதியடைவார்.

வீங்குநீர்ப்புவியினீண்டவான்பரப்பின்மேதகுந்துறக்கநாட்டகத்தி
னீங்கிதற்கிணையார்தீர்த்தமொன்றேனுமின்மையால்யாவரும்புகழ்ச்ச
வோங்கியதீர்த்தராசநற்பெயரான்விளங்குமிவ்வொண்புனல்படிந்தோர்
தீங்குதீர்ந்துயர்ந்தகதிபெறுங்கதையுஞ்சிலவெடுத்தறிதவாபுகல்வாம். (௬)

வேறு.

உலகினிற்கொடுங்கோலெலாமொருபுடையொதுக்கி
நிலவுவெண்குடைக்குளிர்நிழறிசைதொறநிரப்பிக்
குலவிவீற்றிருந்தரசுசெய்மனுகுலத்துதித்த
தலைமைபூண்டுயர்பார்த்திபன்ருன்மிகனென்பான். (௭)

விளிந்ததன்னுடைத்தாதைவெம்பசியினீர்நசையி
னுழந்துயாவுஞ்செயலறிந்ததுவிளைந்தொழிப்பா
னளிந்ததீம்பழத்தேறல்வார்ந்தளியினமுரலுங்
குளிர்ந்தபூம்பொழிலுடுத்தசீர்க்காஞ்சியைக்குறுகி. (௮)

வள்ளவாய்ச்செழுங்கமலத்துவண்டுபொண்மிழற்றுந்
தெள்ளுதீம்புனலத்திருச்சருவதீர்த்தத்தி
னுள்ளுமாதவர்க்கமிழ்தெனவுளத்திருந்துணர்த்துந
துள்ளுமான்மறிக்கையினார்த்தொழுதுநீராடி. (௯)

சந்திமுற்றுறப்புரிந்துதன்றாதையைக்குறித்துக்
கந்தநீர்க்கடன்முதலியபிதிர்க்குலங்களிப்ப
வந்திலாற்றியந்தணர்தமக்கருநிதியார்த்திக்
கொந்துலாமலர்மாவடிக்குழகனைவணங்கி. (௧௦)

தடாதபேரொளித்தாமரைநாயகன்றடந்தேர்
வடாதுமாதிரமணுகியகாலமாசொன்று
மடாதவோரையுநாளுமுற்றமைந்தனநாளிற்
கெடாதமெய்த்தவமுனிவரர்கிளந்திடும்வழியான். (௧௧)

மருவினார்தமக்கிருண்மலக்குறும்பெலாமடித்துக்
கருணைகூர்மனுவீச்சரப்பெயரினாற்கடுக்கைக்
குருநிலாமலர்த்தொங்கலானருட்குறிநிறுவித்
தெருளுமாகமமுறையுளிப்பூசைசெய்திருந்தான். (௧௨)

தனையனின்னணம்வழிபடுந்தவறிலாப்பயத்தா
லினையுநோயுழந்தாற்றருந்தாதையெத்துயருந்
துனையநீத்துமும்மலத்தொடுதொல்லையேசூழ்ந்த
வினையுமாற்றினன்மெய்யருளினைத்தலைப்பட்டான். (௧௩)

ஆயகாலையந்தரத்தொருமொழிநிலையளித்த
தூயதாதைநற்சதியினைத்துயரொலாநதுமித்து
மேயினனெனவெழுதலும்வெற்றிவேலரச
னேயதன்பரிவொழிந்தனனின்பமீக்கூர்ந்தான். (௧௪)

மீட்டுமண்ணலார்பூசனைமேதகவாற்றி
மோட்டுநீர்ப்புவிமுழுவதும்புரந்தபின்றூனுங்
காட்டினுடகநடித்தருள்கம்பர்பேரருளா
லீட்டுருஞ்சிவவீட்டினையிறுதியிலடைந்தான். (௧௫)

அமரரச்சுறவயிற்படைவிதிர்த்துமூவுலகுங்
குமரிவெண்குடைநிழல்செயக்குலவிவீற்றிருந்த
தழுஞியபபெயர்த்தானவனுயிர்சதிபுதனய
னிமிரபெருமபுகழமாணடகநிகழ்பிரகலாதன். (௧௬)

நந்தையாருயிர்விரகினுனொடியினிற்குடிந்து
வந்துமுற்றியகொலைப்பழிமாற்றுகெனமுனைக்குரும
பைந்தண்மாலிகைத்துளவினுன்றனனுெடும்படர்ந
நந்துமுததுயிர்நறும்பணைக்காஞ்சியைநணணி. (௧௭)

கண்டகாலையேகாழ்படும்வல்வினைதொடர்கு
வின்டுபோதரும்விரைகுலாஞ்சாறுவதீர்த்தத்
தெண்டிரைப்புனலாடினுன்றெனபுலத்தவர்க்கு
மண்டுமென்பிறுறசெய்கடன்மரபுளிவகுததான். (௧௮)

மருட்சிமிழ்ப்பறவரமருளிரணியீச்சரப்பே
ரருட்சிவக்குறியிருவினைஞற்றினன்பூசை
தெருட்சிவக்கதிதநதையைச்செலுததினனறூம்
வெருட்சிதந்தவன்கொலைப்பழிவீட்டிமேதக்கான். (௧௯)

வேறு.

கழுதொடுகொட்டிடைநடிக்குங்கண்ணுதற்
றொழுதெரிவளர்த்துளததூய்மைமேம்படும்
விழுமறைக்குலத்தினிற்பிறந்தொர்வேதியன
பழுதறுபாதகக்ருழிசியாயினுன். (௨0)

முத்தவிர்முறுவலுமுலையுங்காண்டொறும்
பித்தினுய்மதப்பிலிற்றித்தாதுகுந்
தொத்தலர்மலர்தொறுந்துன்னும்வண்டுபோன்
மெய்ததசிர்ப்பிறர்மனைவிழைந்துமேவுநாள். (௨௧)

தசவுறம்பிறர்க்குரித்தையன்மாரினை
முகிழ்முலைத்தடத்திடைமுயங்கிச்செல்லுறு
மிகவருந்தவற்றினையேயிஞநீருடை
யகலிடம்புரக்கும்வேலரசன்கேட்டனன். (௨௨)

கேட்டலும்வெள்ளொளிகிளரநக்குமென்
றோட்டலர்த்ராமனைசுடர்ந்துசேநதென
நாட்டமிச்செரியுகநயர்ந்ததன்னிரு
மாட்டமருளையயனைவல்லையேவியே. (உ௩)

வளமருல்வயல்களுமணிபெய்பேழையுங்
களமருங்கனகமுங்காமர்பொன்மனை
யுளமருவியவெலாவுறப்புங்கவ்விக்கொண்
டளமருமாறுறுதகற்றினனரோ. (உ௪)

நலம்படுவாழ்க்கைநல்லறிவுதனமனத்
திலம்படுமாறுபோலிலம்பட்டேங்கினன்
புலம்படுமாயிடைததணந்துபுன்புலைக்
குலம்படுமொருத்திதன்கொங்கைதோய்ந்தனன். (உ௫)

சுந்தரமகளிர்தோடோயுமுந்தைநாட்
புந்திநீண்டவும்பொருப்புலையைபபுல்கலா
லுந்துமுழ்வினைமறைத்நருத்தமூர்விடை
யர்தனன்விரகையாராளககவல்லரே. (உ௬)

நவையழுக்குடைநணிநாறமெய்யெலாங்
குவைநிணப்புலான்முடைகொழிக்குமாதினைச்
சுவையமிழ்தினுமிகத்துய்த்துச்சான்றவ
ரவைநகஸமந்தனாயளித்துவாழுநாள். (உ௭)

பாவமிச்சுயர்தலாறபஞ்சிற்றீங்கர்
வீவருநோயினன்மெலியமைந்தருங்
காவியங்கண்ணியுங்கருத்துவேறுபட்
டோவியவன்பினுலோம்பலோம்பினர். (உ௮)

அருளியும்வெருண்டுநோயறுத்துடங்குநின்
றொருவருநதுணைவராயுய்த்தளிப்பவ
ரிருவருமறிகலாவிறைவரேயலான்
மருவியமைநதருமனையுமல்லரே. (உ௯)

செல்வனேயுழந்தினிச்செய்வதென்னெனு
மல்லலிற்கவலைகொண்டங்கணீங்கினன்
கொல்லருங்கொடும்பிணிப்பசியைக்கொல்லிய
வெல்லையில்பதிதொறுமிரந்துசெல்லுவான். (௩0)

மறியுனற்றடந்தொறுமெழுந்தவாளைமீன்
செறிமலர்ப்பொழிற்சினையலைப்பச்சிந்திய
நறைகமழ்காஞ்சியைநெறியினண்ணினு
விறுதியுமாங்கவற்கிறுத்ததாகலும். (௩௧)

தொன்றுதான்செய்வினைத்தொடர்பினாற்கொலோ
வன்றியேதன்குலத்தந்தணாளர்க
ளன்றுசெயறவினைநலத்தினாற்கொலோ
சென்றனன்சாருவதீர்த்தப்பாங்கரின். (௩௨)

முறுகியநீர்நசைமுருக்கநாவெலாம்
வறலவததிருத்தடத்திறங்கிவார்புன
னிறையவாய்மடுத்துநீள்களையிறபோகவட்
பொறையுடறபாதசப்புக்கினீங்கினான். (௩௩)

இழித்தருகரியவுமிலங்குமேருவி
னாழிததலைப்படிஞெளிவிளங்கும்பொன்னிறங்
கொழித்திடுமாறுபோற்குலவுமர்தடஞ்
செழிததநீர்மேன்மையாற்றேவனாயினான். (௩௪)

பண்ணவர்நயமொழிபகரத்தெய்வத
விண்ணிழிவிமானமேல்கொண்டுவிண்மிசை
யண்ணலமுலகெலாமழநதநோக்குபு
கண்ணுதலுலகினைக்கைக்கொண்டானரோ. (௩௫)

வேறு.

தக்கதொல்புகழயோத்தியிற்றனிக்குடைநிழற்று
மிக்குவாகுவின்மரபுளானிரணியநாபன்
றெருக்கதானவர்செருக்கடந்திந்திரன்றுணையாத்
திக்கெலாந்தொழதிண்புவிபுரநதுவாழ்நாளில். (௩௬)

அன்னவன்மனைக்கிழத்தியரிருவருளன்னக்
கன்னிமென்னடைக்கலாவதிகலாதரற்பயநதா
ணன்மகப்பெறுநவில்பதுமாவதிமாழ்கிப்
பன்னுமாற்றவள்பழிப்புரையமுதமுதுரைத்தாள், (௩௭)

கேட்டமன்னவனின்மொழிகிளர்ந்துநன்கருளிக்
கோட்டமின்றிவாழ்காலையிற்கற்பகக்கொழும்பூந்
தோட்டலங்கலந்தோளிறைவிளிப்பவண்கனக
நாட்டடைந்தனனவுணரைநாமறச்செகுத்தான. (௩௮)

வாகைநல்கியகோன்றனைமார்புறத்தழுவி
யோகையால்வரங்கொள்கெனவினவியொண்சிறைய
தோகைநேர்பதுமாவதிமகப்பெறுதோற்ற
நாகர்கோன்றரப்பெற்றனன்விடைகொடுநடந்தான். (௩௯)

வேறு.

விண்ணினின்றிழியும்வேந்தன்மேவருநெறிக்கண்மாந்தர்
கண்ணிணைக்கடங்காச்செங்கேழ்க்கதிரொளிப்பரிதித்திண்டேர்ப்
பண்ணமைபுரவிநான்கும்பாகனைநோக்கியேயே
திண்ணியகுறங்கிலானென்றவமதிசெய்துநக்கான். (௪௦)

